யோகாசாரர் என்னும் புத்த வகுப்பினர் எல்லாம் உணர்வதற்குக் காரணமாகிய அறிவு உண்மையில் இல்லை யென்பது தவறென்றும், தோன்றுகின்ற வெளி உலகம் உள்ளத்தின் கற்பனையாமென்றுங் கூறுகின்றார்கள். இன்னொரு சாரார் அறிவுபோல வெளி உலகமும் உண்மையில் உள்ளதே எனினும், வெளியுலகம் நேரே பார்க்கப்படுவ தல்ல என்பர். வெளியுலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளும், நமது அறிவில் தட்டி தன்னுடைய நினைவை அறிவின்கண் அமைத்துவிட்டு மறைந்து விடுகிறதென்றும், அறிவில் அமைந்து கிடக்கும் அதன் படமே நேரே அறியப் படுகிறதென்றும் கூறுகின்றார்கள். இவர்கள் வெளியுலகம் மண், புனல், அனல், காற்று என்னும் நால்வகை அணுக்களாலாயது என்ற கொள்கையுடையவர்கள். இன்னொரு சாரார் வெளியுலகமே நேரே பார்க்கப்படுகின்றதென்ற கொள்கையுடையவர்கள்.

இதுகாறுங் கூறியவாற்றால் நான்கு பூதங்கள் மாத்திரம் உண்டென்று கூறுகின்ற உலோகாயதர்களைப் பார்க்கிலும் அறிவு உண்டென்று கொண்ட புத்தர் ஒருபடி மேற்சென்றவர்கள். ஆனால் அவ்வறிவினை யுடைய ஓர் உயிர் உண்டென்று அவர்கள் தெளிவாகக் காணவில்லை. அறிவென்பது பலபொருளையும் உணரும் உயிரினது ஆற்றல் என்பதனை அவர்கள் அறிந்திலர். ஆனால் சமணர்கள் ஐம்பூதங்கள் உளவென்றும் அவற்றிற்கு வேறு உயிரென்பது உண்டென்றும் நம்பினார்கள். எனினும் உலகத்தைப் படைக்கின்ற கடவுள் ஒருவர் உண்டென்று அவர்கள் கொள்ளவில்லை. உயிர்களுள் முதன்முதல் நற்கதி எய்திய

ஓர் ஆன்மாவையே கடவுள் என்றனர். வெளியுலகம் அணுக்களாலாயது என்ற கொள்கை அவர்களுக்கு ஒப்பானதே. நன்முயற்சியினாலே பிறவியற்றபின் உயிரானது வானில் அமர்ந்திருக்கும் என்றும் அல்லது வானில் மேல் நோக்கிச் செல்லும் என்றும் அவர்கள் கருதினார்கள். சமணர்கள் பொருள்களை உளவென்றும் இலவென்றும் சொல்லொணாதென்றும் உடன்பாட்டையும் எதிர்மறையையும் இயைத்து முரண்படக் கூறும் அநேகாந்தவாதமென்னும் கொள்கையைச் சிறப்பாக உடையவர்கள்.

இதுவரை கூறிய மதங்கள் புறப்புறத்தின் பாலதாகும். புறச்சமயங்கள் வைதிகப் பக்கத்தைச் சார்ந்தன. அவற்றுள் மீமாம்சமதமானது வேதம் அநாதியென்றும் அதில் விதித்தனவே உண்மையென்றும் கூறும் கொள்கையுடையது. வேதத்தின் விதிவாக்கியங்களின் வைத்து உயிரும் உலகமும் உள் பொருளே என்று மீமாம்சகர் கருதுவாராயினர். வைசேடிகம், நியாயம் என்பன கடவுள் உண்டென்று கொண்ட மதங்கள். ஆனால் அணுத்தன்மையுடைய மனத்தின் சம்பந்தமில்லாமல் ஆன்மாவிற்கு அறிவில்லை என்பது அவைகளின் கருத்து. மனமானது ஒடுங்கிய விடத்து ஆன்மா இன்பத் துன்ப வுணர்ச்சியின்றிக் கல்லைப்போலக் கிடப்பதே முத்தி என்ற கொள்கையும் இவற்றிற் காணப்படும். உலகம் அணுக்களாலாயது என்ற கொள்கை இம்மதங்களுக்குப் பொதுவானதே. பரமாணுக்கள் இவ்விரண்டாகச் செல்லுகின்றன வென்பதும் அணுக்களின் இயக்கம் கடவுளால் நிகழ்கின்றதென்பதும் அவைகளின் சிறப்புக் கொள்கையாகும்.

இனி, கபிலரால் செய்யப்பட்ட சாங்கிய நூலானது உலக அமைப்பை மேற்கூறிய மதங்களைப்பார்க்கிலும் நுட்பமாக ஆராய்ச்சி செய்து முடிவு கட்டியுள்ளது. சடப்பொருள் யாவும் ஆகாயத்தின் றன்மை அடைந்தபொழுது தோற்றமும் பழுவும் இல்லாதன வாகின்றன. ஆகாயத்தின் நுட்பமும் ஏனைப் பூதங்களின் நுட்பமும் தன்மாத்திரைகள்; அவைகள் தாமச, அகங்கார மென்னும் நுண்ணிய சடப்பகுதியினின்றும் வந்தவைகள். தொழில் செய்தற்கேதுவாகிய சடப்பகுதிகள் கன்மேந்திரியங்கள் இராசத அகங்காரத்தினின்றும் வந்தவைகள். ஐம்பொறிகட்கு மூலமாகிய சடப்பகுதியும் மனமும் சாத்துவீக அகங்காரத்தினின்றும் வந்தவை. மூவகை அகங்காரமும் மூவகைக் குணதத்துவத்தினின்றும் வந்தவை. இக் குணதத்துவம் மூலப் பிரகிருதி என்னும் சடப்பகுதியினின்றும் வந்தது. ஆதலால் சடமாகிய உலகத்திற்குக் காரணம் மூலப்பிரகிருதி என்பது சாங்கியக் கொள்கையாகும். அவர்கள் கருத்தின்படி, ஆன்மா அறிவு மாத்திரையாய் விளங்குவதென்றும் மூலப் பிரகிருதியின் தொடர்பினாலேயே இன்பத் துன்பங்களை நுகர்கின்றதென்றும் மூலப் பிரகிருதியின் வேறாக நிற்கும் தன்னியல்பை அது உணர்வதே முத்தியென்றும் கொள்ளப்படும். சாங்கிய நூலிற் கூறிய கருத்துக்களைத் தழுவி, உயிர்களுக்கு அறிவை விளக்குகின்ற கடவுள் ஒருவர் உண்டென்ற கொள்கையை நிலை நாட்டுவது யோகமதமாகும். இதற்குரிய நூலியற்றியவர் பதஞ்சலி முனிவர். யோகமதத்தைப் பற்றிய யோக சூத்திரமானது எட்டுவகை யோகத்தையும் விரித்துக் கூறி அவற்றை

நன்கு பழகுவதால் முத்தி யடையலாமென்று மொழி கின்றது.

புறப்புறச் சமயங்களும், புறச்சமயங்களும் சட உலகத்தை ஆராய்ந்து பார்த்ததில் அதற்கு மூலம் பிரகிருதி தத்துவமென்பதே முடிவாயிற்று. ஆன்மா உண்டென்பது சமண சமயத்திற்கும், வைதிக சமயங்களுக்கும் பொதுவான கொள்கையாகும். புறச்சமயங்களுள் தருக்க நியாய மதங்களும் யோகமதமுமே கடவுள் உண்டென்று கூறுவன. ஆனால் அவைகளில் கடவுள் உலகத்தோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலை தெளிவாகக் கூறப்படவில்லை. தருக்கயோக மதங்களே மாத்துவாச்சாரியார் கொள்கைக்கு அடிப்படையானவை.

இனி, வைதிக மதங்களுள் பெரும்பான்மையாக இக் காலத்து வழங்கும் ஏகான்மவாதம் ஆராயற்பாலது. ஏகான்மவாதத்திற்கு நூல் செய்தவர் வியாசர் என்று ஆசிரியர் சிவஞானசுவாமிகளால் சொல்லப்பட்டுள்ளது. அக்கொள்கையை இப்பொழுது நன்கு விளக்கும் நூல் சங்கரபாடியமாம். சங்கராசாரியாரது கொள்கை புத்தருள் யோகாசாரரது மதத்தையும், சாங்கிய யோக நூல்களின் கருத்துக்களையும் தழுவி ஏற்பட்டதாகத் தெரிகின்றது. யோகாசார மதமே வெளி உலகம் உண்மையில் இல்லை யென்றும் அது எண்ணத்தின் தோற்றமே யென்றும் முதலிற் கூறியது. சாங்கியமதம் ஆன்மா கட்டில்லாத தென்றும், போக்குவரவு அற்றதென்றும, பிரகிருதியின் சம்பந்தத்தினாலேயே இன்பத் துன்பங்களை நுகர்கின்ற தென்றும் பகர்ந்தது. யோக சமயம் அறிவிற்கு மூலமாகிய இறைவன் உண்டென்று

கூறும். ஏகான்மவாதிகள் உலகம் மித்தையென்று கொண்டு சாங்கியர் கூறும் ஆன்மாவும், யோக சூத்திரத்திற் கூறிய கடவுளும் ஒன்றேயெனக் கொண்டனர். ஆன்மா பலவாதலா னும் கடவுள் ஒருவராதலானும், ஆன்மாவும் கடவுளும் ஒன் றென்ற கொள்கையை நிலைநாட்டும் பொருட்டுப் பொருள் ஒன்றேயெனவும், அதன் பலவகைத்தோற்றங்களே ஆன்மா எனவும் கூறிச் சாங்கியயோகக் கொள்கைகளை ஒன்றாக்கினர். ஆனால் இறைவனது பல்வகைத் தோற்றத்திற்குக் காரணம் கூறவேண்டியிருத்தலால் பிரகிருதியாகிய மாயையின் சம்பந் தத்தால் கடவுள் பல்வகைப்பட்ட ஆன்மா ஆயினர் என்ற கொள்கையை ஏற்படுத்தினர். மாயையென்பது சித்துப் பொருளா, சடப்பொருளா என்று கேட்டால் அதற்குத்தக்க விடை கிடையாது. மாயையைச் சித்து என்றால் அதுகடவு ளின் பகுதியாக முடியும். அதைச் சடமென்றால் சித்தாகிய கடவுளோடு அதற்குச் சம்பந்தம் எப்படி ஏற்பட்டதென்ற கேள்வி எழும். ஆதலால் அது இன்னதென்று சொல்ல முடியாதென்று (அநிர்வசனியம்) ஏகான்மவாதிகள் கூறுவா ராயினர்.

மேலும் மாயை என்ற ஒரு பொருள் உண்டென்று கொண்டால் கடவுள் ஒரு பொருள், மாயை ஒரு பொருள் என்று இரண்டு பொருள் கொள்ள வேண்டிவரும். அது ஒரே பொருள்தான் உண்மையில் உண்டு என்று கூறும் தங் கள் கொள்கைக்கு விரோதமாகும். ஒரே பொருள்தான் உண்டென்று கொள்வானேனென்றால், அது வேதத்துட் போந்த ஏகம், அத்துவிதம் என்ற இரண்டு சொற்களையும் ஒரே பொருள் உணர்த்துவதாகக் கொண்டமையால் வந்த

குற்றமாகும். ஏகம் என்றால் ஒன்று என்று பொருள், அத்துவிதம் என்றால் இரண்டல்லாத என்று பொருள். ஆகவே இரண்டு சொற்களும் வெவ்வேறு பொருளுடையன. அங்ஙனமாயின் இருசொற்களும் ஒரு பொருளுடையனவென்று கொள்வதற்குக் காரணம் யாதெனில் இரண்டில்லாமல் ஒன்றே என்ற இன்னொரு வாக்கியத்தின் பொருள் உணராமையேயாகும். இந்த வேதவாக்கியத்தின் பொருள் என்னவென்றால் கடவுள் இருவர் அல்ல, ஒருவர் என்பது. கடவுள் உலகத்தோடு அத்துவிதமாயிருக்கின்றாரென்றால் அவர் உலகத்தோடு இரண்டறக் கலந்து அதனை நடத்துகிறாரென்பதே கருத்து. அதற்கு அவ்வாறு பொருள் கொள்ளாமல் கடவுளே உலகமாயிருக்கிறாரென்று ஏகான்மவாதிகள் கொண்டனர்.

மாயை யென்பது வேறென்று கொண்டால் இரண்டு பொருளாமாதலினாலே கடவுள் மாயை வழியாகப் பிரதிபலிப்பதே உலகம் என்று கூறாமல், பால் தயிராவது போலக் கடவுள் உலகமானார் என்று ஏகான்மவாதிகளுள் ஒருசாரார் கூறுவாராயினர். அங்ஙனம் கடவுள் தான் உலகமானதை அறியாமையினாலே அவர்க்குப் பந்தம் ஏற்பட்டது. அவ்வறியாமை நீங்குவதே முத்தியடைதலாம் என்பதும் அவரது கொள்கை. கடவுள் உலகம் ஆனார் என்ற கொள்கை வைணவக் கொள்கையிலும், அகப்புறச் சமயங்களாகிய வாமம், வைரவ முதலிய சிலசமயக் கொள்கைகளிலும் கலந்துள்ளது. கடவுள் விளையாட்டாக (லீலையால்) உலகமானாரென்று ஏகான்மவாதிகளுள் இன்னொருசாரார் கூறுவர். கடவுள், உலகம் தோன்றுவதற்கு மூலகாரண

மாகிய நாததத்துவமே என்பாரும் ஒருவகையினராவர். ஏகான்மவாதிகள் நான்குவகையர். கடவுள் மாயையில் பிரதிபலிக்கிறாரென்று சொல்லுகிறவர்கள் மாயாவாதிகள். அவர் உலகமானார் என்று சொல்லுகிறவர்கள் பாற்கரியவாதிகள். அவர் லீலையால் அங்ஙனமாயினர் என்பவர் கிரீடப்பிரம வாதிகள். இறுதியில் நின்றவர் சத்தப்பிரமவாதிகள்.

இனி, பாஞ்சராத்திரி என்று சொல்லப்படும் வைணவர்கள் சாங்கியரைப்போலவே இருபத்துநான்கு தத்துவங்கள் சடவுலகத்திற்குக் காரணமென்று சொள்ளுகின்றார்கள். ஆனால் பாற்கரிய வாதிகள் கூறுகின்றபடி, சித்தும் சடமும் ஆகியஉலகம் யாவும் கடவுளின் பரிணாமமே என்ற கொள்கை அவர்களது முக்கிய கருத்தாகும். கிறிஸ்தவ, மகமதியமதங்களும் ஆன்மாவும் கடவுளும் ஒன்றென்ற கொள்கையை யுடையனவாகலின் அவைகளும் தத்துவக்கொள்கை யளவில் வைணவம் அல்லது ஏகான்மவாதத்தின் சார்பாக உள்ளனவேயாம். மாத்துவாச்சாரியரது கொள்கையும் ஆரிய சமாஜத் தலைவாரன தயானந்தசரசுவதி கொள்கையு மாத்திரமே பிறமதங்களுள், கடவுள்வேறு, ஆன்மாவேறு என்ற கருத்துடையன. ஆனால், அவை யிரண்டும் அத்துவிதக் கொள்கையுடையனவல்ல. முத்தியிலக்கணம் கூறுமிடத்து சிவாத்துவித மென்னும் அகச் சமயமும் ஏகான்மவாதச் சார்புடையதே. வியாசர் செய்த பிரம சூத்திரத்திற்குச் சைவபாடியஞ் செய்த ஸ்ரீ கண்டர் சிவாத்துவித மதத்தைச் சார்ந்தவர். ஆகவே துவிதம் கூறும் மதங்கள் தவிர, அத்துவிதம் கூறும் மதங்களுள் சைவசித்தாந்தம் ஒழிந்த பிற சமயங்கள்பலவும் ஏகான்மவாதத்துள் அடங்குகின்றன.

வைதிகச் சார்பாகிய நூல்களையும் வேதாந்த சூத்திரபாடியங் களையும் பிரமாணமாகக்கொள்ளுஞ் சமயங்கள் ஏகான்மவாத முடிபையும் ஆகமச்சார்பாகிய சமயங்கள் பெரும்பாலும் சைவசித்தாந்தத்தையும் தழுவி நிற்கின்றன.

இதுகாறும் கூறியவாற்றால் ஏகான்மவாதத்தையும் சைவசித்தாந்தக் கொள்கையையும் ஒத்துப்பார்த்தால் சமயங்கள் பலவற்றையும் ஒத்துப்பார்த்ததின் பயனுண்டாம் என்பது தெளியப்படும். முதலில் ஏகான்மவாதக் கொள்கையை உற்றுநோக்குவோமாக.

பிரமம் ஒன்றே உண்மையில் உள்ளது என்று ஏகான்மவாதிகள் கூறுகின்றார்கள். அங்ஙனமாயின் மாயை என்பது உண்டா, இல்லையா என்ற கேள்வி எழுகின்றது. அது உண்டென்று கொண்டால் முடிவான பொருள்கள் இரண்டென்று கூறவேண்டியிருக்கும். அப்போது ஒன்றுதான் உண்டென்ற கொள்கை நிலையற்றுப்போம். மாயை இல்லையென்றால் உலகம் எப்படித் தோன்றிய தென்பதற்குக் காரணம் கூறமுடியாது.

மாயையானது சித்துப்பொருளா, சடப்பொருளா, என்ற கேள்வி எழும். சித்துப்பொருளாயின் பிரமத்தின் பகுதியாக அது அமைதல் வேண்டும். அங்ஙனமாயின் எல்லாக் கேட்டிற்குங் காரணமாய்க் கட்டுப்படுத்தும் மாயையானது கடவுளின் பகுதியாக அமைகின்றது. ஆகவே கடவுளிலேதான் நன்மையுந் தீமையும் இருப்பதாக முடியும். அப்போது கடவுள் தூய முதற்பொருள் என்று கூற முடியாது. மாயை சடமென்றால் அதன்வழியாகச் சித்துப்

பொருள் எங்ஙனம் பிரதிபலித்து உயிர்களும் சடஉலகமு மாகப் பரிணமிக்கும்?

இனி மாயை யென்பதொன் றில்லையென்று கொண்டு கடவுளே அசித்தும் சித்துமாகிய உலகமாகப் பரிணமித்தார் என்று கொள்ளின் அவ் அசித்தும் சித்தும் தோன்றுவதற்கு அத்தகைய இரண்டுபகுதிகள் கடவுளிற் காணப்படுமா? கடவுளிடத்துள்ள அசித்துக்கும் சித்துக்கும் இடையில் எல்லையுண்டோ? இரண்டுங் கலந்துள்ள கடவுளைத் தூய அறிவுடைய பொருளே என்று எங்ஙனங்கொள்ளமுடியும்? இனி, அறிவுடைய உயிர்கள் உண்மையில் உள்ளனவல்ல என்று எப்படிக்கொள்ளலாம்? ஆன்மா கடவுளின் பிரதி பிம்பம் என்றால் கடவுளின் பிரதிபிம்பங்கள் அளவில்லாம லிருப்பதற்குக் காரண மென்ன? கடவுள் பிரதிபலித்தற் குத் தக்கபடி நீள அகல முடையவரா? ஆன்மாவே கடவு ளென்றால் ஆன்மாவிற்குத் தீமை எப்படிவந்தது? கடவுள் கட்டுப்பட்டதால் ஆன்மா தீமையுடைத்தாயிற் றென்றால் கடவுள் எவ்வாறு கட்டுப்பட்டார்? கடவுள் இப்படிக்கட்டுப் படுவாரென்றால் முத்தியினால் பயனென்ன? முத்தியென்பது வெறுந் தோற்றமாகவேதான் முடியுமன்றோ? மேலும் ஆன் மாக்கள் என்பது பொய்த் தோற்றமென்றால் யாருக்கு அவை பொய்த் தோற்றம்? ஆன்மாக்களாகிய நமக்கு நாமிருக்கிறதும் நம்முடைய அநுபவமுந்தானே பிற எல்லா வற்றிலும் உண்மையாக விளங்குகின்றன. உலகமென்பது நம்முடைய கருத்திலிருப்பது தவிர உண்மையில் இல்லை யென்றால் கடவுள் என்பதும் நம்முடைய கருத்தில்தானே இருக்கிறது. ஆகவே கடவுளென்பதும் பொய்யே. அப்படி

யானால் நாமிருப்பதுதான் நமக்கு உண்மையாக முடியும். ஆதலால் ஆன்மா பொய்யென்பது அறிவிற்கும் அநுபவத் திற்கும் பொருத்த மில்லாததா மன்றோ ?

சித்துஞ் சடமுமாகிய உலகமென்பது கடவுள் முன்பாக இல்லையென்றால் கடவுளுக்கு உலகத் தோற் றமும் உண்மையு மின்னவாறிருக்கும் என்று பேசுவா னேன்? இவை ஒருபுறமிருப்ப நமக்கு உண்மையில் நீங்க வேண்டியது நம்முடைய துன்பம். நம்முடைய உலக வாழ்க்கையிலுண்டாகிய துன்பங்களைப் பொய்யென்று எப்படிச் சொல்ல முடியும். அவைகளைப் பொய்யென்றால் அது அவற்றை நீக்க வழிஅறியாதார் கூறும் போலியுரை யேயாமன்றோ? ஆகவே ஏகான்மவாதக் கொள்கையானது உலகத்தின் இலக்கணத்தையும் உயிரின் இலக்கணத்தை யும் அவற்றிற்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பையும் பற்றித் தெளிவுபட யாதொன்றையும் விளக்கும் திறமுடைய தல்லவென்பதும் அதன் கருத்துக்கள் அறிவிற்குக் குழப்பம் விளைப்பனவேயாமென்பதும் முடிந்தவாறும்.

ஏகான்மவாதக் கொள்கைகளில் சைவசித்தாந்தத் திற்கு நேர்பகையானது என்னவென்றால் சித்துக்கும் சடத் துக்குமுள்ள வேறுபாட்டைத் தெளிவுபடுத்தாமையும் சிற் றுயிர்கள் பலவற்றையும் கடவுளே என்று கூறுதலுமாம். இனி, சைவசித்தாந்தக் கொள்கையை ஆராய்ச்சி செய்யு மிடத்து முதற்கண் சடவுலகத்திற்கு மூலகாரணம் ஆரா யற்பாலது. சைவசித்தாந்தத்திலே இயற்கையுலகத்தைத் துருவித்துருவி ஆய்ந்து அதன் மூலத்தைக் கண்டமுறையை வேறு எச்சமயத்திலும் காணுதலரிதென்றே கூறலாம்.

சாங்கியர்கள் மூலப்பிரகிருதியளவே உலகத்தை ஆய்ந்து பார்த்தனர். சைவர்கள் மூலப்பிரகிருதிக்கும் நுட்பமாக ஐந்து தத்துவங்கள் உள்ளனவென்றும் அவற்றுள் ஒன்றிலிருந்தே மூலப்பிரகிருதி வந்ததென்றும் தெரிந்தனர். அவ்வைந்து தத்துவத்துள் வித்தை, அராகம்,கலை என்னும் மூன்றும் பொதுவாக ஆன்மாவிற்கு அறிவு, இச்சை, செயல்களை விளக்குந் தன்மையன வாகும். ஏனைய இரண்டு தத்துவங்களும் உயிர்கள் வினைப்பயனை நுகரும் எல்லையினையும் ஒழுங்கையும் குறிக்குந் தன்மையன. அவை முறையே காலமென்றும், நியதியென்றும் பெயர்பெறும். இவ்வைந்து தத்துவங்களும் அசுத்தமாயை யென்னும் தத்துவத்திலிருந்து வந்தன. அது அவ்வாறு பெயர் பெறுவதற்குக் காரணம் அதற்கும் நுட்பமாகச் சுத்தமாயை ஒன்றிருத்தலாலே. அசுத்தமாயை ஆன்மாக்களுக்கு மயக்கஞ் செய்யும் இயல்பிற்று. சுத்தமாயை மயக்கஞ்செய்யாதது. சுத்தமாயையும் ஐந்து பிரிவையுடையதாய் ஆன்மாக்களுக்கு அறிவு விளங்கத்தக்க ஒலிமூலங்கட்கு இடமாயுள்ளது. அவ்வைந்து பகுதிகளாவன: சிவதத்துவம், சத்திதத்துவம், சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை என்பன. மாயா என்ற சொல்லிற்கு ஏகான்மவாதிகள் கூறும் பொருள் வேறு, சித்தாந்திகள் கூறும் பொருள் வேறு. முன்னையோர் பொய்த் தோற்றம் என்ற பொருள்கொள்வர். பின்னையோர் தமிழ்முறைக்கேற்ப அச்சொல்லின் ஒவ்வொரு எழுத்திற்கும் பொருள் தனித் தனியே கொள்ளுவர். மா என்பது யாவும் ஒடுங்குதல் என்ற பொருளையுடையது; யா என்பது வருதல் என்ற பொருளைத் தரும். இவ்வாறு கொள்ளும் பொருளைத் தமிழிற்கு ஏற்ற

வண்ணம் வேறு முறையினும் கொள்ளலாம். மாய், ஆ என்ற இரண்டு சொற்களின் பொருளே மாயை என்பதின் கருத்தை விளக்கும். மாய்தல், மறைதல் என்னும் பொருளையுடையது. ஆ என்பது ஆதல் என்னும் பொருளையுடையது. எல்லாம் ஒடுங்கி மீளவும் உளதாதற்கு முதற்காரணமானது மாயா என்பது. அதுவே மாயை யெனத் திரிந்தது. அசுத்த மாயையும் சுத்தமாயையுமே சடவுலகம் யாவற்றிற்கும் அடிப்படையாக உள்ளன. மாயைகளினின்று தோன்றுந் தத்துவங்கள் தமிழில் முதல் எனப்படும். 'முதல் முப்பத்தாறே' என்ற திருமூலர் வாக்கியமுங் காண்க. நிலமுதல் மூலப்பகுதிவரை இருபத்துநான்கு தத்துவங்கள் உள்ளன. வைதிகச் சார்பாய மதங்கள் யாவும் இவ்விருபத்துநான்கு தத்துவங்களையே அறிவன. சிவாகமங்கள் இவற்றோடு பன்னிரண்டு தத்துவங்களை எடுத்துக்கூறும். இத் தத்துவங்களும் இவற்றாலாகிய பொருள்களும் தொண்ணூற்றாறு ஆகும். அவை விரிப்பிற் பெருகும். ஒவ்வொரு தத்துவமும் ஆன்மாவினது சத்திகளை விளக்கவும் வெளிப்படுத்தவும் பயன்படுவதாகும். ஆன்மாவானது மலத்தினின்று நீங்கித் தூய்மை அடைவதற்குத் தத்துவங்களின் உதவி வேண்டற்பாலது. கடவுள் தத்துவங்கள் எல்லாவற்றையுங் கடந்தவர். தன்பொருட்டு அவற்றை வேண்டுபவரல்லர். உயிர்களின் பொருட்டுத் தத்துவங்களாலாகிய உலகைக் கடவுள் படைக்கின்றார். சடவுலகத்திற்கு மூலகாரணமாகிய மாயையும் சடமே. கடவுளிலிருந்து உலகமுண்டாகிறதென்றகொள்கை சைவ சித்தாந்தத்திலில்லை. மாயை தன்னந்தனியாக உள்ள சடமூலமேயன்றிக் கடவுளின் பகுதியல்ல என்பதே சித்தாந்

தக் கருத்து. ஆதலால் அசித்தின் இலக்கணத்தையுஞ் சித்தின் இலக்கணத்தையும் மயக்கஞ்செய்யும் விபரீதக் கொள்கை இதன்கண் இல்லை.

இனி உயிர்களின் இயல்பைப்பற்றி ஆராய்வாம். உயிரின் இயல்பைச் சித்தாந்தம் தெளிவுபடக்கூறுவது போல வேறு எச்சமயமும் கூறுவதில்லை. புத்தர்கள் உணர்ச்சிகளின் சங்கிலித்தொடரே ஆன்மா என்கின்றார்கள். உணர்ச்சியாதல் உணர்ச்சிகளை ஒருமைப்படுத்துஞ் சத்தியாதல் அற்றுப்போதலே கடைசி முடிவு என்கின்றார்கள். இக்கொள்கை அறிவிற்குப் பொருத்தமுள்ளதல்ல. ஏனெனில் இருக்கிறதொன்று இல்லையாதல் எப்படி? கண்ணுக்குத் தெரிகின்றது தெரியாமல் மறைந்துபோவதே தவிர சூனியமாவது யாங்ஙனம்? சமணர்கள் அறிவுந் தொழிலுமுடைய உயிர்கள் பல என்று ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால், உயிர் முதலில் கட்டுப்பட்டதென்றதை ஒப்புக்கொண்டு அது தனது முயற்சியினாலே கட்டினின்றும் விடுதியடையுமென்றும் முதலில் அங்ஙனமடைந்தோனே கடவுளாகவும் குருவாகவும் பின்னவர்களுக்கு வழிகாட்டுகின்றானென்றும் கூறுகின்றார்கள். தானே கட்டினின்று நீங்கக்கூடிய ஆற்றல் உயிருக்கு இயல்பிலே இருக்குமாயின் அது கட்டிற்குள்ளாதல் யாங்ஙனம்? இனி வீடுபெற்ற உயிர் வானிலே மேன்மேற் செல்லுவது முத்தியென்று அவர்கள் கூறுமிடத்து, வீடுபெற்ற பின்னுங்கூட ஆகாசமாகிய பூதம் அதன் செலவிற்குத் துணையாக இருக்கவேண்டுமென்று முடிகின்றது. அங்ஙனமாயின் அசேதனப்பொருளாகிய அவ்வாகாசத்தின் தொடர்

யை உயிர் எக்காலத்தும் நீக்கமுடியாததால் அது தன்னிற் றனே சுயாதீனமுடையதென்று எவ்வாறு கூறமுடியும்? ஆதலால் அவர் கொள்கைப்படி சித்தாகிய உயிர் அசித்தின் ஒரு பகுதியினின்றுவது நீங்காதிருத்தலே முத்தியென்பதாகும். அது உயிர் தம்வயமுடைய அறிவுப் பொருள் என்பதற்கு நேர் எதிரிடையான கொள்கை.

இச்சமயம் ஒருபுறமிருப்ப, வைதிக சமயங்கள் உயிரைப்பற்றி என்ன சொல்லுகின்றதென்று பார்ப்போம்.

மீமாம்சமதம் உயிர் இருக்கிறதென்று கூறுகின்றதேயொழிய அதன் இலக்கணத்தைத் தெளிவுபடுத்தவில்லை. தருக்க நியாய மதங்கள் அணுத்தன்மையாய மனமென்னும் அசேதனப்பொருள் உயிரை விட்டு நீங்கினல் உயிர் கல்லைப் போலக் கிடக்கும் என்று கூறுகின்றன. சாங்கியமதம் உயிர் அசைவற்ற அறிவுடைப் பொருள் என்கின்றது. அங்ஙனமாயின் உயிருக்குக் கட்டு வீடு என்பதைப்பற்றிப் பேச இடமில்லை. யோகமதம், கடவுள் உண்டென்று கொள்ளினும் உயிரைப்பற்றிச் சாங்கியர் கூறுவதையே தழுவிக்கொள்வதுந்தவிர உடம்பிற்குரிய யோகப்பயிற்சியினலே உயிர் முத்தியடையலாமென்று கூறுகின்றது. ஏகான்மவாதிகள் உயிருக்குங் கடவுட்கும் வேறுபாடு அறிவதில்லை. வைணவ சமயம் உயிரைக் கடவுளின் சார்பாகக் கூறி ஏகான்மவாதக் கொள்கையையே சார்ந்திருக்கின்றது. மாத்துவர்கள் உயிர் வேறு,கடவுள்வேறுஎன்று கொள்ளினும் உயிரின் இயல்பை முற்று மறியாமல் முக்குணங்களே அவற்றின் இயல்பென்று கொண்டு இராசதம், தாமதமுடைய உயிர்கள் சாத்துவீக நிலையை ஒருநாளும் அடையமுடியாதென்ற கொள்கையை

வற்புறுத்துகின்றது. தயானந்த சரசுவதி முதலியோர் உயிர் முத்தியடைந்தபிறகும் மீளவும் பிறக்கும் என்ற கொள்கை யுடையவராகலின் உயிரின் இயல்பை நன்கறியாதவரேயாவர்.

இவையெல்லாம் இவ்வாறு கூறச் சைவசித்தாந்திகள் சொல்லுவ தென்னவென்றால் உயிர்கள் அறிவு, இச்சை, செயல் உடையனவாய் எண்ணிலாதவாய்க் கடவுளின் வேறாய்க் கடவுளின் ஆட்சிக்குட்பட்டனவாய்க் கடவுளால் திருத்தமுறத் தக்கனவாயுள்ளன என்பதே. உயிர் கடவுளின் வேறல்ல என்றால் அது அசித்தோடு இணங்கிக் கட்டுப்பட வேண்டியதில்லை. அசித்தோடு இணங்கிக் கிடத்தலே அதன் இயல்பென்றால் அது ஒருநாளும் அசித்தினின்றும் விலக்கப் படும் பான்மையுடையதாகாது. ஆதலால் அசித்தோடு இணங்கி நிற்கும் அதன் நிலை அதன் உண்மைத்தன்மை யாகாது. கடவுள் திருவருளால் அக்கட்டுற்ற நிலைநின்று நீங்கிக் கடவுள்பாற் சாருந்தன்மை யுடையது. ஆதலால் பளிங்குபோல எதனைச் சார்ந்ததோ அதன் வண்ணமாந் தன்மையது. அற்றாகலினன்றே,

"நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகு மறிவு"

என்றும்,

'சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்'

என்றும் ஆசிரியர் திருவள்ளுவனார் அறிவுறுத்தியதூஉ மென்க. உயிர்தானாகவே நல்லதைப்பற்றுந் தன்மையுடைய தல்லவாகலின் அது ஒரு முதல்வனை யுடைத்தாயிருத்தல் வேண்டுமென்பதும். ஒருயிர்க்குரிய இன்பத்துன்பங்கள்

மற்றோருயிரால் நேரில் உணரப்படாமையால் உயிர்கள் பலவென்பதும் முடிகின்றது. உயிர்கள் தாமே உலகத்தைத் தோற்றுவித்து ஒடுக்கும் ஆற்றலுடையனவல்ல. எல்லா உயிர்க்குந் தலைவனாகிய ஒருகடவுளே உயிரின்பொருட்டு உலகத்தைப்படைத்துக் காத்தழிக்கின்றார். உயிர்கள் உலகத்தில் உலாவி வினைகளைச்செய்து வினைப்பயன்களை நுகர்ந்து முடிவில் உலகச்சார்பினின்று நீங்குந்தன்மையன. கடவுள் உயிர்களுக்கு எப்போதும் தலைவனாக இருந்து அவற்றை அறிவித்துஞ் செய்வித்தும் உயர்நிலைக்கு நடத்துகின்றார். எப்போதும் உயிர்கள் கடவுளுடைய உதவியை வேண்டி நிற்பனவே. கதிரவன் ஒளி கண்ணிற்கு உதவுகின்றதுபோலக் கடவுளின் உதவி உயிருக்கு வேண்டியதாயிருக்கின்றது. உயிருக்கும் சடத்திற்கும் வேறுபாடு என்னவென்றால் உயிர் அறிவிக்க அறியும், சடம் அறிவித்தாலும் அறியாது. கதிரவனுதவியைக் கண் அறியாதது போல கடவுள்தான் உண்மையான தன் தலைவன் என்பதை உயிரானது சடவுலகத்தோடு பிணிப்புண்டு கிடக்கும் வரை அறியமுடியாது. கடவுளை அறியாத காரணத்தால் தன்னையுமறியாது சடவுலகத்திற் கட்டுப்பட்டு அதில் தோன்று நயங்களான் மகிழ்ந்து அதையே உறுதியாகப் பற்றி நிற்கும். உலகபாசத்தை விடுவது அதற்கு விருப்பமில்லாததொன்று. உலகச் சார்பே உயிரினைச் சுட்டறிவுடையதாக்கி எல்லா வகைக் கெடுதிக்கும் அடிப்பட்ட வித்தாக நிற்கின்றது. இச்சார்பிற்குக் காரணமாய அறியாமையே ஆணவமென்றும் சிறுமையென்றும் கூறப்படும். இச்சிறுமையில்லாத முழுமுதல்வன் உயிர்கட்கு இதனைக்

கொடுக்க முடியாமையால் கடவுளே தீய இயற்கையை உயிர்க்குக் கொடுத்தாரென்றால் பெருந்தவறு. கடவுள் இப்பெருங் கேட்டை நீக்கும் நன்மருத்துவன் போல்வர். படைப்பின் நோக்கமெல்லாம் உயிரை அறியாமையினின்றும் விடுவித்துக் கடவுள்பாற் செல்லும்படி செய்விப்பதே யாம்.

இந்த அறியாமையானது செம்பிற்களிம்புபோல ஆன்மாவை அநாதியே பற்றிக்கொண்டு கிடப்பது. இத்தீமையினின்றும் நீங்கிக் கடவுள்பாற் செல்லும் ஆன்மா மீட்டும் கீழான இச்சார்பிற்குத் திரும்பமாட்டாது. ஏனெனில் ஆன்மாவும் அறிவுடைப்பொருள், கடவுளும் அதற்கேய்ந்த பேரறிவுடைய பொருள். அறிவுடைப்பொருள் தனக்குப் பேரின்பம் அளிக்கவல்ல பரம்பொருளைக் கண்டவிடத்து அதனின்றும் மீளாது. இந்த உண்மையைச் சைவசித்தாந்தங் கூறுகிறபடி தயானந்த சரசுவதி சொல்லுவதில்லை. அவர் சொல்லுவது முத்தியில் ஆன்மா பேரின்பம் நுகர்ந்து பலகோடியாண்டுகள் சென்றபின்பு மீட்டும் அது பந்தப்படுமென்பதே. அங்ஙனமாயின் முத்தியால் முடிவான பயனுறுதல் இல்லையென்பது போதரும். அது அறிவிற்குப் பொருந்துவதல்ல.

ஆன்மாவிற்கு அறிவு, இச்சை, செயல்களிருப்பினும் அவை பந்தமுள்ளகாலத்தில் ஓர் அளவுபட்டதாய் பந்தம் நீங்கியகாலத்துச் சுட்டிறந்தனவாய் விளங்குவன. ஆனால் அவை எப்பொழுதும் கடவுள் கண்டுகாட்டவே தாங்காணுந் தன்மைய. கடவுளுடைய அருட்சத்திதான் மாயையினின்று சேதன உலகத்தை உதிப்பித்து ஒடுங்கச்செய்யும். உயிர்

கள் எடுக்கும் உடம்புகள் அசேதன உலகத்தின் சிறு துண்டுப்படங்களே ஆதலின், அண்டத்திலுள்ளது பிண்டத்தில் உண்டென்ற மொழித்தொடர் வழங்குவதாயிற்று. உலகமனைத்தையும் உயிர்களையும் தொழிற்படுத்துவதற்குக் கடவுள் அவற்றோடு இரண்டறக்கலந்த நிலையில் நிற்க வேண்டும். உடம்பை நடத்துகின்ற உயிரானது எப்படி உடம்பொடு அத்துவிதமாகக் கலந்திருக்கின்றதோ அவ்வாறே கடவுளும் உலகத்தோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கின்றார். கதிரவன் ஒளியானது கண்ணொளியோடும் உலகப் பொருளோடும் கலந்து எப்படி அவற்றை விளக்குகின்றதோ அவ்வாறே கடவுளினுடைய திருவருளும் ஆன்ம அறிவோடும் உலகத்தோடும் கலந்து ஆன்மாவை நடத்தி ஆட்கொள்ளுகின்றது. இதுதான் கடவுள் அத்துவிதமா யிருக்கின்றாரென்பதற்குப் பொருளாகும். அங்ஙனம் கொள்ளாமல் கடவுளே உலகமாயிருக்கிறாரென்று கொள்ளுதல் அறிவிற்குப் பொருத்தமானதன்று. ஆதலால் அத்துவிதமென்னும் சொல்லின் உண்மைப் பொருளுணர்ந்து உண்மையான அத்துவிதக் கொள்கையுடையது சைவசித்தாந்த சமயம் ஒன்றேயாம். இதனாற்றான் சைவ சித்தாந்தத்திற் கூறும் அத்துவிதத்தைச் சுத்த அத்துவிதமென்று கூறுதல் மரபு. கடவுளும் உலகமும் உயிரும் அத்துவிதமாகக் கலந்து நிற்கின்ற நிலையில் கடவுள் பிறவற்றால் தொடக்குண்ணாமல் தம் வயமுடையவராய்ப் பேரருளுடையவராய் விளங்குகின்றார். உயிரானது உலகத்தை நோக்கிய பார்வையை மாற்றிக் கடவுளை நோக்கினால் கடவுளது திருவருள் அதனிற் பதிய அது கடவுள் மாட்டே, பின் எக்காலத்துஞ் சென்றியைவது.

கடவுள் உலகத்தோடு அத்துவிதமாயிருப்பினும் தன் பொருட்டு ஒன்றையும் வேண்டாதவராதலால் உலகத்தின் வேறாகிய தனி நிலையையுடையவர். அதுவே கடவுளின் சிறப்பியல்பு. அச்சிறப்பினைத் தலைப்படுதலே சைவசித்தாந்தத்தில் முத்தியென்று கூறப்படும். கடவுளுடைய திருவருளொன்றே உயிரையும் உலகத்தையும் ஒன்றோடொன்று பிணைந்து நிற்கவும் கடவுளோடு அவை இயைந்து நிற்கவுஞ் செய்வதாகும். கடவுள், உலகம், உயிர் என்ற முப்பொருள்களையும் அத்துவிதமாக ஒற்றுமைப்படுத்தி நிற்பது கடவுளது திருவருளே. ஆதலாலே திருவருளே எல்லாமென்று கூறினர் பெரியோர்.

"உருவருள் குணங்க ளோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதி சாங்கந்
தருமரு ளுபாங்க மெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி
யருளுரு வுயிருக் கென்றே யாக்கினா னசிந்த னன்றே.

(சித்தியார் சுபக்கம்)

"அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான வானந்தத் தாரமு தூட்டி
அருளா லென்னந்தி யகம்புகுந் தானே" (திருமந்திரம்)



சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு - ௬

உ

திருச்சிற்றம்பலம்

# உயிரட்டவணை

என வழங்கும்

# பூப்பிள்ளை அட்டவணை



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்
திருநெல்வேலி & சென்னை
அட்சய - தை.

[2nd Edition]

**Published by**

*The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Limited.*
*Tinnevelly :: & Madras*
*January. 1927*

C. Munisawmy Mudaliar & Sons, Madras.

# நூல் வரலாறு

---

## இந்நூல்

திருக்கைலாய பரம்பரை

திருவாவடுதுறை யாதீனம்

துவிதீயபட்டத்தில் ஞானதேசிகராய்

எழுந்தருளியிருந்த

ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிக சுவாமிகளால்

தமது சிவபூசைக்குப் பூப்பறித்துக் கொடுத்தலால் **பூப்பிள்ளை** என்று வழங்கிய **தவசுப்பிள்ளை**யின் வேண்டுகோளுக் கிரங்கி எளிய இனிய உரைநடையில் அருளிச் செய்யப்பட்டது. சைவ சித்தாந்த சாத்திர உணர்ச்சிக்கு அடிப்படையான தெளிந்த அறிவைக் கொடுக்கக் கூடியது.



# பொருளடக்கம்

உ

திருச்சிற்றம்பலம்

# பூப்பிள்ளை அட்டவணை

## உயிர்

உயிர்களுக்கு எண்ணிக்கையில்லை; பிறப்புமில்லை, இறப்புமில்லை; சிவனைப்போல் அழியாமலிருப்பனவாம். எக்காலமும் ஆணவமலத்துடன் கூடியிருப்பனவாம். எப்படிப்போலவெனில்:- அரிசி தவிட்டுடனும், செம்பு காளிதத்துடனும், கடனீர் உப்புடனுங் கூடியிருத்தல் போலுமாம். ஆணவமலம் உயிரை மயக்கும். எப்படிப்போலவெனில்:— பயித்திய குணம் உயிரை மயக்குகிறது போலவும், கள் உண்டவனை மயக்குகிறது போலவுமாம். உயிரை ஆணவமல மயக்குகிறபடியினாலே உயிருக்கு நல்வினை, தீவினைகளில் ஆசையுண்டு.

அஃதெப்படியெனில்:—பசி சோற்றிலே ஆசை யுண்டாக்குகிறதுபோலவும், பிணி மருந்திலே ஆசை யுண்டாக்குகிறதுபோலவும், குருடு கோலிலே ஆசை யுண்டாக்குகிறது போலவுமாம். உயிருக்கு ஆணவ மலங் கொடுத்த ஆசையைச் சிவனறிந்து மலம் நீங்கும் வரை உயிருக்குத் தனு, கரண, புவன, போகங்களை

இடைவிடாமல் மாற்றி மாற்றிக்கொடுத்துக்கொண்டே யிருப்பன். அஃதெப்படிப் போலவேனில்:—வியாதியினால் மருந்திலாசைப் பட்டவனுக்குப் பண்டிதனறிந்து வியாதி தீரும்வரை மருந்தைக் கொடுக்கிறது போலவென்றறிக. இவை உயிர்களுக்கெல்லா மனுதியிலுள்ள செய்திகளாம்.

உயிர்களுக்கு இச்சையும், அறிவும், தொழிலுமெந்தக்காலமு மிடைவிடாமலிருப்பனவாகும். ஆணவ மலத்துடனே மாத்திரம் கூடியிருக்கிற உயிர்களுக்கெல்லாம் விஞ்ஞானகலரென்றுபெயர். ஆணவ மலத்துடனேயுங் கன்மமலத்துடனேயுங்கூடியிருக்கிற உயிர்களுக்கெல்லாம் பிரளயாகலரென்று பெயர். ஆணவ மலத்துடனேயுங் கன்ம மலத்துடனேயும், மாயா மலத்துடனேயுங் கூடியிருக்கிற உயிர்களுக் கெல்லாஞ் சகலரென்று பெயர். ஆக உயிர்வகை மூன்று.

## ஆணவம்

மும்மலங்களுள் ஆணவ மலமொன்றுயிருந்து எல்லா வுயிர்களையு மயக்கும். நல்ல நினைவுகளை மறப்பிக்கும்; பொல்லா நினைவுகளை நினைப்பிக்கும். நல்ல சொற்களைச் சொல்லவொட்டாது; பொல்லாத சொற்களைச் சொல்லச் செய்யும். நல்ல தொழில்களைச் செய்யவொட்டாது; பொல்லாத தொழில்களைச் செய்வித்துக் கொண்டே யிருக்கும். உயிருக்கு ஊதியமாயுள்ள காரியங்களை ஒரு காலத்துஞ் செய்யவொட்டாது; உயிருக்குக் கேடுவருகிற காரியங்களை எந்தக்

காலமு மிடைவிடாமற் செய்வித்துக்கொண்டே யிருக்கும். உயிரினுடைய நல்லறிவை எந்தக் காலமும் இடைவிடாமற் கெடுத்துக்கொண்டேயிருக்கும்; உயிருக்குப் பொல்லாத அறிவை எந்தக்காலமும் இடைவிடாமற் கொடுத்துக்கொண்டே யிருக்கும்.

## கன்மம்

அது நல்வினை, தீவினையென இருவகைப்படும். அவை மனதினாற் செய்யப்படுவனவும், வாக்கினாற் செய்யப்படுவனவும், சரீரத்தினாற் செய்யப்படுவனவும் என ஒவ்வொன்றும் மூவகைப்படும். இன்னுமவை உயிர் சம்பந்தமாயும், சிவசம்பந்தமாயும் செய்யப்படுவதாற் பலவகைப்படும். இவையெல்லாம் புத்தி பூர்வமாகவும், அபுத்தி பூர்வமாகவும் நிகழும். நல்வினையெல்லாம் பசு புண்ணியம் சிவ புண்ணியமென இரண்டனுளடங்கும். தீவினையெல்லாம் பசுத் துரோகம், சிவத் துரோகம் என இரண்டனுளடங்கும். இனிப் புண்ணியங்களுக்குப் பலன் இன்பமே வரும். பாவங்களுக்குப் பலன் துன்பமே வரும். வினைகளுக்கெல்லாந் தூல கன்மமென்று பெயர். இந்த வினைகளுக்குப் பின்பு பலன் கொடுப்பதாய் ஏற்படும் புண்ணிய பாவங்களுக்குச் சூக்கும கன்மமென்று பெயர். இந்தப் புண்ணிய பாவங்களின் பலனாக வருகிற இன்பத் துன்பங்களுக்கு அதி சூக்கும கன்மமென்று பெயர். இருவினைக்கு ஆகாமியமென்று பெயர். இருவினைப் பலனாகிய புண்ணிய பாவங்களுக்குச் சஞ்சிதமென்று

பெயர். புண்ணிய பாவங்களுக்குப் பலனாகிய இன்ப துன்பங்களுக்குப் பிராரத்துவ மென்று பெயர். பயிரிடுகிறதுபோல இருவினைகள். அப்பயிர்ப் பலனைக் களஞ்சியத்திலே கட்டி வைக்கிறதுபோல புண்ணிய பாவங்கள்; கட்டி வைத்ததிற் சிறிது சிறிதெடுத்து உண்பதுபோல இன்ப துன்பங்களை அனுபவிக்கிறது. இன்ப துன்பங்கள் தெய்வீகத்தினாலேயும் வரும், பஞ்சபூதங்களினாலேயும் வரும், பிற உயிர்களினாலேயும் வரும். தானிச்சைப்பட்டு வருகிறது முண்டு. தானிச்சைப் படாமல் வருகிறது முண்டு. இச்சையின் படிக்கு வராமல் வேறொன்று வருகிறது முண்டு.

## சுத்தமாயை

சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆக 5 - சிவதத்துவமும், சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆக 4 - வாக்குகளும், 51 - அட்சரங்களும், 81 - பதங்களும், 7 - கோடி மகா மந்திரங்களும், 28 - மூலாகமங்களும், 270 - உபாகமங்களும், 4 - வேதங்களும், பதினெண் புராணங்களும், 6 - சாத்திரங்களும், 64 - கலைக்கியானங்களும், சிவபேதங்களுக்கும், சத்திபேதங்களுக்கும், நாதபேதங்களுக்கும், விந்துபேதங்களுக்கும், சதாசிவ பேதங்களுக்கும், மகேசுரபேதங்களுக்கும், ருத்திரபேதங்களுக்கும், விஞ்ஞானகலர்களுக்கும், பிரளயாகலர்களுக்கும், சரியை கிரியை யோகம் அனுட்டித்துப் பதவி யடைந்தோர்களுக்குந் தனு கரண புவன போகங்களும்,

நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்தி கலை, சாந்தியாதீதகலை என்னும் பஞ்சகலைகளும் இப்படிப்போல இன்ன மனந்தங் காரியங்களுஞ் சுத்த மாயையிலிருந்தே பிறக்கும். அஃதெப்படிப்போல வெனில்:-ஒரு பொற்கட்டியிலே பல பல ஆபரணங்கள் பிறக்கிறதுபோலவும், ஒரு இருப்புக் கட்டியில் பல பல ஆயுதங்கள் பிறக்கிறது போலவும், ஒரு மண்ணிலே பல பல பாண்டங்கள் பிறக்கிறது போலவும் என வறிக.

## அசுத்தமாயை

காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்னும் வித்தியா தத்துவம் ஏழும், பிரமாக் களுக்கும், விஷ்ணுக்களுக்கும், தெய்வேந்திரர்களுக் கும், இருடிகளுக்கும், நவக்கிரகங்களுக்கும், மற்று முள்ள சகலர்களுக்குந் தனு கரண புவன போகங் களும், இப்படிப்போல இன்ன மனந்தங் காரியங் களும், அசுத்த மாயையிலே யிருந்து பிறக்கும். அஃ தெப்படிப்போலவெனில்:—ஒரு விதையிலே பல கொம்புகளும், பல குழைகளும், பல பூக்களும், பல காய்களும், பல கனிகளும் பிறக்கிறதுபோலவும், ஒரு சந்தனமரத்திலே பல பல சந்தனச்சேறு பிறக் கிறது போலவும், ஒரு நெல்விதையிலே பல நெல்லு கள் பிறக்கிறது போலவும், ஒரு மேகத்திலே பல பிரிவுகளும், பல சத்தங்களும் பல மின்களும், பல பல இந்திரதனுசுக்களும் பிறக்கிறதுபோலவுமென வறிக.

## பரமசிவன்

அருவமுமல்லன். உருவமுமல்லன். ரூபா ரூபமு மல்லன். அவனுக்கு மூன்று குணத்திலே யொரு குணமுமில்லை. ஒன்பது நிறத்திலே ஒரு நிறமுமில்லை. நாலு மலத்திலே ஒரு மலமுமில்லை. உடம்புக்குள் உயிரிருக்கிறதுபோல உயிர்க்குள்ளே உயிராயிருப்பன். போக்குமில்லை, வரத்துமில்லை. பிரிக்கப்படான். இன்பமாயிருப்பன். நம்பினபேர்களுக்கு மோட்சங்கொடுக்கிறவன். மற்றவர்களுக்கு அவரவர் செய்த இருவினைப் பயன்களைக் கொடுக்கிறவன். எல்லா உயிர்களுக்கும் பெரியவன். எல்லா உயிர்களுக்குஞ் சிறியவன். சகலத்தையும் அறிகிறவன். சகல தொழில்களையுஞ் செய்கிறவன். சகல ஆன்மாக்களுக்கும் அவரவர் விரும்பினதை எல்லாங் கொடுக்கிறவன். எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கிறவன். இன்னும் இவை போன்ற பல இலக்கணங்களை யுடையவன். இவனைக் கருதினும் ஒருவருங் காணமாட்டார்கள்; ஆனபடியினாலே, உயிர்கள் கண்டு பூசை பண்ணும் படிக்குப் பல பல உருவங்களை எடுத்துக்கொண்டு, பூசை முதலாகிய பணிவிடையுங் கொண்டருளிப் பணிவிடைக்குத் தக்க பலன்களையுங் கொடுப்பன். சிவனுக்கு இச்சையும் அறிவுந் தொழிலும், எந்தக்காலமும் இடைவிடாமலிருக்கும்.

பரமசிவம், பராசத்தி; நாதம், விந்துச்சத்தி; சதாசிவம், மனோன்மணிச்சத்தி, மகேசுரன், மகேசுவரச்சத்தி; உருத்திரன், உமாசத்தி; விஷ்ணு இலட்சுமி

சத்தி; பிரமா, சாச்சுவதிசத்தி; ஆக சிவபேதம் 7. சத்தி பேதம் 7.

## தனு

முட்டைப் பிறப்பு, வேர்வைப் பிறப்பு, விதைப் பிறப்பு, தோற்பைப் பிறப்பு, ஆக 4. இந்த நாலு பிறப்பிலே யிருந்தும் விரிந்த பிறப்புக்கு வகை மரப்பிறப்பு, ஊர்வனப் பிறப்பு, தெய்வப் பிறப்பு, நீர்வாழ்ப் பிறப்பு, பறவைப் பிறப்பு, நாற்காற் பிறப்பு, மனுடப் பிறப்பு, ஆக ஏழு. எழுவகைப் பிறப்பிலே யிருந்து விரிந்த பிறப்பிற்கு வகை மரப்பிறப்புப் பேதம் 19 - இலட்சம், ஊர்வன பிறப்புப் பேதம் 15 - இலட்சம், தெய்வப் பிறப்புப் பேதம் 11 - இலட்சம், நீர்ப் பிறப்புப் பேதம் 10 - இலட்சம், பறவைப் பிறப்புப் பேதம் 10 - இலட்சம், நாற்காற் பிறப்புப் பேதம் 10 - இலட்சம், மனுடப் பிறப்புப் பேதம் 9 - இலட்சம் ஆகப் பிறப்புப் பேதம் 84 - இலட்சம்.

அந்த 84 - இலட்சம் பிறப்பிலே யிருந்தும் இன்னும் பிறப்புக்கள் பலவாய் விரியும்.

ஒரு தேக்கு மரத்திலே பேதப் பிறப்பு வருகிற வகை, சந்தனத் தேக்கு, கற்றேக்கு, சுரைத்தேக்கு, தவிட்டுத்தேக்கு, நாய்த்தேக்கு, நரித்தேக்கு, பெரிய தேக்கு, சிறிய தேக்கு என்றிருத்தல்போல அனந்தம் பிறப்புப் பேதமுண்டு. 84 - இலட்சம் பிறப்பிற்கு மிதுபோல என்று அறிக.

## கரணம்

பூதம் 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, சத்தாதி விடையம் 5, அந்தக்கரணம் 4, ஆக ஆன்ம தத்துவம் 24; வித்தியாதத்துவம் 7, சிவதத்துவம் 5, ஆகத் தத்துவம் 36; பிருதிவியின் கூறு 5, அப்புவின் கூறு 5, தேயுவின் கூறு 5, வாயுவின் கூறு 5, ஆகாயத்தின் கூறு 5, ஆக 25; வாயு 10, நாடி 10, வசனாதி 5, வாக்கு 4, குணம் 3, அகங்காரம் 3, ஆகப் புறக்கருவி 60; ஆகத் தத்துவம் 96. மாற்சரியம் 1, அர்த்தவேடணை, தாரவேடணை, புத்திரவேடணை, ஆக வேடணை 3, இதில் உலோக வேடணையைக் கூட்டி தாரவேடணையை நீக்கி, மூன்றாகக் கூறுவது முண்டு.

## புவனம்

பல முழங்கூடினதொரு வீடு, பலவீடு கூடினதொரு தெரு, பல தெருக்கூடினதொரு ஊர், பல ஊர் கூடினதொரு நாடு, பலநாடு கூடினதொரு தேசம், பலதேசங் கூடினதொரு கண்டம், பல கண்டங்கூடினதொரு உலகம், பல உலகங் கூடினதொரு அண்டம், அண்டங்களுக்கு இவ்வளவென்று மட்டுஞ் சொல்லப்படாது. அஃதெப்படிப்போலவெனில் கடுகு, கீரை, விதை, எள்ளு, அத்திக்காய்க்குள்ளே யிருக்கிறவிதை, தினை முதலியவைகளுக்கெல்லாம் பிரமாணந் தெரியும். ஆனலெண்ணித் தொகை பண்ணமுடியாது. இப்படிப்போல அண்டங்களுக்குப் பிரமாணந்தெரியும். அண்டங்களை எண்ணித் தொகை பண்ணமுடியாது.

## போகம்

உயிர்களுக்கு இரத்தினம், சொர்னம், சந்தனம், பெண், மாலை முதலான பதார்த்தங்களிலே விருப்பமாகவே இருக்கும். புலி, பாம்பு, தேள், நட்டுவக்காலி, வியாதி முதலான பதார்த்தங்களிலே வெறுப்பாகவே இருக்கும். ஆக இந்த இரண்டு வகைப் பதார்த்தங்களுக்கும் இவ்வளவென்று எண்ணித் தொகை இல்லை. தொகை யில்லாது போனாலுஞ் சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் ஆக இந்த ஐந்தினிடமாக நின்று அடங்கியிருக்கும். இனிச் சத்தமென்றது விருப்புச் சத்தம், வெறுப்புச் சத்தம் என்று இரண்டு வகைப்படும்; இப்படி மற்றநாலுக்கும் எட்டுவகையாகக் கண்டு கொள்க. ஆக 10 வகையில் ஒவ்வொன்று அளவிறந்ததாக வரும். இப்படி அளவிறந்ததாக வந்தாலும் இன்ப துன்ப மிரண்டுக்கும் ஏதுவாகவே வரும். இப்போகங்கள் இன்ப துன்ப மயமாய் வருவதன்றி வேறு விதமாய் எந்த ஜனனத்திலும் வாராது.

## சிவபுண்ணியம்

புத்தி பூர்வம், அபுத்தி பூர்வம், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம் என 10. இவைகளில் ஏனையவற்றை, இவனுகச்செய்து முடித்த பின்பு பரமசிவன் ஞானுசாரியனுக எழுந்தருளி உண்மை ஞானமென்கிற சிவபுண்ணியத்தைக் கொடுப்பர். அந்த ஞானம் பத்து

விதமாக விருக்கும். அவையாவன: தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகம் என 10. இதிலொன்பதும் உயிர் கண்டு கழிப்பன, சிவபோகமொன்றை மாத்திரமே எக்காலமும் உண்டுகொண்டிருப்பன. இச் சிவபோ கத்தை முத்தான்மா ஒருக்காலுந் தள்ளமாட்டாது. இதின் மேல் உயிருக்கு ஊதியமொன்றுமில்லை.

மெய்கண்டதேவன் றிருவடி வாழ்க



# சித்தாந்த ஆசிரியர் வணக்கம்

---

## நமச்சிவாய தேசிகர்

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு
நீடூழி தழைக மாதோ. (காஞ்சிப்புராணம்)

## ஞானப்பிரகாச தேசிகர்

இருந்தமிழ்ப் புலவ ருய்வா னிபவண மழவை யென்னுந்
திருந்துசீர்த் தலபு ராணத் தெள்ளமு தளித்த செல்வப்
பெரும்புகழ்க் கமலை ஞானப் பிரகாச னெனும்பேர் பெற்ற
வருங்கலைத் திரைய ருத வருட்கடற் கன்பு செய்வாம்.
(திருவாரூர்ப்புராணம்)

## மாசிலாமணி தேசிகர்

ஆசில்சீ ரகச்சமயக் கமலங்கள்
வாய்திறப்ப வவிச்சை யென்னு
மூசுபே ரிருள்கரப்பப் புறச்சமயக்
குமுதங்கண் முகங்கள் கூம்பத்

# சித்தாந்த ஆசிரியர் வணக்கம்

தேசுலாஞ் சிவஞானச் சுடர்பரப்பி
யிரவியெனத் திகழு மாரூர்
மாசிலா மணிஞான சம்பந்தன்
பூங்கழல்கள் வணங்கல் செய்வாம்.
(உத்தரகோசமங்கைப்புராணம்)

## வேலப்ப தேசிகர்

எவ்வெவகோட் படுபொருளு மஞ்செழுத்தி
னடக்கியவற் றியல்பு காட்டி
மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை
யோதுமுறை விளங்கத் தேற்றி
யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச்
சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்.
(காஞ்சிப்புராணம்)

## சிவஞான சுவாமிகள்

வடிவெழுத்தும் பெயரெழுத்துந் தன்மையெழுத்
துந்தெரித்து வழக்கிற் காட்டி
முடிவெழுத்தி னுக்கவே றிலயத்தாற்
பொருட்பகுதி முற்றுங் காட்டி
யுடலெழுத்துஞ் சார்பெழுத்து முயிரெழுத்து
மயன்முதலோ ரெழுத்திற் காட்டி
மடமையறுத் தருடுறைசைச் சிவஞான
சாமியிரு மலர்த்தாள் போற்றி.
(திருமாணிக்குழிப்புராணம்)

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு - ௮௰

உ

திருச்சிற்றம்பலம்

# திரிபதார்த்தசிந்தனை



இது

சைவசித்தாந்தத்தை

விளக்குவது



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

அட்சய௵ மார்கழி௴

# பதிப்புரை

மெய்கண்ட சாத்திரம் என வழங்கும் சிவஞான போதம் முதலிய பதினான்கு நூல்களையும் மேற்கோளாகக் கொண்டு, அவைகளில் பொதிந்து கிடக்கும் நுண்ணிய கருத்துக்களை யாவருக்குந் தெள்ளிதில் விளக்கும் பொருட்டு, ஆன்றோர்களால் உரைநடையில் எழுதப்பட்ட நூல்கள் பலவுள. அவற்றுள் இத் திரிபதார்த்த சிந்தனையு மொன்றே.

கடவுள், உயிர், உலகம் என்னு முப்பொருள்களை ஒருவாறு தொகுத்துச் சொல்லும் ஓர் கருவியாய் நிற்றலின், இந்நூற்குத் திரிபதார்த்த சிந்தனை யென்னும் பெயராயிற்று. இதன்கண் அரிய பொருள்கள் பெரும் பாலுங் கடாவிடைகளில் அமைத்து நன்கு கூறப்பட்டிருக்கின்றன. மேலும் இந்நூலாசிரியர் விடை எழுதுங்கால் இடமறிந்து பொருத்தமான உவமானங்களை மிகத் தெளிவான நடையில் அமைக்குந்திறன் போற்றற்பாலது. முதன் முதல் சாத்திரம் படிக்க விரும்புவார்க்கு இது பெரிதும் பயன்படும்.

இதன் ஆசிரியர்பெயர் இதுகாறும் புலப்படவில்லை. இதனை முதற்கண் பதித்து வெளியிட்ட காலஞ்சென்ற திருவாளர் S. பால்வண்ண முதலியாரவர்களுக்

குத் தமிழுலகு பெரிதும் நன்றி செலுத்தக் கடப் பாடுடையது. இதனைப் பதிக்கும்போது எழுத்துப் பிழைகள் முதலியவற்றைப் பார்த்துதவிய தமிழ்ப் புலவர் திரு-மா. வடிவேலு முதலியாரவர்களுக்கு எங் கள் உளமுவந்த நன்றியைச் செலுத்துகின்றோம்.

திருநெல்வேலி
அட்சய தை கசு.

சைவ சித்தாந்த
நூற்பதிப்புக் கழகத்தார்.

உ

திருச்சிற்றம்பலம்

# திரிபதார்த்த சிந்தனை

## காப்பு

"நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்"

## நூல்

"ஏக னனேக னிருள்கரும மாயையிரண்
டாக விவை யாறநாதியில்*"

எ - து. ஏகன் - சிவனும், அநேகன் - ஆன்மாவும், இருள் - ஆணவமலமும், கருமம் - கன்மமலமும், மாயை இரண்டு - சுத்தமாயை அசுத்தமாயையும், ஆக இவை - ஆக இந்த ஆறு பொருளும், அநாதியில் - அநாதியிலே உண்டான பொருளாம்.

சிவனுக்கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்களுள. அவற்று ளிரண்டு குணங்கள் சொல்லுகிறோம்.

க. தானே அறிகிறகுணம். உ. ஆன்மாவிற்கு அறிவிக்கிற குணம்.

(பா - ம்.) * ஆறநாதியில்.

### மேற்கோள்

பொறிபுலன் கரண மெல்லாம்
புருடனு லறிந்தான் மாவை
அறிதரா வவையே போல
வான்மாக்க ளனைத்து மெங்குஞ்
செறிதருஞ் சிவன்ற னாலே
யறிந்திடுஞ் சிவனைக் காணு
அறிதருஞ் சிவனே யெல்லா
மறிந்தறி வித்து நிற்பன்.

(சித்தியார், சூ. ௫, செ. க.)

என்றது. ஆன்மாக்களுக் கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்களுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல்லு கிறோம்.

க. அறிவித்தாலறிகிற குணம். உ. தானுகப் பிறருக்கறிவிக்க மாட்டாத குணம்.

### மேற்கோள்

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடெண்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு

(சிவஞானபோதம், சூ. அ.)

என்றது. ஆணவமலத்திற் கெண்ணிறந்த தன்னியல் புக்குணங்களுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல் லுகிறோம்.

க. ஆன்மாவிற்கு வேண்டும் பேரின்பத்தையு மதற்குத் தாரகமாயுள்ள திருவருளையு மறைக்கிற குணம். உ. அதற்குத்தேகாதி பிரபஞ்சத்திலே விருப் பத்தைக் கொடுக்கிற குணம்.

மேற்கோள்

அந்நியமா னவையுணர்த்தி யாநந்யமாய் நிறைந்த
வறிவறியா மையினுனு மருணிலவுங் காலந்
தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி
வந்திடுமிங் கிதுவழுவா தாதலினுன் மனத்தால்
உன்னரிய திருவருளை யொழியமல முளதென்
றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே.
(சிவப்பிரகாசம், பொது உ௮.)

என்றது.

கன்ம மலத்திற் கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்களுள. அவற்றுளிரண்டு குணங்களைச் சொல்லு கிறோம்.

க. ஆன்மா ஆணவ மலத்தைப் பொருந்தி மலத் தொழிலி லிருக்கிறபோது, அத்தொழில்மயமா யிருக் கிற குணம்.

உ. அஃது அருட்டொழிலைப் பொருந்தினு லருட் டொழிலா யிருக்கிற குணம்.

மாயைக் கெண்ணிறந்த தன்னியல்புக் குணங்க ளுள. அவற்றுளிரண்டு குணங்கள் சொல்லுகிறோம்.

க. ஆன்மா ஆணவமலத் தொழிலைப் பொருந்தி ஞல் மலத்தொழிற்குத் தாரகமான கருவியாயிருக்கிற குணம்.

உ. அஃது அருட்டொழிலைப் பொருந்திஞ லவ் வருட் டொழிற்குத் தாரகமான கருவியா யிருக்கிற குணம்.

மேற்கோள்

மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளெனி விருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
யாயவா ருயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்.
(சிவப்பிரகாசம், உண்மை உ௰.)

மேற்கூறிய ஆறுபொருளுந் திரிபதார்த்தத்தி லடங்கும். இது தன்னியல்பு. க

ஆன்மா அநாதியில் ஆணவமலத்தி லழுந்திஞன். ஆணவமலம் ஆன்மாவிற்குக் கன்மத்தில் விருப்பத் தைக் கொடுத்தது. அந்தச் செய்தியைக் கர்த்தா இரக்கத்திஞலறிந்து, கன்மத்துக் கேற்ற தனுவைக் கொடுத்து அத்தனுவிற்கேற்ற புவனத்தில் விட்டு விரும்பிய கன்மத்தைக் கூட்டிப் புசிப்பித்தார். இஃது அநாதியிலே பிரபஞ்ச முண்டாகிய முறைமை. இது பொது வியல்பு. உ

ஆன்மாவிற்கு, ஆணவமலம் அநாதி யியற் கையோ? செயற்கையோ? இயற்கையாஞல்,பாலுக்கு

வெளுப்பும், கரிக்குக் கறுப்பும் ஒருகாலத்திலு நீங்கா ததுபோல், ஆன்மாவிற்கு ஆணவமலமும் ஒருகாலத்தி லும் நீங்காது. ஆனதினு லியற்கையன்று.

செயற்கையானல், வெள்ளைப் புடவைக்கு அழுக் கேறுதல்போல மோட்சத்திலும் ஆணவ மலம் வந்து பொருந்தும். ஆனதினுல் செயற்கையுமன்று. இனித் திருஷ்டாந்த மெப்படியெனின், நெல்லிற்குமியும், செம்பிற் களிம்பும்போல் அநாதி செயற்கை அநாதி சையோக மென்றலுமாம்.

**மேற்கோள்**

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

(சிவஞானபோதம் உ.) ௩

ஆன்மாவிற்கு ஆணவமலத்தைக் கர்த்தா கூட்டி ஞரோ ? அல்லது மலந்தானே வந்து கூடிற்ரு ?

கர்த்தா நின்மலராகையினுல் அவர் கூட்டின தன்று.

மலந் தானேவந்து பிடித்ததென்ருலோ, ஆணவ மலஞ் சடமாகையினுல் அது தானே வந்து பிடிக்க மாட்டாது. இனித் திருஷ்டாந்த மெப்படியெனில் ஆன்மாவே ஆணவமலத்தி லழுந்தினுனென்று வேதா கமங்களிற் சொல்லி யிருத்தலால் அவனே ஆணவ மலத்தி லழுந்தினுன்.

**மேற்கோள்**

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி
  யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
அண்ணலரு ளானண்ணி யவையவரா யதனு
  லலகினிகழ் போகங்க ளருந்து மாற்றாற்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
  புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளால்
உண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத
  முற்றிடுநற் பசுவர்க்க மெனவுரைப்ப ருணர்ந்தோர்.

(சிவப்பிரகாசம், பொது எ) ௬

ஆன்மாவிற்குச் செய்தியுண்டோ? வில்லையோ?

ஆன்மா சுதந்தர ஹீனனுனபடியால் சிவனுக்கே செய்தியல்லாமல் ஆன்மாவிற்குச் செய்தியில்லையெனில், வேதாகமங்களில் விதிவிலக்குச் சொல்லவேண்டியதில்லை. நரக தண்டனை வேண்டியதில்லை. ஆனுலிவைகள் வேதாகமங்களிற் சொல்லப்பட் டிருத்தலினுலே யும், போகத்தை விரும்புதலினுலேயும் ஆன்மாவிற்குச் செய்தியுண்டு.

**மேற்கோள்**

அருளினு லுரைத்த நூலின்
  வழிவாரா ததன்மஞ்செய்யி
னிருளுலா நிரயத் துன்பத்
  திட்டிரும் பாவந் தீர்ப்பன்

பொருளுலாஞ் சுவர்க்க மாதி
போகத்தாற் புண்ணியந் தீர்ப்பன்
மருளுலா மலங்க ளர்க்கு
மருந்திவை வயித்திய நாதன்.
(சிவஞானசித்தியார், சூ. உ. செ. ௩௩.) ௫

ஆன்மாவிற்குக் கன்மத்திலே யுண்டாகிய விருப்பஞ் சிவன் கொடுத்த விருப்பமோ, அல்லது ஆன்மாவிற்குள்ள விருப்பமோ?

'ஏன் பாவத்தைச் செய்தாய்' என நரகத்திலிட்டு வருத்துவதாலும், கன்ம நிவர்த்தி வந்த காலத்தில் விருப்பத்தைக் கொடாதபடியினாலேயுஞ் சிவன் கொடுத்த விருப்பமன்று.

நல்வழி யிருக்கத் தீயவழியிலும் நடத்தலால், ஆன்மாவிற்குள்ள விருப்பமுமன்று. இனிச் சித்தாந்த மெய்ப்படியெனில், ஆணவமலமே ஆன்மாவிற்குக் கன்மத்தில் விருப்பத்தைக் கொடுத்ததென்பதாம். ஆணவமலஞ் சடமாகையினாலே அதற்குச் செய்தியில்லையெனில், கள், பாஷாணம், தீ, காற்று, நீர் முதலிய சடங்களுக்குச் செய்தி யுண்டாதலால், ஆணவமலத்திற்குஞ் செய்தியுண்டு. விருப்பத்தைக் கொடுத்த ஆணவமலமும், ஆன்மாவிற்குக் கன்மத்தை யறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பின ஆன்மாவுங் கன்மத்தையறிந்தெடுத்துக்கொள்ள மாட்டான். விரும்பப்பட்ட கன்மமும், ஆன்மாவை யறிந்து வந்து பொருந்தமாட்டாது. ஆனால் கர்த்தா இரக்கத்தினா

லறிந்து விருப்பத்திற்கேற்ற தனுவைக் கொடுத்து அந் தத் தனுவினிடமாகக் கன்மத்தைக் கூட்டிப் புசிப்பிப் பார். ௬

ஆணவமலமே ஆன்மாவிற்குக் கன்மத்தில் விருப் பத்தைக் கொடுத்ததென்பதற்குக் காட்டும் உவமை கள் வருமாறு:—

க. குழந்தைக்குப் பாலிலேயுண்டாகிய விருப் பந் தாய்கொடுத்த விருப்பமோ? குழந்தைகளுக் குள்ள விருப்பமோ?

தாய் பால்கொடுத்த நேரமெல்லாங் குழந்தை குடியாதபடியினாலே தாய்கொடுத்த விருப்பமன்று. பாலை எந்நேரமு மிடைவிடாமற் குடியாதபடியினாலே குழந்தைக்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மையா தெனில், பசியே குழந்தைக்குப் பாலிலே விருப்பத் தைக் கொடுத்ததென்பதாம். விரும்பின குழந்தை யும் பாலை அறிந்தெடுத்துக் குடிக்கமாட்டாது. விரும் பப்பட்ட பாலுங் குழந்தை வாயிலேவந்து பொருந்த மாட்டாது. ஆனால் தாயானவள் இரக்கத்தினா லறிந்து பாலை யெடுத்துப் பாலடையில் விட்டுக்கொடுப்பாள்.

குழந்தை, பசி, பால், தாய், பாலடை ஆக ௫.

உ. குழந்தையைப்போலும் ஆன்மா, பசியைப் போலும் ஆணவமலம், பாலைப்போலுங் கன்மம், தாயைப்போலுஞ் சிவன், பாலடையைப்போலும் உடம்பு. எ

பிணியாளிக்கு மருந்திலே யுண்டாகிய விருப்பம் வைத்தியன் கொடுத்த விருப்பமோ? அல்லது பிணியாளிக்கே யுள்ள விருப்பமோ? மருந்து கொடுத்த நேரமெல்லாங் கொள்ளாதபடியினால் வைத்தியன் கொடுத்த விருப்பமன்று. மருந்தை எந்நேரமு மிடைவிடாமற் குடியாதபடியினால் பிணியாளிக்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மை யாதெனில் வியாதியே பிணியாளிக்கு மருந்தில் விருப்பத்தைக் கொடுத்த தென்பதாம்.

விருப்பத்தைக் கொடுத்த வியாதியும் பிணியாளிக்கு மருந்தை அறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பின பிணியாளியும் மருந்தை யறிந்தெடுத்துக் குடிக்கமாட்டான். விரும்பப்பட்ட மருந்தும் பிணியாளிவாயிலறிந்து வந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியை வைத்தியன் இரக்கத்தினாலறிந்து மருந்தை ஒரு பாத்திரத்தில் விட்டுக்கொடுப்பான்.

பிணியாளி, பிணி, மருந்து, வைத்தியன், பாத்திரம் ஆக ௫.

பிணியாளியைப்போலும் ஆன்மா, பிணியைப் போலும் ஆணவமலம், மருந்தைப்போலுங் கன்மம், வைத்தியனைப்போலுஞ் சிவன், பாத்திரத்தைப்போலும் உடம்பு. அ

௩. குருடனுக்குக் கோலிலேயுண்டான இச்சை கோல்கொடுத் திழுக்கிறவன் கொடுத்ததோ? அல்லது குருடனுக்கேயுள்ளதோ?

கொடுத்த நேரமெல்லாங் கோலைப் பிடியாதபடி யினாலே கோல் கொடுத்திருக்கிறவன் கொடுத்த இச்சையன்று. கோலை விடாமற் பிடியாதபடியினாலே குருடனுக்குள்ள இச்சையுமன்று. இனி யுண்மை யாதெனில் குருடே குருடனுக்குக் கோலிலே இச்சை யைக் கொடுத்ததென்பதாம்.

இச்சையைக் கொடுத்த குருடுங் குருடனுக்குக் கோலையறிந்து எடுத்துக் கொடுக்கமாட்டாது. இச்சித்த குருடனுங் கோலையறிந் தெடுத்துக்கொள்ள மாட்டான். இச்சிக்கப்பட்ட கோலுங் குருடனை யறிந்து அவன் கையில்வந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியைக் குருடனுக் குரிமையுள்ளவன் இரக்கத் தினா லறிந்து கோலைக்கொடுத்துக் குருடன் கொண்டு போகச் சொன்ன இடங்களுக்கு இழுத்துக் கொண்டு போய்விடுவான்.

குருடன், குருடு, கோல், கோல்கொடுத் திருக்கிற வன், இடம் ஆக ரு.

குருடனைப்போலும் ஆன்மா, குருட்டைப்போலும் ஆணவமலம், கோலைப்போலுமுடம்பு, கோல் கொடுத் திருக்கிறவனைப்போலுஞ் சிவன், இடங்களைப்போலும் புவனங்கள். க

ஆன்மாவிற்கு உடம்பி லுண்டாகிய விருப்பஞ் சிவன்கொடுத்த விருப்பமோ? அல்லது ஆன்மாவுக்கே யுள்ள விருப்பமோ?

சிவன் உடம்பு கொடுக்க நினைத்தபோ தெல்லாம் பற்றாதபடியினாலே சிவன் கொடுத்த விருப்பமுமன்று. சரீரத்தை மோட்சத்திலும் இடைவிடாமற் பற்றாத படியினாலே ஆன்மாவிற்குள்ள விருப்பமுமன்று. இனி உண்மையாதெனில், ஆணவமலமே ஆன்மாவிற்கு உடம்பில் விருப்பத்தைக் கொடுத்ததென்பதாம்.

விருப்பத்தைக் கொடுத்த ஆணவ மலமும் ஆன்மாவிற்கு உடம்பை யறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பின ஆன்மாவும் உடம்பை யறிந்தெடுத்துக்கொள்ளமாட்டான். விரும்பப்பட்ட உடம்பும் ஆன்மாவை யறிந்து பொருந்தமாட்டாது. இந்தச் செய்தியைக் கர்த்தா இரக்கத்தினாலறிந்து விரும்பின புவனங்களில் விட்டு விரும்பின கன்மங்களைக் கூட்டிப் புசிப்பிப்பார். ய

பிறவிக்கு ஆன்மா காரணனோ? அல்லது சிவன் காரணனோ?

சிவன் ஆன்மா நினைத்தபடி தனுவைக் கொடுத்துக் கன்மங்களைக் கூட்டிப் புசிப்பிக்கையில் ஆன்மாவே காரணன். கக

குயவன் தன்னிச்சைப்படி பாண்டங்களை வனைவானோ? அல்லது பிறரிச்சைப்படி வனைவானோ?

குயவன் ஒருவடிவாக வனையாது பலவடிவாக வனைகிறபடியினாலே தன்னிச்சைப்படியே வனைவானல்லன். பிறருடைய நினைவின்படியே வனைவான். குயவன், மண், பாண்டம், பிறர் ஆக ச.

குயவனைப் போலுஞ் சிவன், மண்ணைப்போலு மாயை, பாண்டங்களைப்போலும் உடம்புகள், பிறரைப்போலும் ஆன்மாக்கள். கஉ

கர்த்தா தம்முடைய நினைவின்படி ஆன்மாக்களுக்கு உடம்புகளைப் படைப்பாரோ? அல்லது ஆன்மாவின் நினைவின்படி படைப்பாரோ?

தம்முடைய நினைவின்படி படைப்பாராகில் ஒரே விதவடிவமாகப் படைக்கவேண்டும். அப்படிப் படையாமல் பலவித வடிவமாகப் படைக்கிறபடியினாலே தம்முடைய நினைவின்படியே படைப்பாரல்லர். ஆன்மாக்கள் நினைவின்படியே படைப்பாராயினர். கங

வண்ணான் புடவையிலுள்ள அழுக்கை உவர், சாணி இவைகளைக் கூட்டிப்போக்குகிறதுபோல் சிவன் ஆன்மாக்களுக்குத் திரும்பத் திரும்ப மாயாகருவிகளைக் கொடுத்துக் கன்மத்தைக்கூட்டி ஆணவமலத்தைப் போக்குவார். கச

**மலபரிபாகமா**வது: மலம் - ஆணவமலம், பரி - உபசர்க்கம், பாகம் - வேறுபடுதல், ஆன்மாவுக்குப் பக்குவம் வந்த காலத்தில் மலசத்தியானது ஆன்மஞானத்தை மறையாதிருத்தலாம். கரு

**சத்திநிபாதமா**வது: சத்தி - சிவசத்தி, நி - உபசர்க்கம், பாதம் - பதிதல், மலம் நீங்கின ஆன்மாவில் சிவஞானம் விளங்கித் தோன்றுதல். கசு

இருவினையொப்பாவது: உலகத்தார், திரணம், பதர் முதலியவற்றைக் கண்டாற்போல் பக்குவ ஆன்மாவானவன் நல்வினையிலும் விருப்பு வெறுப் பின்றி யிருத்தலாம்.

உலகத்தார் விரும்பப்பட்ட பதார்த்தங்கள், பொன், பால், சீனி, பழம், பட்டு, பெண் முதலி யன. வெறுக்கப்பட்ட பதார்த்தங்கள் புலி, பாம்பு, தரித்திரம், சயவியாதி முதலியன. விருப்பு வெறுப் பில்லாத பதார்த்தங்கள்: திரணம்,பதர் முதலாயின.கள

இருவினை யொப்புக்கு மேலும் ஒருவமை வரு மாறு:

ஒருவன் தன் வைப்பாட்டிக்கு வேண்டியயாவுமு தவி அவள் வீட்டில் பதினைந்து நாளும், தன் இல்லா ளுக்கு வேண்டியன உதவி அவள் வீட்டில் பதினைந்து நாளுமாகவிருந்து அனுபவித்து வருகையில், அறநூல் கேட்டுத் தன் மனைவியுடன் கூடி வாழ்வதே முக்கிய மென்றறிந்து வைப்பாட்டியை விட்டு நீங்கி, தன் இல்லாளோடு கூடி நெடுநாள் இல்லறம் நடத்திக் கொண்டு வருநாளில், துறவற நூல் கேட்டு அவ்வறமே முக்கியமென்றுணர்ந்து தன் மனைவியையும் விட்டு நீங் கிப் பின் இருவரையுஞ் சரியாகக் கண்டதுபோல் ஒரு வன் நெடுங்காலம் பாவத்தையும் புண்ணியத்தையுஞ் செய்து கொண்டு வருகையில் அறநூல் கேட்டு, புண் ணிய முக்கியமென்றறிந்து பாவத்தை விட்டு நீங்கி, புண்ணியத்தைமாத்திரம் செய்து கொண்டு வரும்

போது ஞானசாத்திரங் கேட்டுப் புண்ணியத்திற்கும் இறப்பு பிறப்பு உண்டென்றறிந்து புண்ணியத்தையும் பாவத்திற்குச் சரியென்றறிதலாம். ௧அ

சிவன் ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளி வருவது எவ்வாறு?

விலங்குகள், பறவைகள் முதலியவற்றை அவ்வவற்றின் பார்வையாற் பிடித்தல்போல் மனிதரையும் தன் வயத்தாக்கிக்கொள்ளுதற் பொருட்டு அவர் மானிட வடிவம்போன்ற அறிவு மயமாகிய அருட்டிருமேனிகொண் டெழுந்தருளுவர். ஆகையால் மானிடவுருவாகிய அக்குருவடிவினைச் சப்ததாதுக்களாகிய நம்முடல் போலக் கருதல்கூடாது. ௧௯

ஆன்மாவிற்கு மலநீங்குவது ஆசாரியர் சந்நிதானத்திற்கு வந்தபின்னோ? அல்லது வருவதற்கு முன்னோ?

ஆசாரியர் சந்நிதானத்திற்கு வந்த பேருக்கெல்லாம் மலநீங்காதபடியினாலே வந்தபின் மலநீங்குவதன்று. வருமுன்னே மலநீங்கினால் ஆசாரியர் வேண்டுவதில்லையெனில் படலம் நீங்கின கண்ணுக்கு ஆதித்தன் காட்டுகிறதுபோல் மலநீங்கின பக்குவான்மாவிற்கு ஆசாரியாறிவிப்பார். ஆகையினாலே ஆசாரியர் சந்நிதானத்திற்கு வருமுன்னே மலநீங்கினதாம். உ௰

ஞானவான்களுக்குப் பிராரத்துவவினை யில்லையென்பதற் கோருவமை வருமாறு:

ஒருவன் ஓரூரில் வெகுநாள் மணியம் பண்ணிக் கொண்டிருந்து வெகுவாய்த் தவசதானியங்களும் வாழை கரும்பு முதலானவைகளும் பெற்று அனுபவித்துக் கொண்டிருக்கையில் மணியமாறிப் புதுமணியகாரன் வந்தவிடத்துப் பழையமணியகாரன் முன்னனுபவித்ததில் ஒரு சிறிது மனுபவிக்க விசையாத தன்மைபோலாம். பழையமணியகாரன், ஊர், பதார்த்தம், புதுமணியகாரன் ஆக ச.

பழையமணியகாரனைப்போலும் ஆன்மா, புதுமணியகாரனைப் போலுஞ் சிவன், ஊரைப்போலும் உடம்பு, பதார்த்தங்களைப் போலுஞ் சுகதுக்கங்கள்.உக

ஆன்ம ஞானத்திற்கோருவமை வருமாறு:

கண், கண்ணொளி, கண்ணொளிக்குக் காணுங் குணம், காணுந்தொழில், இருள், பதார்த்தம், விளக்கு, விளக்கைச் செய்பவன் ஆக அ.

கண்ணைப்போலும் ஆன்மா, கண்ணொளியைப் போலும் ஆன்மஞானம், கண்ணொளிக்குக் காணுங் குணத்தைப்போலும் ஆன்மஞானத்திற்கறியுங்குணம், கண்ணொளிக்குக் காணுந்தொழிலைப் போலும் ஆன்ம ஞானத்திற் கறியுந்தொழில், இருளைப்போலும் ஆணவ மலம், பதார்த்தங்களைப் போலுஞ் சுகதுக்கங்கள், விளக்கைப்போலும் உடம்பு, விளக்கை யுண்டாக்குகிற வனைப்போலுஞ் சிவன், விளக்கு நீங்கினபோது ஒழிந் தது காணுந்தொழி லொன்றுமே. விளக்கும் காணுந்

தொழிலும் நீங்கினவாதலால் எஞ்சிநின்றவை யாறு பதார்த்தங்கள். உஉ

ஆன்ம வியாபகத்திற்கோ ருவமை வருமாறு:

படிகமலை, படிகமலைக்கு ஒளி, படிகஒளிக்குப் பற்றுங்குணம், படிக ஒளிக்குப் பற்றுந்தொழில், வன்னம், வன்னத்தைக் காண்பிக்கிறவன் ஆக ஆறு.

படிக மலையைப்போலும் ஆன்மா, அதன் ஒளியைப்போலும் ஆன்மஞானம், அந்த ஒளிக்குப்பற்றுங் குணத்தைப்போலும் ஆன்ம ஞானத்திற் கறியுங்குணம், அந்த ஒளிக்குப் பற்றுந் தொழிலைப்போலும் ஆன்மஞானத்திற் கறியுந்தொழில், வன்னத்தைப் போலு மாயாகருவி, வன்னத்தைக் காண்பிக்கிறவனைப் போலுஞ் சிவன்.

படிகமலையானது எந்தப் பக்கத்திலே வன்னத்தைக் காண்பித்தாலும் பற்றிக்கொள்வதுபோல் எல்லாப் புவனங்களிலும் வியாபிக்கும். ஆன்மாவிற்குக் கர்த்தா எந்தப் புவனத்தில் உடம்பைக் கொடுத்தாலும் அந்தப்புவனத்திலே பற்றிக்கொண்டறிவான். உங

ஆன்மவியாபகத்திற்கு மேலுமோ ருவமை வருமாறு:

அக்கினிமலை, அக்கினிமலைக்கு ஒளி, அந்த ஒளிக்குச் சுடுங்குணம், சுடுந் தொழில், பஞ்சு, பஞ்சைப் பற்றுவிக்கிறவன் ஆக ஆறு.

அக்கினி மலைபோலும் ஆன்மா, ஒளிபோலும் ஆன்ம ஞானம், ஒளிக்குச் சுடுந்தொழிலைப்போலும் ஆன்மஞானத்திற் கறியுந்தொழில், பஞ்சைப்போலு மாயா உடம்பு, பஞ்சைப் பற்றுவிக்கிறவனைப்போலுஞ் சிவன்.

அக்கினி மலையானது எந்தப்புறத்திலே பஞ்சைக் கொடுத்தாலும் பற்றிக்கொள்ளும். அதுபோல், எல்லாப் புவனங்களிலேயும் வியாபகமாயிருக்கும் ஆன்மாவிற்கு, கர்த்தா எந்தப் புவனத்திலே தனுவைக் கொடுத்தாலும், அந்தப் புவனத்திலே பற்றிக்கொண்டறிவான். உச

ஆன்மா சார்ந்ததின் வண்ணமா யிருப்பதற்கோருவமை வருமாறு:

ஆகாயமானது இருளோடு கூடினால் இருளாய்நிற்கும். அதுபோல், ஆன்மா மலத்தோடு கூடினால் மலமாய் நிற்கும்; சிவத்தோடு கூடினால் சிவமாய் நிற்கும். உரு

சமுத்திர வியாபகத்திலே, வியாத்தமா யிருக்கிற தண்ணீரும், உப்பும் வியாப்பியமா யிருத்தல்போல, சிவனுடைய வியாபகத்திலே, வியாத்தமா யிருக்கிற ஆன்மாவும், மலமும் வியாப்பியமாயிருக்கும்.

சிவனுடைய வியாபகத்திலே சிவசத்தி வியாப்பியம். சிவசத்தியிலே ஆன்மாவும், மலமும் வியாப்பியம். ஆன்மாவிலே ஆன்மசத்தி வியாப்பியம். மலத்திலே மலசத்தி வியாப்பியம். ஆன்மபோதத்திலே மாயை

2

வியாப்பியம். மாயையிலே மாயாகாரியம் வியாப்பியம். மாயாகாரியத்திலே கன்மம் வியாப்பியம். கன்மத்திலே கன்மகாரியம் வியாப்பியம்.

வியாபகம்-நிறைவு, வியாத்தி-சமநிறைவு, வியாப்பியம் - அடங்கின நிறைவு. உக

ஆன்மாவிற்குக் கேவலம், சகலம், சுத்தமென்று மூன்று அவத்தைகளுள. அவற்றுள் ஒவ்வொன்றும் காரணம், காரியமென இருதிறப்படும்.

காரண கேவலம் அநாதிதொடுத்து மோட்ச பரியந்தம் ஆன்மா அறிவுகெடாமல் ஆணவமலத்திலே அழுந்திக் கிடத்தலாம். அது கண்ணானது இராக் காலத்தில் இருளிலே ஒளிகெடாமல் விழித்திருத்தல் போலும். ஆணவமலம் இராக்காலம் போலவும், கேவலாவத்தை இருள் போலவுமாம். கேவலம்-மறைப்பு.

காரிய கேவலம், அறிகருவிகள் நீங்கிச் சாக்கிர முதல் ஐந்தவத்தைப் படுதலாம்.

காரண சகலம், அநாதி தொடுத்து மோட்சபரியந்த முண்டாகிய எண்ணிறந்த சிருஷ்டி காலங்களிலே, ஆன்மா தான் எடுக்கும் மாயா உடம்புகளைப் பற்றி முப்பத்தாறு தத்துவங்களையும் பொருந்தி நின்று சுகதுக்கங்களை யறிதலாம். அஃது இராக்காலத்தில் இருளிலே அழுந்திக்கிடந்த கண்ணானது விளக்கினால் இருள் நீங்கப்பெற்று, பதார்த்தங்களைக் காண்டல் போலும்.

காரியசகலம் இலலாட ஸ்தானத்தில் ஆன்மா துரியாதீதமுதல் சாக்கிர மீறாகவுள்ள மத்தியாலவஸ்தை ஐந்தையு மடைதலாம்.

காரண சுத்தம், ஆன்மா பஞ்சமலங்களையு நீங்கி அருளைப்பொருந்திச்சிவானந்தத்தை யனுபவித்தலாம். அது கண்ணனது இராக்காலம், இருள், விளக்கு இவைகளை விட்டு நீங்கிச் சூரியன் உதயஞ் செய்த விடத்துச் சூரியகிரணத்தினாலே சூரியனைக் கண்டு கொண்டிருத்தல் போலும்.

காரிய சுத்தம், சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலசாக்கிரமுதல் ஐந்தவத்தைப் படுதலாம். உஎ

மலநிவிர்த்திக்குக் காரணம் யாது?

அநாதி தொடுத்து மோட்ச பரியந்தம் ஆன்மாவாலுண்டாகிய சிவபுண்ணியமே.

அச் சிவபுண்ணியமும் அபுத்திபூர்வ சிவபுண்ணியம் புத்திபூர்வ சிவபுண்ணியம் என்றும், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம் என்றும், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம் என்றும் பத்துவிதப் படும். இவைகளைச் செய்து முடித்தபின்பு தத்துவ ரூபமுதல் போகமீறாகவுள்ள பத்தையும் நின்மல சாக்கிர முதல் ஐந்தவத்தையிலு மடக்கி ஆசாரியர் பக்குவப்பட்ட சீடனுக்கு நிர்வாண தீட்சை பண்ணி யறிவிப்பர்.

அடங்கு முறைமை.

தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம் ஆகிய நான்கும் நின்மலசாக்கிரத்தி லடங்கும்.

ஆன்ம தரிசனம், சிவரூபம் ஆகிய இரண்டும் நின்மல சொப்பனத்தி லடங்கும்.

திருவருளாற் செய்யப்படும் பஞ்சகிருத்தியங்களை ஆன்மா, தானே செய்யக்கூடுமென்று கருதல் மாத்திர மேயன்றி, நின்மலசுழுத்தியில் தசகாரியத்தி லொன்று மடங்குவதில்லை.

ஆன்மசுத்தி, சிவதரிசனம், சிவயோகம் ஆகிய மூன்றும் நின்மல துரியத்திலடங்கும்.

சிவபோக மொன்றுமே நின்மல துரியாதீதத்தி லடங்கும். உஅ

கன்மம்: சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியமென மூன்று வகைப்படும்.

சஞ்சிதம்: மாயையிலே கட்டுண்டிருக்கும் புண்ணிய பாவமாம்.

பிராரத்துவம்: ஆன்மா தான் எடுத்த தேகத்தில் நின்று புசித்துத் தொலைப்பதாகிய சுகதுக்கமே.

ஆகாமியம்: பிராரத்துவம் புசிக்கையிலுண்டாகிய இதாவகிதமே.

மனம் வாக்குக் காயங்களினாற் செய்யப்பட்ட நல்ல தொழிலே இதம். அவைகளாற் செய்யப்பட்ட தீய தொழிலே அகிதம். சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்த

மென்னும் ஐந்து விஷயங்களே சுகதுக்கங்களுக் கிருப் பிடங்களாம். இவ்விஷயங்களில் ஒவ்வொன்றும் விருப்பு வெறுப்பு என்னும் இருதிறத்தனவாய்ப் பத்து விதப்படும். உகூ

எண்ணிறந்தகோடி புவனங்களிலிருக்கிற ஆன் மாக்களுக்கும், அறிவித்துத் தொழில் நடத்துகை யினால், சிவன் வியாபகனென் றறிக.

எண்ணிறந்தகோடி ஆன்மாக்களுக்கும்அறியாமை யிருத்தலால் மலம் வியாபகமுள்ளதென் றறிக. ௩ூ

நித்தியனுயுள்ள ஆன்மாவைப் பிறந்தான், இறந் தான் என்று சொல்வதெப்படி?

ஆன்மபோதமானது மாயா கருவியைப்பற்றி யறி தலே பிறப்பு. ஆன்ம போதமானது மாயாகருவி யைப்பற்றி யறியாதிருத்தலே இறப்பு. ௩க

எண்ணிறந்தகோடி ஆன்மாக்களுக்குஞ் சிவன் ஒருவனுக விருந்து அறிவிப்பதெப்படி?

(க) எண்ணிறந்த கோடி கண்களுக்கும் ஆதித்த னொருவனுக விருந்து காட்டுதல் போலும்.

(உ) ஒருவண்ணுன் பலபெயருடைய புடவைகளே வாங்கி வெளுத்து அவரவர் புடவையை யறிந்தெடுத் துக் கொடுத்தல் போலும். மேலும் ஓர் இடையன் பலபெயருடைய மாடுகளேமேய்த்து அவரவர் மாடுகளே யறிந்து வீட்டின்கண் கொண்டு விடுதல்போலும்.

மலமொன்றாகவிருந்தும் எண்ணிறந்தகோடி ஆன்மாக்களின் அறிவை மறைக்கிறதெப்படி?

எண்ணிறந்தகோடி கண்களை இருள் ஒன்றாகவிருந்து மறைத்தல்போலும்.

சிவன், ஆன்மா பிராரத்துவம் புசித்தற்பொருட்டு நல்வினை தீவினையிரண்டையுங் கருவியாகக் கூட்டினான். அந்தச் செய்தியை ஆன்மா மலத்தினாலே தன்னுடைய செய்தியாக நினைந்து கொண்டான். ஆகையினாலே அவ்விரு தொழிலும் ஆன்மாவிற்கு ஆகாமியமாயிற்று. ௩௩

வேதாகமங்களை ஓதி அறுதியிட்டறிந்து நித்திய கன்மானுட்டானங்களில் வழுவில்லாமல் ஞானசாத்திரங்களைக் கற்று, கேட்டல், சிந்தித்தல், தெளிதலையடைந்து நிட்டையைப் பொருந்துதலாம். ௩௪

சிவன் சத்தியுடன் கூடினால் பிரபஞ்சம் தோற்றும். சத்தி சிவனுடனே கூடினால் பிரபஞ்சம் ஒடுங்கும். ஆன்மா ஆன்மபோதத்துடன் கூடினால் பிரபஞ்சமுண்டாம். ஆன்மபோதம் ஆன்மாவுடன் கூடினால் பிரபஞ்சம் ஒடுங்கும். ௩௫

ஆன்மாவிற்கு உடம்பு மலப்பிணியினாலுண்டானது. சிவனுக்கு உடம்பு, ஆன்மாவின் மலப்பிணியைத் தீர்க்குங் கருணையினாலுண்டானது. ஆன்மா தன்னுடைய போத மிழந்து சிவபோதத்துடன் பிராரத்துவத்தை யனுபவிக்கில் மலப்பிணி நீங்கும்.

சிவபோதத்துடன் அனுபவித்தால் மலப்பிணி நீங்காது. ௩௬

அநாதி சிருஷ்டி செய்யுங்காலத்திலேயே சிவபெருமான், மூர்த்தி தலந் தீர்த்தமாகத் திருமேனி கொண்டெழுந்தருளி ஆன்மாக்களுக்குச் சிவபுண்ணியத்தை யுண்டாக்குவர். எப்படியானால் சிவலிங்க அர்ச்சனைக்கான தளிர்களைக் கொடுக்கும் விருக்ஷங்களாகவும், நிவேதனத்திற்குரிய நெல் முதலியவற்றைக் கொடுக்கும் பயிர்களாகவும், அபிடேகத்திற்குரிய பால் முதலியவற்றைக் கொடுக்கும் பசுமுதலிய மிருகங்களாகவும் செனிப்பித்தலினாலேதான்.

சிவதலங்களிற் புழுவாய்ப் பிறந்து வசித்து நசித்தாலுஞ் சிவபுண்ணிய முண்டாம்.

சிவதீர்த்தத்தின் திவலைதெறித்தாலும், அத்தீர்த்தம் பாய்ந்து விளையும் நெல் முதலியவற்றைப் புசித்தாலும் எவ்வகைப்பட்ட பிராணிகளும் சிவபுண்ணியத்தை யடைவார்களென்பதிற் சந்தேகமில்லை. ௩௭

தத்துவரூபம்: ௩௬ தத்துவங்களின் றொழிலறிதலாம்.

தத்துவதரிசனம்: ௩௬ தத்துவங்களுஞ் சடமென்றறிதலாம்.

தத்துவசுத்தி: சிவஞானத்தினால் ௩௬ தத்துவங்களையும் விட்டு நீங்குதலாம்.

ஆன்மரூபம்: ஆன்மா பஞ்சமலங்களையும் நீங்கித் தன்னைச் சிவமென்று பாவித்தலாம்.

ஆன்மதரிசனம்: தனக்கொரு செயலுமில்லையென் றறிந்து நிற்றலாம்.

ஆன்மசுத்தி: ஆன்மா சிவஞானத்திற்குள் அழுந்தி தற்சுதந்திரந்தோன்றாமல் அந்தச் சிவஞானமாய்ப் போதலாம்.

சிவரூபம்: ஆணவமலத்தில் அழுந்திக்கிடக்கிற ஆன்மாக்கள் பாகபேதங்களைத் திருவுள்ளத்தடைத்து, சிவன் பஞ்சகிருத்தியங்களைச் செய்து பஞ்சமலங்களை யும் நீக்கி மோட்சத்திலே விடுமென்றறிதலாம்.

சிவயோகம்: சிவசத்தி செய்யுங் கிருத்தியங்களைச் சிவன் சற்றுஞ் செய்யானென் றறிதலாம்.

சிவபோகம், ஆன்மா சிவானந்தத்தைப் புசித் தலாம். ௩அ

தத்துவம் என்றது அழிவில்லாத தென்று பொருள்படும். பதி, பசு, பாசமென்னுந் திரிபதார்த் தங்களுந் தத்துவங்களேயாம். ௩௯

நிருவாணதீட்சை இருவகைப்படும்.

(க) அசத்தியோ நிருவாணம். அறிவிக்கவறியுந் தன்மையில்லாத சீடனுக்கு ஆறத்துவாவையு மறிவி யாமல் தீட்சை செய்தலாம்

(உ) சத்தியோ நிருவாணம்: அறிவிக்கவறியுந்தன் மையுடைய சீடனுக் கறிவித்து தீட்சைசெய்து அவத் தையைப் போக்குதலாம். ௪0

சிவனுக்குரிய திருமேனிகளெல்லாம் சர்வசங்கார காலத்தில் நீங்கிப்போம். ஆன்மாவாகிய திருமேனி சர்வசங்கார காலத்திலும் நீங்காது. சக

ஆன்மாக்களுக்குப் பக்குவம், சிவபுண்ணியம், மலபாகம், சத்திநிபாதம், இருவினையொப்பு, ஞானாசாரியர் திருமேனி கொண்டுவந்து திருவுளம் பற்றுதலாகிய இவைகள் முறையே ஒன்றன்பின் ஒன்றாகப் பொருந்துவனவாமென ஞானசாத்திரங் கூறும்.

திருச்சிற்றம்பலம்



திருச்சிற்றம்பலம்

## சந்தானகுரவர் புகழ்மாலை

தேவர்பிரான் வளர்கயிலை காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிவர் பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறா
விரவுபுக ழருணந்தி விறலார் செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே.

(சிவப்பிரகாசம்)

### மெய்கண்டதேவர்

வேதத்தி னரும்பொருளை விமலனரு ணந்திக்குப்
போதித்த சிவஞான போதத்தைக் குருமரபா
லோதித்தேர்ந் தருந்தமிழா லெமக்குணர்த்தி யெம்மூனஞ்
சேதித்த மெய்கண்ட தேவனடி சிந்திப்பாம்.

(அருணகிரிபுராணம்)

அல்லாத பரசமய வலைகைத் தேர்வின்
டகலவகல் புனற்பெண்ணை யயல்சூழ் வெண்ணெய்ப்
பொல்லாத விபமுகத்துப் புத்தே டன்பாற்
புனிதசிவா கமப்பொருண்மை பொருந்த வாய்ந்து
நில்லாத நிலையிதுமற் றென்று மொன்றாய்
நிற்குநிலை யிதுவெனமெய்ந் நெறிதேர்ந் தியாரும்
வெல்லாத சிவஞான போதஞ் சொன்ன
மெய்கண்டான் சரணமுடி மீது கொள்வாம்.

(சேதுபுராணம்)

மைகண்ட மணிமிடற்றோன் விரித்த முன்னூன்
மரபுணர்ந்து வழிநூலா வகுத்தே யுண்மை
கைகண்ட சிவஞான போதந் தந்து
கலைமகளை வாழ்வித்துக் கடவுட் கொள்ளாப்
பொய்கண்ட சமயமுத லாய பொல்லாப்
புன்சமய நிலைகெடுத்த புரைதீர் வெண்ணெய்
மெய்கண்ட குரவர்முதற் குரவர் பொற்றாள்
விரைக்கமலப் போதுமுடி மீது கொள்வாம்
(திருவாரூர்ப்புராணம்)

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிவெலா மகப்படுத் தவற்றி
னெறியெ லாம்விளக் கியசிவ ஞானபோ தத்தைக்
குறிசெய் தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்.
(விநாயகபுராணம்)

பொய்கண்ட வெவையுமெனப் பொல்லாத
கணபதிதான் புகன்று பின்னர்
மைகண்டத் தடக்குமரன் வழங்குசிவ
ஞானநூல் வகுத்துக் காட்டக்
கைகண்ட பின்னருளே கண்ணுகக்
கண்டபெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்
மெய்கண்ட தேவனடி கைகொண்டு
கூப்பிமுடி மீது சேர்ப்பாம்.
(திருப்பூவணப்புராணம்)

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவித யக்கமல முகைக ளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்

விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.
(சிவஞானசித்தியார்)

## அருணந்திசிவம்

புன்னெறி யகற்றிய போத சூத்திரத்
தின்னெறி விளங்கநூ லிலங்கச் செய்துமே
னன்னெறி காட்டரு ணந்தி தேசிகன்
றன்னிரு பங்கய சரணம் போற்றுவாம்.
(சிவபுண்ணியத்தெளிவு)

## மறைஞான சம்பந்தர்

பார்திகழ வளர்சாம வேத மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்வுதர வந்தருளி யெம்மை யாண்ட
சைவசிகா மணிமருதத் தலைவ னந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியங்
கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்த னெந்தை
திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.
(சிவப்பிரகாசம்)

## உமாபதி சிவம்

சொற்றரு முதல்வழித் தொன்மை நூன்முறை
கற்றெளிர் சிவப்பிர காச நூல்புகல்
கொற்றவன் குடிவரு குரவ னெம்மையா
ளுற்றவன் பதமக நாட்டு வாமரோ.
(சிவபுண்ணியத்தெளிவு)

சந்தானகுரவர் சேவடி வாழ்க.

---

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு—௧௩.

உ

திருச்சிற்றம்பலம்.

# ஞானாமிர்தக் கட்டளை



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்
துந்துபி௵ தைமீ

# பதிப்புரை

சைவசித்தாந்த சமயத்திற் கொப்பத் தத்துவப் பாகுபாடுகளையும், அவற்றின் இயல்புகளையும் அங்கையி னெல்லி யென்ன இனிது விளக்கும் இவ்வருமந்த நூல் ஏனைக் கட்டளைகளிற் சிறந்து நிற்பதென இதற்கு முன் மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திரிகை வாயிலாக இதனை வெளியிட்ட திருவாளர் மு-ரா-சுப்பிரமணிய கவிராயரவர்கள் எழுதிய துண்மையே யாம். கவிராயரவர்கள் ஏட்டிற் கண்டவாறே வழூஉக்கள் களையாது அச்சிட்டமையின் அவற்றைத் திருவாளர் வா-மகாதேவ முதலியா ரவர்களைக்கொண்டு கூடியவாறு களைவித்து யாம் அச்சிட்டனம். இந்நூலின் அருமைகூறி அதனைப் பதிப்பிக்குமாறு எம்மைத் தூண்டிப் பல சீர்திருத்தங்களுங் குறித்து உபகரித்த திருவாளர் - S. அநவரதவிநாயகம் பிள்ளை எம். எ., எல். டி. அவர்களுக்குப் பெரிதுங் கடமைப் பட்டுள்ளோம்.

திருநெல்வேலி,
11-2-1923.

சைவ சித்தாந்தக் கழகத்தார்.

உ

சிவமயம்.

# ஞானாமிர்தக்கட்டளை

பதி, பசு, பாசங்களுக் கிலக்கணங் கூறுவாம்:

பதி சுதந்தரஞான முடைமையாலும், பசுக்கள் சுதந்தர மில்லாதவைகளாதலாலும், பாசங்கள் சடமா யிருக்கையாலும், முதலிற் பதிக்கும், இரண்டாவது பசுக்களுக்கும், மூன்றாவது பாசங்களுக்கும் இலக் கணங் கூறத் தொடங்கி, பதியிலக்கணங் கூறப்படு கின்றது.

## பதியிலக்கணம்

பதி சொரூபமென்றும், தடத்தமென்றும் இரு வகைப்படும்.

சொரூபமாவது - முத னடு விறுதியில்லாததாய், தூலசூக்குமசூனிய ரூப மில்லாததாய், குணங்குறி யில்லாததாய், ஒன்றாய், அசலமாய், அகண்டாகார

சச்சிதானந்த பரிபூரண சோதியாய், பஞ்சகிருத்தியத்திற் கதீதப்பட்டு நின்மலவடிவாய் விளங்குவது.

இனித் தடத்தமாவது - சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுவதாம்.

பதியாகிய சிவத்தினிடத்து அக்கினியி லுஷ்ணம் போலப் பிரிவற்றிருக்குஞ் சத்தியானது நித்தமாய்,ஒன்ருய், இச்சாஞானக்கிரியா சொரூபமாயிருக்கும். இது காரியபேதத்தினுலே பரைமுதலாக அனேக பேதப் படும். சத்தி பேதத்தினுலே, சிவனுஞ் சத்தன், உத்யுக்தன், பிரவிருத்தனென மூவகையாய்ப் பேதப்படுவன்.

சத்தனென்பவன் காரியத்தைப் பண்ண வுத்யோகியாமலும், காரியம் பண்ணத் தொடங்காமலு மிருக்கிற சத்திமாத்திரமா யிருக்கிறவன்; இவன் சத்திகலைகளுடன் கூடியிருக்கிறவனுகையால் நிட்களனு யிருப்பன். இவனுக்கு ஞானமாத்திரமே திருமேனி. இவனுக்கு இலய னென்றும், சத்தனென்றும் பெயர்.

இனி, உத்யுக்தனுவான் காரியம் பண்ண வுத்யோகிக்கிற சத்தியுடையவன்; காரியம் பண்ண வுத்யோகிக்கிறபொழுது ஞானக் கிரியா சத்திக ளொப்பில் உண்டானவன்; பரை ஆதி இச்சை ஞானம் கிரியை யென்னும் பஞ்சசத்திகள் சுத்தமாயையிலே பதிந்த பொழுதுண்டாகிய ஈசானாதி பஞ்சப்பிரமங்களையே திருமேனியாகவுடையவன். பாசகலைகளுடன் கூடியிருத்தலாற் சகளனும், சத்திகலைகளுடன் கூடி

யிருத்தலால் நிட்களனு மாதலாற் சகளநிட்களனும். இவற்குச் சதாசிவனென்றும் போகனென்றும் பெயர்.

இனிப் பிரவிருத்தனுவான் காரியங்களைப் பண்ணத் தொடங்கிய சத்தியை யுடையவன்; காரியம் பண்ணுகிற வேளையிற் கிரியை அதிகமாக வேண்டுமாதலால் ஞானசத்தி குறைவும், கிரியாசத்தி அதிகமுமாக வுடையவன். இவன் பாசகலைகளுடனே கூடியிருக்கையாற் சகளனும். இவற்கு மகேசுரனென்றும் அதிகாரனென்றும் பெயர்.

இந்தப் பதி - நிட்களமாகிய சிவம், சத்தி, நாதம், விந்து ; சகளநிட்களமாகிய சதாசிவன் ; சகளமாகிய மகேசுரன், உருத்திரன், விட்டுணு, பிரமா என்னு மொன்பது பேதப்படும். இவைகளிற் சிவத்திற்குச் சத்தியும், நாதத்திற்கு விந்துவும், இவ் விரண்டு மொழிந்த மூர்த்திக ளைவர்க்கும் முறையே மனோன்மணியும், மகேசையும், உமையும், இலக்குமியும், சரசுவதியும் சத்திகளாம். காரியபேதத்தினலே சத்தி சிவங்களும் பேதமாயின வென்க. பதிக்கு இந்தச் சிற்சத்தியே தேகங் கரண மிடமெல்லாமென வறிக.

இப்படிக் கர்த்தா வுண்டென் பதற்குப் பிரமாணமாவது :— அவன், அவள், அது எனச் சுட்டப்படும் பிரபஞ்சங் காரிய மாதலாற் கடாதிகளைப்போலக் கர்த்தாவை யுடையது. மாயை சடமாயிருத்தலாலும், ஆன்மாக்கள் தடைப்பட்ட ஞானக் கிரியையுடைமையாற் சுதந்தரமில்லாதனவா யிருத்தலானும், இவ் விரண்டையுந் தொழிற்படுத்துங் கர்த்தா வுண்டென்பது புலப்படும்.

ஆன்மாக்கள் மலமுடையனவாதலாலுங் கர்த்தா நிர்மலனாதலாலும், அவன் ஆன்மாக்களுக்கு வேறாகியும், எள்ளுக்கு ளெண்ணெய்போலப் பிரிவற் றிரண்டற நின்றும், கன்மத்துக் கீடாகத் தனது சமவாய சத்தியினாலே சுத்தாசுத்த மாயைகளைச் சேர்த்துத் தனுகரணாதிகளை யுண்டாக்குவன்.

இவ்வாறாதலாற் கர்த்தா குலாலனைப்போலச் சரீர முதலானவைகளை யுடையவனாக வேண்டுமெனின், அற்றன்று; காலம்போல அரூபியாயிருந்து சிருட்டியாதிகளைப் பண்ணுதல் கூடும்; அவன் தேகத்தையுடையவனாகில், அவனுடைய தேகத்தை யுண்டுபண்ண வேறேயொரு கர்த்தா வேண்டுமென்ற அநவத்தை வருமாதலால் தேகாதி சகல வுபாதியுமற்றவனே கர்த்தாவாம்; தேகாதிகளையுடைய அனந்தேசுரர் முதலானவர்கள் அவாந்தரகர்த்தாக்களாம்.

அவ்வாறன்றிச் சூரியன் நிர்விகாரியாயிருந்து தன் சன்னிதானத்திற் றாமரைமொட்டலரவும், ஆம்பல் குவியவும், சேறிறுகவும், வெண்ணெயிளகவும் பண்ணுமாறுபோல, கர்த்தா காரியத்திலே யுன்முகமாயிருக்கிற சத்தியுடனே கூடியிருப்பவனாதலால் தன் சன்னிதி மாத்திரத்திலே சிருட்டியாதிகளைப் பண்ணுவனென்க.

இந்தக் கர்த்தா சத்தனாயிருந்து பண்ணுங் கிருத்தியமாவன:— தீவிரதர சத்திநிபாதத்தை யுடையவர்களை யனுக்கிரகித்துப் பரமுத்தியில் விடுவதும், தீவிரசத்திநிபாதத்தை யுடையவர்களை அபரமுத்தி ஸ்தானத்தில்

வைப்பதுமாம். இவன் சுத்தமாயையைத் தனது சத்தி யாற் கலக்கிச் சத்தரூபமாகிய நாதவிந்துக்களையும், அர்த்தரூபமாகிய நாதவிந்துவென்னும் பெயரை யுடைய சிவதத்துவஞ் சத்திதத்துவங்களையும், இந்தத் தத்துவங்களிலே புவனங்களையும், இந்தப் புவனங் களிலே யிருக்கிறவர்களுக்குத் தனுகரணாதிகளையும், விந்து தத்துவத்திலே நின்றுஞ் சதாசிவ தத்துவத்தையு முண்டாக்கி, அந்தச் சதாசிவ தத்துவத்துக்குச் சதா சிவனை நாயகனைப் பண்ணி, அவனை வேறறக் கூடி நின்று சிருட்டியாதிகளைப் பண்ணுவ னென்க.

இனி உத்யுக்தனாகிய சதாசிவனாயிருந்து பண் ணும் கிருத்தியமாவன:—சதாகாலமு மனுக்கிரகித்து மிருந்திருக்கிற விஞ்ஞானகலரிலே தீவிரதர சத்திநி பாதமுடையவர்களை யனுக்கிரகித்துப் பரமுத்தியில் விடுவதும், தீவிர சத்திநிபாதமுடையவர்களை யனுக் கிரகித்து மலபரிபாகத்துக் கீடாகச் சிவதத்துவ முத லான பஞ்ச தத்துவங்களிலும் ஞானக்கிரியைகளை விளக்கிய பரமுத்தராகவும், சிவசமராகவும், அணு சதாசிவராகவும், வித்தியேசுரராகவும், உருத்திர ராகவும் வைப்பதும், நாதரூபமாகிய அந்தப் பர ஞானத்தை ஈசாநாதி யைந்து முகங்களால் வேதங்க ளாகவும் பிரணவர் முதலியோர்க்குக் காமிகாதி யாக மங்களாகவும் பிரித்து அனுக்கிரகிப்பதும், சாதாக்கிய தத்துவத்திலே நின்று ஈசுவரதத்துவத்தையும் அதிலே புவனங்களையும் அந்தப் புவன நாயகரான அனந்தர் முதலான அட்டவித்தியேசுரர்களுக்குத் தனுகரணாதி களை யுண்டாக்குவதும், இந்த ஈசுவரதத்துவத்துக்கு

நாயகராக மகேசுரரைப்பண்ணுவதும், இந்தத் தத்துவத்திலே நின்றுஞ் சுத்தவித்தியாதத்துவத்தை யுண்டாக்குவதும், சுத்தவித்தையிலே யிருக்குஞ் சத்தகோடி மகாமந்திரர்களுக்குத் தனுகரணாதிகளை யுண்டாக்குவதுமாம்.

இனிப் பிரவிருத்தனாக இருந்து பண்ணுங் கிருத்தியமாவன :—பிரளயாகலரிலே தீவிரதரசத்திநிபாதமுடையவர்களை அனுக்கிரகித்துப் பரமுத்தியடையப் பண்ணுவதும், தீவிர சத்திநிபாதமுடையவர்களைச் சகல கன்மங்களையும் போக்கி யதிகாரமல மாத்திரமாக நிறுத்தி உருத்திரராகவும் புவனேசுரராகவும் பண்ணுவதும், அசுத்தமாயையைக் கலக்கி மாயை காலம் நியதி கலை யென்னுந் தத்துவங்களை யுண்டாக்குவதும், இவைகளிலே புவனங்களை யுண்டாக்குவதும், இந்த நான்கு தத்துவங்களிலே யிருக்கிறவர்களுக்குத் தனுகரணாதிகளை யுண்டாக்குவதும், ஸ்ரீ கண்டபரமேசுரனை யதிட்டித்து நின்று கலையிலே பிரகிருதியையும் வித்தையையும் இராகத்தையு முண்டாக்குவதும், கலாதிகளின் கூட்டத்திலே புருட தத்துவத்தை யுண்டாக்குவதும், பிரகிருதியைக் கலக்கிக் குணங்களைப் பிரிப்பதும், தம்முடைய வலப்பாகம் இடப்பாகம் மார்பென்கிற அங்கங்களிலே யுண்டான பிரம விட்டுணு நீலருத்திரனென்னு மும்மூர்த்திகளையும் ஸ்ரீகண்ட பரமேசுரனால் நாளடைவிலே முறையே இராசத சாத்துவிக தாமதங்களாற் சிருட்டிப்பித்துக் குணமுதலாகப் பிருதிவியீறான இருபத்து நான்கு தத்துவங்களிற் சிருட்டித் திதி சங்காரம் பண்ணுவதுமாம்.

இனிக் கர்த்தா சுத்தாத்துவாவுக்குச் சத்தனும் உத்யுக்தனும், அசுத்தாத்துவாவுக்கு அனந்தேசுரனாகிய பிராரிருத்தனுமாக வருவானென வறிக.

---

## பசுவிலக்கணம்

ஆன்மாவில்லை யென்று சிலர் சொல்லுகின்றமையால் அஃதுண்டென்று நிரூபிக்கப் படுகின்றது.

அஃதாவது சூனியமென்பதின்றி, என்னுடைய தேகமென்று சொல்லுவது மின்றி, இந்திரியங்கள் ஒழிந்திருக்கிற சொப்பனாவத்தையினு மறிகையால் இந்திரியங்களு மல்லனாய், சுழுத்தி துரியந் துரியா தீதங்களிலே அந்தக்கரணங்களும் பிராணவாயுவும் அற்றிருக்கையால் அந்தக்கரணங்களுக்கும் பிராணவாயுவுக்கு மந்நியனாய், விழித்தபோது முன் பண்ணின காரியக் குறைகளைப் பண்ணலும் அறிதலுஞ் செய்கையாற் கணிகனுமல்லாமல், தேகத்திற் கப்புறத்திலே யிருக்கின்ற பதார்த்தத்தைக் கிரகிக்கையால் அணுபரிமாணனும் மத்திய பரிமாணனுமல்லாமல், தானே யொன்றையு மறியமாட்டாம லிருக்கையாற் சுதந்தரனுமல்லாமல், சுகதுக்கங்களாற் பலவகைப்பட் டிருக்கையா லொருவனுமல்லாமல், சுகதுக்க பலத்தைப் புசிக்கையாற் கர்த்தாவுமல்லாமல், நித்தியனாய் வியாபகனாய் அசுதந்தரனாய் அநேகனாய் அகர்த்தாவாய் மலத்தினாலே தடைபட்ட ஞானசொரூபியா யிருக்கிறவனென வறிக.

இந்த ஆன்மா அந்தக்கரணங்களுக்கு அந்நியனு யிருந்தாலும் இராசாவும் மந்திரியுங் கூடியிருக்குமாறு போல அந்தக்கரணங்களுடன் விடயபோக நிமித்தங் கூடிக்கொண்டிருப்பன் ; மலத்தாற் றடைபட்ட ஞான சொரூபியாகையால் ஐந்தவத்தையைப் பொருந்தி யிருப்பன்.

இவ்வாறு ஓர் ஆன்மா வுண்டென்பதற்குப் பிர மாணம் : தொழிலைப் பொருந்தியிருக்குந் தேகாதிகள் சடமாகையாற் கடாதிகளைப்போலத் தாமே சேட்டிக்க மாட்டா ; இவற்றைச் சேட்டிக்கிறவ னெவனே அவனே ஆன்மா வென்பதாம்.

இனி ஆன்மாவிற்குக் கேவலம், சகலம், சுத்தமென ஆணவ மாயை சிவசத்திகளான் மூன்றவத்தை வரும்.

இவற்றுள், **கேவலாவத்தை**யாவது:— தேகாதிக ளொன்றுமற்று, குணமற்று, தொழிலற்று, போக மற்று, கர்த்தாவாகையற்று, மைக்குண் மணிபோல ஆணவமலத்தினுலே மூடப்பட்டு ஓரறிவுமற்று, வியாபி யாயிருக்கும் அவதரம்.

**சகலாவத்தை**யாவது:—பஞ்சகோச பெத்தனுய், அதனுலே பரிச்சின்னனுகிக் கிஞ்சிஞ்ஞனுய், அநாதி கன்மத்துக்கீடாய் அனேக யோனிகளிலுஞ் சஞ்சரித்து விடயங்களைப் புசிக்கும் அவதரம்.

**சுத்தாவத்தை**யாவது:— இருவினையொப்பும் மல பரிபாகமுஞ் சத்திநிபாதமும் வந்த காலத்துச் சரியை கிரியை யோக ஞான பாதங்களை யுணர்ந்த குருகடா

கூத்திணுலே மும்மலங்களையும் நீங்கிச் சச்சிதானந்த சிவமாக விளங்கும் அவதரம்.

இனி, இந்த ஆன்மாக்கள் அதமரான சகலர், மத்திமரான பிரளயாகலர், உத்தமரான விஞ்ஞானகலரென மூவகைப் படுவர்.

இவருட் **சகலராவார்:**— ஞானக்கிரியையைத் தடுக்கும் ஆணவ மலத்தையும், அது சிறிது நீங்குத னிமித்தமாக மாயாகாரியமாகிய கலாதிகளையும், போகத்தின் பொருட்டுக் கன்மமலத்தையு முடையவராக விருப்பர்.

**பிரளயாகலராவார்:**—ஞானக்கிரியைகளைத் தடுக்கும் ஆணவ மலத்தை யுடையவர்களாய், கன்மபரிபாகத்திணுலே காலாதிகளைத் தங்கள் வசம்பண்ணிக்கொண்டு ஈசுராத்துவாவிற் போகத்திற்கேதுவான கன்மத்தையு முடையவர்களாய், இவ்வாறு ஆணவங் கன்ம மென்னு மிருமலபந்தரா யிருப்பர்.

**விஞ்ஞானகலராவார்:**—ஆணவமலத்திலே தடைபட்ட ஞானக்கிரியையுடையவர்க ளாதலால் இல்லையென்பதற்கொத்த ஞானக்கிரியை யுடையவர்களாய் ஒருமலத்தரா யிருப்பர்.

இந்த மூவகை ஆன்மாக்களும் மாயையினுடைய அடியென்னு மான்மதத்துவ மிருபத்து நான்கிலும், நடுவென்னும் வித்தியாதத்துவம் ஏழிலும், முடிவினு மிருப்பர். விஞ்ஞானகேவலர் அனுக்கிரகம் பெற்றதற்குப் பின் சிவதத்துவங்களிலே யிருப்பரென வறிக.

---

## பாசவிலக்கணம்

பாசம் ஆணவம்,திரோதாயி,சுத்தமாயை, அசுத்த மாயை, கன்மமென வைந்தாம்.

இவற்றுள், ஆணவமலமாவது:— நித்தியமாய் ஒன்றாய், விபுவாய், அநாதியாய், ஆன்மாக்கடோறும் ஞானத்தைத் தடுக்கும் எண்ணிறந்த சத்திகளையுடைய தாய், செம்புக்குக் களிம்புபோலச் சகசமா யிருக்கும். இதற்குப் பரியாய நாமமாவன:— பசுநீகாரம்,[1] பசுத் துவம்,[2] மலம்,[3] அஞ்சனம்,[4] அவித்தை,[5] ஆவிருதம்,[6] மூலமலம்,[7] மிருத்தியு,[8] தமசு,[9] சென்மபீசம்,[10] ஆவரணம்,[11] அசுத்தி,[12] மோகம்,[13] சகசமலம்,[14] மூர்ச்சை,[15] பாசம்,[16] பந்தம்,[17] அஞ்ஞானம்,[18] திமிரம்,[19] க்ஷயம்,[20] வியாகதம்,[21] சடம்,[22] நிரோதம்,[23] கிலாபகம்,[24] ஆணவம்[25] எனப் பலவாம்.

---

[1]ஆன்மாவிற்கு மூடுபனி. [2]ஆன்மாவின் றன்மையா யிருப்பது. [3]அழுக்கு. [4]களங்கம். [5]அறிவின்மை. [6]பிரச்சன்ன படம்போல மறைப்பது. [7]அடிவேராகிய அழுக்கு. [8]மரணக் குறி. [9]தன்னையுஞ் சிவத்தையு மறியவொட்டாத அந்தகாரம். [10]சனிப்பதற்கு மூலமாயிருப்பது. [11]பித்திகைபோல மறைப் பது. [12]சுத்தமில்லாதது. [13]மயக்கத்தைப் பண்ணுவது. [14]இயற்கையாயுள்ளது. [15]செயலற்றுக் கிடத்தலைச் செய்வது. [16]கயிற்றை யொத்திருப்பது. [17]கட்டுவது. [18]அவித்தை. [19]தமசு. [20]குறைவு செய்வது. [21]கேடு செய்வது. [22]அறி வில்லாதது. [23]தடையாயுள்ளது. [24]வாடுந் தன்மையைச் செய் வது. [25]வியாபகமாகிய வுயிரை யணுத்தன்மைப் படுத்துவது.

இவ்வாறாகிய ஆணவமலம் உண்டென்பதற்குப் பிரமாணம்: ஆன்மா ஒன்றினாலே யாவரிக்கப் பட்ட சர்வஞ்ஞனாக வேண்டும்; அங்ஙன மன்றி, அற்பவறிவனாகக் காண்கையாற் சிவனைப்போல மல ரகிதனுமல்லன். ஆன்மாவுக்கு அற்பவறிவியல்பன்று, எல்லாருக்கும் ஒருபடித்தன்றாய் ஞானமிருக்கை யாலும் மோக்ஷத்திலே சர்வஞ்ஞனாகக் கேட்கப்படு கையாலும். இவை யன்றியும், அசுசியாய்த் துக்க மயமா யிருக்கிற விடய போகங்களிலே யாசை வரு வதும் ஆணவமலத்தினாலே யென்பது.

இனித் திரோதாயியாவது:—ஆணவஞ் சட மாகை யால் இந்த ஆணவசத்திகளைச் சேட்டிப்பது, ஞான மயமாகிய ஆதிசத்தியேயாம்; இந்த ஆதிசத்தியானது பாசகன்மத்துக்குப்பின் செல்லுகையா லிதையும் பாச மென் றுபசாரமாகச் சொல்லப்படும்.

இனிச் சுத்தமாயையாவது:—நித்தியமாய், ஒன் றாய், சடத்துவாவையும் வியாபித்திருப்பதாய், சட மாய், சுத்தமாய், சூக்குமை முதலிய வாக்கு நான்குக் கும், சடத்துவாக்களுள்ளே மந்திரம் பதம் வன்னங் களை யென்னும் நான்குக்கும், சிவதத்துவ முதலிய சுத்த தத்துவங்கள் ஐந்துக்கும், அவைகளிலுள்ள புவனங்களுக்கும், அந்தப் புவனங்களிலுள்ள விஞ்ஞா னகலருக்கும், அந்தப் புவனநாயகராகிய மந்திரமகேசு ரர் மந்திரங்களென்னும் அனுசதாசிவராதியோர் தனு வாதிகட்கும் முதற்காரணமாய், சிவனுக்கு வைப்புச் சத்தியென்று சொல்லப்படும் பரிக்கிரக சத்தியாயிருப்

பது. இதற்குக் குண்டலி, குடிலை, மகாமாயை, ஊர்த்துவமாயை, விந்துவென இவைபோலப் பரியாயநாமங்களு முண்டு. இஃதுண்டென்பதற்குப் பிரமாணம் இங்ஙனங் கூறிய காரியங்கள் காரணமின்றி யுண்டாகாமையாம்.

இனி ஊர்த்துவபாகமாகிய சுத்த மாயையினுடைய அதோ பாகமாகிய அசுத்தமாயையாவது:—நித்தமாய், ஒன்றாய், தன்னுடைய காரியங்களைக் காரணமின்றி வியாபித்திருப்பதாய், வஸ்துரூபமாய், கன்மத்துக் கிருப்பிடமாய், அசுத்தமாய், சகலர் பிரளயாகலர் என்னும் ஆன்மாக்களுக்குப் பொதுவாய், பிரளய காலத்திலே தேகாதிக ளற்றிருக்கிற ஆன்மாக்களுக்குச் சிருட்டி காலத்திலே காலாதி தத்துவங்கள் தூல சூக்கும முதலானவைக ளுண்டாவதற்குப் பிறப்பிடமாய், சிவனுக்குப் போகசத்தியாகிய பரிக்கிரக சத்தியாயிருப்பது. இதற்கு அதோமாயை, மோகினி முதலான அனேக பரியாய நாமங்க ளுண்டு. இவ்வாறு ஓர் அசுத்தமாயை யுண்டென்பதற்குப் பிரமாணம் இந்தக் காலாதிகாரியங்கள் மாயையாகிய வுபாதானமின்றி யுண்டாகாமை; மண்ணுண்டை யின்றிக் கடமுண்டாகாதது போல வென்க. கன்மஞ் சடமாகையா லான்மாவினிடத்தி விராது; இருக்கில், ஆன்மா சடமாகத் திரியும்; சுத்தமாயை கன்மத்துக்கு மேற்பட்டிருப்பதாற் சுத்தமாயையி லிராது; ஆகவே சங்காரகாலத்திலே இதி லிருக்க வேண்டுமென்பதறிக.

இனிக் கன்மமலமாவது:—மனோவாக்குக் காயங்களாற் பண்ணப்படுகையாற் கன்மமென்றும், பண்ணின

கன்மம் நசித்துப் பல முண்டாகுமட்டும் புவனத்திலும் மருத்தெண்ணெய் வாசனைபோலப் புத்தியிலுந் தங்கிக் கண்ணுக்குக் காணப்படாதிருக்கையால் அதிட்டமென்றும், தேகாதிகளைப் பலவகையா யுண்டாக்குகையாற் சனகமென்றும், எல்லாவற்றையுந் தரிக்கையாற் றாரகமென்றும், புசிக்கப்படுகையாற் போக்கிய மென்றுஞ் சொல்லப்படுவதாய், அத்தியான்மிக முதலிய துக்கத்திரயத்திற்குக் காரணமாய், ஆன்மஞானமு மாயாகாரியங்களுங் கூடின விடத்திலே யுண்டாகுகையாற் றன்மாதன்ம சொரூபமாய், பிரளயகாலத்திலே பக்குவப்படுவதாய், சிருட்டி காலத்திலே தேகாதிகளுக் கேதுவாவதாய், சங்காரகாலத்திலே மாயையிலே யிருப்பதாய்ப் புசித்தா லொழியத் தொலையாமலிருப்பது. இது காயிகம், வாசிகம், மானசமென மூவகைப்படும்.

இவற்றுட் காயிகமாவது:—தெய்வங்களைப் பூசித்தல் முதலிய புண்ணியங்களும், ஒருவனை யடித்தல் முதலிய பாவங்களுமாம்.

வாசிகமாவது:—வேதாகம ஞானசாத்திர புராண அடங்கன்முறை முதலிய திருமுறைகளை யோதுதல், ஓதுவித்தல், பொருளைக் கேட்பித்தல், வேதாகம மந்திரங்களை வாக்கு, மந்தம், மானதமாகச் செபித்தல் முதலிய புண்ணியங்களும், ஒருவனை வைதல் முதலிய பாவங்களுமாம்.

மானசமாவது:— முக்கூற் றறுவகைச் சமயத்திற் கதிதப்பட்ட அகச்சமயமாறினுட் சைவர்கள் பண்ணும் அதோபாகமாகிய தியான நீக்கிச் சைவசித்தாந்திகள்

ஐந்தெழுத்தும், திருநீறும், கண்டிகையும் பொருளாகக் கொண்டு, பரசிவத்தின் தடத்தலக்கணை சொரூப லக்கணங்களை யறிந்து தியானித்தல் முதலிய புண்ணியங்களும், பிறருடைமையை யபகரிக்கச் சிந்தித்தல் முதலிய பாவங்களுமாம்.

இந்தக் கன்மஞ் சாதி யாயுப் போகங்களைக் கலந்து அகந்தை பண்ணி நிற்கும்; அஃதின்றி ஒருவர்க்காயினுந் தீர்க்காயுவும் நல்லசாதியும் நல்லபோகமும் இல்லை; புண்ணியத்தினாலே பாவமும் பாவத்தினாலே புண்ணியமு மழியா. ஆகம புராணவிதிப்படி பிராயச்சித்தம் பண்ணினாற் புசிப்பியாமற் போகும்; அவ்வண்ணம் பரிகாரஞ்செய்யாவிடில்ஆன்மா பாவ கன்மங்களுக்கு ரௌரவங் கும்பிபாக முதலிய துக்கக் கிலேசங்களை யனுபவித்துப் பாடாணம்போற் கிடக்கும். கன்மம் புசித்தாலொழியத் தொலையாது; புசிக்குமிடத்து இதாகிதங்களான் மேலைக்குக் கட்டுப்பட் டிருப்பதும் மனோவாக்குக் காயங்களா லுண்டாகையா லுற்பத்தியையும், புசித்துத் தொலைதலால் நாசத்தையு முடையதாம். இது தொன்று தொட்டு வருகையால் ஆற்றொழுக்குப் போலப் பிரவாகாநாதியாம். இந்தத் தன்மாதன்ம சொரூபமான கன்மத்துக்கு மூலகாரண கன்மம் ஆணவமாயைகளைப்போல நித்தியமாய்ச் சகசமாயிருக்கும்.

இப்படி யொருகன்மம் உண்டென்பதற்குப் பிரமாணமாவது:—இருவர் ஒத்த நிலத்திலே திருவள்ளுவர் குறளின்படி உழவு முதலியன சரியாகச்செய்து பயிரிட்டிருக்க, ஒருவனுக்கு விளைகின்றது மற்றொரு

வனுக்கு விளையாமற் போகின்றது. இதற்குக் காரணம் யாது? 'பண்ணிய பயிரிற் புண்ணியந் தெரியும்' என்றபடி புண்ணிய பாவ வன்மை மென்மையெனக்கூற நிற்குங் கன்மமாம். அன்றியும், ஒருவன் சுவர்க்கத்திலே சுகமனுபவிக்கின்றான், மற்றொருவன் நரகத்திலே துக்கமனுபவிக்கின்றான். இதற்குக் காரணம் யாது? அதுவே கன்மமாமென வறிக.

இனிச் சிருட்டி வரலாறாவது:— சுத்தமாயையினின்று சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென நான்கு வாக்குகளும்; சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை யென்னும் ஐந்து சுத்த தத்துவங்களு முண்டாம்.

அசுத்தமாயையினின்று மாயை, காலம், நியதி கலை, வித்தை, அராகம், புருடன் என ஏழு தத்துவங்களுண்டாம்.

பிரகிருதி மாயையிலே சித்தம், புத்தி, அகங்காரம், மனம், சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்ஙுவை, ஆக்கிராணம், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம், சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆகாயம், வாயு, தேயு, அப்பு, பிருதிவியென்னு மிருபத்து நான்கு தத்துவங்களுண்டாம்.

இனிச் சுத்தமாயையிலே **வாக்குகள் தோன்று மாறு**:—சத்தனுடைய சத்தி சுத்தமாயையைக் கலக்கிக் காரிய உன்முகமாய்க் கூடி நிற்கும்பொழுது சந்திர கிரணங் கூடும்போது சமுத்திரம் உப்பி ஒலியுண்டாவதுபோல ஒருநாதமுண்டாம். அந்த நாதம் பரசரீரத்தி

னுள்ளாக நாதமாத்திரையாய் விளங்குவதாய் எல்லா அர்த்தத்தையுஞ் சாமானியமாய் விளக்குவதாய், மூவகை யான்மாக்களுக்கும் ஞானப்பிரகாசத்திற் கேதுவாய், சூக்குமையென்னும் பேர்பெற்றிருக்கும்.

அது தானே விருத்தியாய்ப் பஞ்சவன்னங்களையுஞ் சூக்குமரூபமா யொடுக்கிநின்ற மயின்முட்டைக்கு ளிருக்கிற நீர்போலப் பிரிக்கப்படாத வன்னங்களை யுடைத்தா யுன்முகமா யர்த்தவிசேடம் விளங்காமற் சிந்தையிலிருக்கிற சத்தம் பைசந்தியாம்.

அதன் விருத்தியாய், விந்துவின் அதோபாகத்தி லுண்டாகிய அம்பிகை, வாமை, சேட்டை, இரௌத்திரி யென்னும் நான்கு சத்திகளினுலும் ஜயை, விஜயை, அசிதை, பராசிதை, நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிரிதையென்னும் பதினாறு சத்திகளினு முண்டாகிய புத்தியிலிருக்கும் அகாரமுதலிய ஐம்பத்தோரக்கரங்களையும் அவற்றினடைவையு முடைத்தாய், செவிக்குக்கேட்கப்படாததாய், உள்ளேயுணரப்படுவதாய், உதானவாயுவின் றொழிற்பாடுபெற்றியிருப்பதாய்க் கண்டத்தி லடங்கியிருக்குஞ் சத்தம் மத்திமையாம்.

பிராணவாயு வியாபாரமாய், மேலே யெழுந்து தன் செவிக்கும் பிறர் செவிக்குங் கேட்க யோக்கியமாய், அர்த்தத்தைச் சொல்லுவதாயிருக்கிற சத்தம் வைகரியாம்.

இந்த நான்கு வாக்குகளும் நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளைப் பற்றுக்கோடாகச் சார்ந்து ஐவகைப் பட்டுச் சிவதத்துவ முதலிய பஞ்ச தத்துவங்களினு மிருக்கும்; மூவகை யான்மாக்களிடத்திலும் பந்தித் திருக்கும். இந்த வாக்குகளைத் தனக்கு அந்நியமாக ஒருவன் சிவஞானத்தாற் கண்ட காலத்திலே அவை ஆணவமலத்துடனே நீங்குமல்லது முன்னர் நீங்கா. இந்த வாக்குகளை அவன் அந்நியமாகக் காண்கின்முன் அவன் நித்தியனாய் நினைப்பும் மறப்பு மற்றவனாய் விகாரமில்லாதவனாய்ச் சுதந்தரனாய் ஞானானந்த சொரூபியாவன். எவ்வாறென்னில், சூரியப்பிரகாசத்தால் அந்தகாரமும் நட்சத்திரப் பிரகாசமும் போவது போலச் சிவஞானப்பிரகாசத்தால் அஞ்ஞானமாகிய ஆணவமலமும் இந்த வாக்கு ரூபமாகிய விஞ்ஞானமும் போம். இது சுத்தமாயையிற் சுத்தமுண்டாமாறு சொல்லப்பட்டது.

சுத்தமாயையில் தத்துவங்களாகிய அர்த்தவடிவென்றும், சப்தவடிவென்றும் இருவிதமாகிய அத்துவாக்களில், அர்த்தவடிவாகிய சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை யென்னும் ஐந்திற் சிவதத்துவமாவது சுத்தமாயையினுடைய முந்தின விகாரமெனவறிக. இதில் சூக்குமையென்னும் வாக்கு மிகுத்துக் காமிகாதி சொரூபமாயிருக்கிற சிவாகமவழி முத்தியை இச்சிக்கிறவரிடத்திற் சிவஞானவிளக்கம் அதிகம், அதினுஞ் சிறிததிகம், மிகவுமதிகம் என்பதை விளக்கும். இன்னும் அவ் வாக்கு ஈசுரசத்திக்கு ஏவல் செய்து கொண்டிருக்கும். இன்னும் அச் சிவதத்துவம், மலத்தைப் போக்குஞ் சத்திக்குஞ் சிவபதத்தையடைவிக்குஞ்

சத்திக்கு முபாதியாயிருக்கிற இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினியென்னுங் கலைகளுக்கு இருப்பிடமாய், நாதமென்று சொல்லப் படுவதாய், தன்மரூபமாயிருப்பதெனவறிக.

இனிச் சத்திதத்துவமாவது காமிகாதி அபர ஞானத்தையுடைய பைசந்தி யென்னும் வாக்கு விருத் திக்குக் காரணமாய், ஆன்மாவுக்குச் சமுசார நிவிர்த் திக்குப் பகையாயிருக்கிறதிற் பிரவிர்த்திக்கை, இதில் விஷயகோசரமாயிருக்கிற பசுஞானத்தை விடுத்துச் சிவஞானத்தைச் சாட்சாத்காரமாய்ப் பிரகாசிப்பிக்கிற தற்குத் தாபத்திரய முதலான சர்வதுக்கங்களையும் போக்குகை ஆகிய இவற்றைப் பண்ணுகையால் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை யென்னுஞ் சத்திகளுக் கிருப்பிடமாய், விந்துவென்று சொல்லப்படுவதாயிருக்கிற சிவதத்துவ காரியமாம்.

இனிச் **சாதாக்கியதத்துவமாவது** காமிக முத லான அபரஞானத்தையுடைய மத்திமை யென்னும் வாக்கு விருத்திக் கிருப்பிடமாய், காமிகமுதலான தந்திரங்கள் வேறுகிறதற்குக் காரணங்களாயிருக்கிற பிரணவாதிகட்குஞ் சாமீப்பிய முதலானவற்றை யடைந்தோர்க்குந் தனுகரணாதிக்குக் காரணமாய், சத்திதத்துவ காரியமாம்.

இனி ஈசுரதத்துவமாவது அநந்தேசுராதிகட்கும் அவர்களை யுபாசிக்கையால் அவர்களுடைய பதத்தை யடைந்திருக்கிறவர்கட்குந் தனு கரண புவனாதியை யுண்டாக்குவதாய், சதாசிவதத்துவ காரியமாம்.

இனிச் சுத்தவித்தியாதத்துவமாவது காமிக முத லான ஆகமங்களுடைய வைகரி யென்னும் வாக்கு விருத்திக் கிருப்பிடமாய், சத்த கோடி மகாமந்திரங் களுக்கும், கணேசுரர்களுக்கும், இந்திரன் முதலான திக்குப் பாலகர்களுக்குந் தனுகரணபுவன முதலான வற்றின் காரணமாய், ஈசுவரதத்துவ காரியமா யிருப் பதாம்.

பரமான்மா ஞானமாத்திரத்துடன் கூடியிருக்கிற பொழுது அவற்குச் சிவமென்று பெயர்; அவனிருக்குந் தத்துவத்திற்குஞ் சிவமென்று பெயர். தொழின்மாத் திரத்துடன் கூடியிருக்கிறபொழுது அவற்குச் சத்தி யென்று பெயர்; அவனிருக்குந் தத்துவத்திற்குஞ் சத்தியென்று பெயர். ஞானக்கிரியைகள் சமமா யிருக்கக் கூடியிருக்கிறபொழுது அவற்குச் சதாசிவ மென்று பெயர். அவனிருக்குந் தத்துவத்திற்குஞ் சதாசிவமென்று பெயர். கிரியையதிகமும் ஞானங் குறைவுமாயிருக்கக் கூடியிருக்கிற பொழுது அவற்கு ஈசுரமென்று பெயர்; அவனிருக்குந் தத்துவத்திற்கும் ஈசுரமென்று பெயர். ஈசுரமெனினும் மகேசுர மெனினு மொக்கும். ஞானம் அதிகமும் கிரியை குறை வுமாயிருக்கக் கூடியிருக்கின்ற அப்பொழுது அவற்குச் சுத்தவித்தையென்று பெயர்; அவனிருக்குந் தத்து வத்திற்குஞ் சுத்தவித்தையென்று பெயர். அப் பரமான் மாவுக்கு இவ் வைவகைத் தத்துவமுஞ் சுதந்தரவடிவ மாம்.

மாயாதத்துவமாவது ஆன்மாவுக்கு மயக்க வறி வைப் பண்ணுவது.

காலமாவது மாயையினின்றுந் தோன்றி, இலவந் துடி முதலியவற்றிற்குக் காரணமாய்; இம்மட்டென்று போகத்தை யளவிடுவதாய்; எல்லை, பலம், புதுமைகளைப் பண்ணுவதாய்ச் செல்கால நிகழ்கால மெதிர்கால முதலாக அனேக பேதப்பட்டிருப்பது.

நியதியாவது காலத்தின்பின் மாயையினின்றுந் தோன்றி ஒருவன் செய்த கன்மபலத்தை விஷயம் நன்றாயிருக்கிறதென்று புசியாமலும், தான் செய்த கன்மபலத்தை விஷயம் நன்றாயிருக்கவில்லையென்று புசியாமலிராதபடியும், ஒருவன் தேகாதிகள் மற்றொருவனுக்குப் போக ஏதுவாகாதபடியும், அவனவன் செய்த கன்மம் அவனவனை நுகரும்படியும் இராசாக்கினை போல நிச்சயம் பண்ணி நிறுத்துவது.

கலையாவது நியதியின்பின் மாயையினின்றுந் தோன்றுவதாய், ஆணவத்தை ஏகதேசத்தின் நீக்கி ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்குவதாய், மாயாகாரியமாயிருப்பது. இஃதுண்டென்பதற்குப் பிரமாணம் இதுவே ஞானக்கிரியைகளை விளக்கும், மற்றையொன்றினும் அவ் விளக்கம் வாராதென்பது.

வித்தையாவது கலையினுண்டாவதாய் ஆன்மாவுக்கு ஞானசத்தியை விளக்குவதாய்ப் போகத்தைக் கிரகிக்கிறதற்குக் காரணமாயிருப்பது.

இராகமாவது வித்தையிலே யுண்டாவதாய், ஆன்மாவின் இச்சா சத்தியை விளக்குவதாய், புத்தி தருமமான அவ்வவ் விஷயங்களி லாசையை யுண்டாக்குவது.

புருடதத்துவமாவது இங்ஙனங் கூறிய கலை முதலான பஞ்ச தத்துவங்களையும் பொருந்திப் பஞ்ச கஞ்சுகமுடைய உயிரே முற்கூறிய இச்சா ஞானக் கிரியைகளை மருவிப் போகத்து உன்முகமாய் நிற்பது.

இனிப் பிரகிருதியாவது கலையினின்றும் ஸ்ரீகண்ட பரமேசுரனா லுண்டாக்கப்பட்டதாய், குணமுதலான இருபத்துநான்கு தத்துவங்களுக்குக் காரணமாய் பிரிக்கப்படாமற் குணங்களைச் செவ்வையாகக் கூட்டி யிருப்பதாய், விபரீதவுணர்வை யுடையதாகிய அவிச் சையைத் தோற்றுவிப்பது. இதற்கு மூலப்பிரகிருதி யென்றும் பெயர்

இனிக் குணதத்துவமாவது பிரிக்கப்பட்ட குணங்கள் சரிவரக் கூடியிருக்கு மவதரம். ஆகையாற் பிரகிருதிக்குங் குணதத்துவத்திற்கும் பேதமில்லை ; இக் குணதத்துவஞ் சாத்துவிகம், ராசதம், தாமத மெனமூன்றாய், ஒவ்வொன்றும் முத்திறப்பட்டு ஒன்பது வகையாயிருக்கும்.

சித்தமாவது பிரகிருதியி னதோபாகமே ; அது போகத்திற் சாமானியமாயிருக்குமாறு சிந்திக்கப் பண்ணும். குணம், சித்தம், பிரகிருதியென்ற மூன்றும் அவதர நாமங்களாம்.

புத்தியாவது குணதத்துவத்தினின்றும் உண் டானதாய், உயிர்கள் செய்த புண்ணியபாவங்கள் தன்பாற் சார இருவினைக்கீடாக வந்த விடயத்தை

அஃதின்னதென நிச்சயித்து நிற்பது. இது தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதன்மம், அஞ் ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் என்னும் எட்டினுக்குங் காரணமாயிருப்பது.

அகங்காரமாவது என்னோடொப்பவர் ஒருவரு மில்லையென்னும் அகந்தைக்குக் காரணமாய், யான் எனதென்னும் அபிமானத்துக்குக் காரணமாய்,புத்தியி னின்றும் உண்டானதாயிருப்பது ; இது சாத்துவிக முதலிய குணங்களுடைய மிகுதியினால் தைசதம், வைகாரிகம், பூதாதிகமென மூன்று பேதப்படும். இவை மன முதலியவற்றிற்குக் காரணமாயிருக்கும்.

மனமாவது தைசதாகங்காரத்தி லுண்டானதாய், சங்கற்பமென்னும் நினைவும் விகற்பமென்னும் சந்தேக நினைவும் பிறத்தற்கிடமாய், இந்திரியங்கள் வழியாய் வரும்பொருள்களைப் பற்றி யறியு மறிவாம். இன்ன விசேடணத்துடனே கூடினது இன்ன விசேடிய மென விஷயீகரித்து வரும் நிச்சயத்தையும் பண்ணு வது; இதுதான் சுரோத்திராதி இந்திரியங்களிலே கூடினவளவிலே சத்தாதிஞானங்களை யுண்டாக்கும் ஆகையால் விபுவுமன்று ; பஞ்சாவதானி யிடத்தே யொருங்கே ஞானம் வருகையால் அணுவுமன்று; விரிதல் குவிதலையுடைய மகத்தாம்.

இனிச் சுரோத்திராதியாவன:-முற்கூறிய தைசதா கங்காரத்தினின்றுஞ் சுரோத்திராதி யிந்திரியங்க ளுண்டாம் ; தன்னை வந்தடைந்த சத்தத்தைக் காது

வெளியி லாகாசமாயிருந்து கிரகிக்குந் தத்துவஞ் சுரோத்திரம்.

தன்னை வந்தடைந்த பரிசத்தைத் துவக்கினிருந்து கிரகிக்குந் தத்துவம் துவக்கு.

நயன ஒளி வழியாகப் போய் ரூபத்தைக் கிரகிக்குந் தத்துவம் சட்சு.

நாக்கினிடமாக வந்தடைந்த ரசத்தைக் கிரகிக்குந் தத்துவம் சிங்ஙுவை.

மூக்கினிருந்து பிருதிவியின் கந்தத்தைக் கிரகிக்குந் தத்துவம் ஆக்கிராணம்.

காது முதலான தானங்க ளிருக்கவுஞ் செவிடர் முதலோர்களுக்குச் சத்தாதிகள் அறியப்படா திருக்கையால் அந்தத் தானங்களில் இந்திரியமில்லை யென்க.

இவற்றிற் கந்நியமாய், வைகாரிகாகங்காரத்தினின்றும் வாக்கு முதலான கன்மேந்திரியங்க ளுண்டாம்.

இவற்றில், நாக்கினிடமாக நின்று சொற்களை வசனிக்குந் தத்துவம் வாக்கு; கால்களிடமாக நின்று நடத்தல் ஓடல் முதலியவற்றைச் செய்விக்குந் தத்துவம் பாதம்; கைகளினிடமாக நின்று ஈதலேற்றல் முதலிய தொழில்களைச் செய்யுந் தத்துவம் பாணி; குதத்திலே நின்று மலவிசர்க்கங்களைப் பண்ணுந் தத்துவம் பாயு; குய்யத்திலே நின்று ஆனந்தத்தைப் பண்ணுந் தத்துவம் உபஸ்தம்.

இனிப் பூதாதிகாகங்காரத்தினின்று பஞ்சதன் மாத்திரையுண்டாம்; அர்த்தந் தரும் விசேடமின்றி யிருக்குஞ் சாமானிய சத்தம் சத்த தன்மாத்திரை; குளிர்ச்சி உஷ்ணமுதலான விசேடங்களற்றுச் சாமானிய சத்தமும் சாமானிய பரிசமுமாயிருப்பது பரிச தன்மாத்திரை; வெண்மை, கருமை, செம்மை முதலிய விசேடங்களற்று ரூபசாமானியமாய்ச் சத்தபரிசரூபமாயிருப்பது ரூப தன்மாத்திரை; மதுரமுதலான விசேடமற்று ரசசாமானியமாய்ச் சத்த பரிச ரூபமாயிருப்பது ரச தன்மாத்திரை; நற்கந்தந் துர்க்கந்தமாகிய விசேடமற்றுக் கந்தசாமானியமாய்ச் சத்த பரிச ரூப ரச கந்தமாயிருப்பது காந்த தன்மாத்திரை.

இவ்வாறாகிய பரிசமுதலான தன்மாத்திரைகளில் ஒவ்வொரு குணம் அதிகமதிகமாகக் கூடியிருக்கையால், வாயுவாதி பூதங்களிலும் ஒவ்வொரு குண மதிகமெனவறிக.

ஆகாசாதிபூதங்களுடைய சூக்குமாவத்தைச் சத்தாதி தன்மாத்திரையினின்றும் ஆகாசாதி பூதங்களுண்டாம்.

ஆகாயம் சத்த தன்மாத்திரையி லுண்டானதாய், இடங்கொடுப்பதாய், தூலமாய், சுத்தமாய், வன்னரூபமாய், சத்தத்தைக் குணமாயுடையதாயிருக்கும்.

வாயு சத்தத்துக்குப் பேரி முதலான நிமித்தமொழித்துக் குணியல்லதாய், பரிசதன்மாத்திரையின் ஆரம்பிக்கப்பட்டதாய், உஷ்ணமும் அநுஷ்ணமு மல்

லாத பரிசத்தையுடையதாய், சத்தத்தையுடையது. இது பிராணன், அபானன் முதலாக அனேக பேதமுடையதாய், அசைத்தலென்னுந் தொழிலைப் பண்ணும்.

அக்கினி ரூபதன்மாத்திரையி லுண்டானதாய், சிவந்தரூபத்தையுடையதாய், பிரகாசரூபமாய், உஷ்ணபரிசத்தையுடையதாய், சத்தத்தை யுடையதாய், பாகத்தைப் பண்ணுவதாயிருக்கும்.

அப்பு ரசதன்மாத்திரையி லுண்டானதாய், வெண்ணிறத்தையும் ரசத்தையுங் குளிர்ந்த பரிசத்தையுஞ் சலசல சத்தத்தையு முடையதாய், நெகிழ்ச்சியாய், தூள் முதலியவற்றை வலிய வுண்டையாகப் பண்ணுவதாயிருக்கும்.

பிருதிவி கந்ததன்மாத்திரையி லுண்டானதாய், சுகந்த துர்க்கந்தங்களையும் மதுரமுதலான ஆறு ரசங்களையும் வெண்ணிறமுதலிய நானாவித வன்னங்களையுஞ் சூரியன் அக்கினி முதலியவைகளின் கூட்டரவின் பாகத்திலுண்டாகிற உஷ்ணமும் அநுஷ்ணமு மல்லாத பரிசத்தையுங் கடகட சத்தத்தையு முடையதாய், கடினதாரக ரூபமாயிருக்கும்.

இந்தப் பஞ்சபூதங்கள் ஒன்றில் ஒன்றுண்டாகாது; காரணகுணங் காரியத்தில் வரவேண்டுமென்னும் முறையா லென்க.

தத்துவமாவது பிரளயமட்டாக விருக்கிற தாகையாற் சரீராதிகள் தத்துவமல்ல பூதவிகாரமாம்.

இச் சிவதத்துவ முதற் பிருதிவிதத்துவ மீறான முப்பத்தாறுஞ் சாதாரணம் அசாதாரணமென் றிரு வகைப்படும். சாதாரணமாவது புவனத்திற் காதார மாய்த் தூலமாயிருக்கும்; அசாதாரணமாவது சூக்கும ரூபமாய் ஞானக்கிரியையை விளக்குவதாக ஆன்மாக்க டோறும் வெவ்வேறாயிருக்கும்.

இனிச் சுத்தமாயாகாரியம் ஐந்திற்குஞ் சிவதத் துவ மென்றும், சுத்ததத்துவமென்றும், சுத்தாத்துவா வென்றும், பிரேரககாண்டமென்றும் பெயர்.

மாயாதிக ளேழுக்கும் வித்தியாதத்துவ மென் றும், ஈசுரதத்துவ மென்றும், சுத்தாசுத்ததத்துவ மென்றும், மிச்சிராத்துவா வென்றும், போககாண்ட மென்றும் பெயர்.

சித்தமுதலான விருபத்துநான்கு தத்துவங்க ளுக்கும் ஆன்மதத்துவமென்றும், அசுத்ததத்துவ மென்றும், அசுத்தாத்துவா வென்றும் போக்கியகாண்ட மென்றும் பெயர்.

இந்தத் தத்துவங்களால் வருங் காரியங்கள் சாதா ரணமென்றும், அசாதாரணமென்றும், பொதுச்சிறப் பாகிய உபயரூபமென்றும் மூவகைப்படும். இவற்றிற் புவனங்க ளெல்லார்க்கும் போக வேதுவாகையாற் சாதாரணமாம். பஞ்சதன்மாத்திரைகள், மன அகங் கார புத்திகள் இந்த எட்டுத்தத்துவங்களின் கூட்டர வினா லுண்டான புரியட்ட தேகம் அவரவர்களுக்குப் போக வேது வாகையால் அசாதாரணமாம். இந்தப்

புரியட்ட தேகத்தினின்றும் ஆன்மா ஓருலகத்திற் போக்குவரவுடையவ னவன். ஸ்திரீகள் முதலியவருடைய தூல தேகம் அவர்களுக்குப் போகத்துக்கு ஏதுவுமாய்க் கணவனுக்குப் போக்கியமுமா யிருக்கையால் உபயரூபமாம். இவ்வாறு மற்றைத்தேகங்களும் உபயரூபமெனவறிக.

இனித் தூலதேகமானது சூக்குமபூதங்களை விட்டு நீங்காமல் மாதாபிதாக்களுடைய சுரோணித சுக்கிலங்களுடனேயுண்டாம்.

அவ்வாறுண்டாகுமாறு: எலும்பு, மாமிசம், மயிர், துவக்கு, நகம், தந்தம், நரம்பு இவை முதலியன சூக்கும பிருதிவியிலும்; மூத்திரம், ரத்தம், கபம், வேர்வை, சுக்கில மிவை முதலியன சூக்குமமான அப்புவிலும்; இருதயபாகங் கண்களிற் பித்தபாக முதலானவை சூக்குமமான அக்கினியிலும்; பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் இவை பத்துஞ் சூக்கும வாயுவிலும்; ஆகாசமாவது சூக்குமாகாசத்திலுமுண்டாம். இவ்வாறு சூக்கும பூதத்தினின்றும் தூல தேக முண்டாமெனவறிக.

இவ்வாறு ஆணவமாயை கன்மங்களாலே தத்துவ தாத்துவிகமான சகலபந்தங்களுடனுங் கூடின சகலருக்கு முன்சொன்ன கேவலாதியவத்தைகள் சாக்கிராதிகளோடுகூடிப் பதினைந்து பேதப்படும்.

கேவலாவத்தை யைந்திற்கும் சகலாவத்தை யைந்திற்கும் இலக்கணம் வருமாறு:—

கேவலம் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீத மென்றைந்து வகை யாகும்.

கேவல சாக்கிரமாவது ஆன்மா முப்பத்தாறு தத்துவங்களுடனுந் தாத்துவிகங்க ளறுபதுடனுங் கூடிச் சகல விடயபோகங்களையு மனுபவித்துக் கொண்டிருக்கும் வேளையில் போகவேதுவான கன்ம மில்லா திருக்கையாற் பிரேரககாண்டமாகிய சுத்ததத்துவங்களைந்தும், போககாண்டமாகிய காலாதிகளேழும், பிருதிவிமுதலான பூதங்களைந்துமாகப் பதினேழும் நீங்கச் சுரோத்திர முதலாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு முதலாகிய கன்மேந்திரியங்கள் ஐந்தும், சத்தமுதலாகிய தன்மாத்திரைகள் ஐந்தும், தாத்துவிகமாகிய வசனாதிகள் ஐந்தும், பிராணன் முதலாகிய தாத்துவிகமாகிய வாயுக்கள் பத்தும், மன முதலாகிய அந்தக்கரணங்கள் நான்குமாகிய முப்பத்து நான்கு கருவிகளுடன் க்ஷேத்திரிகனாகிய ஆன்மாவுங் கூடி முப்பத்தைந்தாய்ச் சாக்கிரத்தானமாகிய லலாடத்திலே நின்று மேற்கூறிய பிரேரிக்கிற தத்துவமும் புசிக்கிற தத்துவமுந் தாரகமாகிய பூதங்களும் நீங்குகையால் ஆணவமல மேலிட்டுக் கண்டுங் காணாமற் கேட்டுங் கேளாமல் மயங்கியிருக்கு மவதரமாம். இஃது அறிவில்லாச் சாக்கிரம்.

புறம்பே விடயங்களைக் கிரகிக்கும் ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்து மாகிய இப் பத்து நீங்க நின்ற சத்தாதியைந்தும், வசனாதியைந்தும், பிராணாதிவாயு பத்தும், மனாதி அந்தக்கரண நான்கும்,

கேத்திரிகனுமாகிய விருபத்தைந்துங் கண்டத்தானத்திலேநின்று சாக்கிராவத்தையிலே நின்றனுபவித்த போகத்தை நினைக்கவும் அக்காலத்திலே வருஞ் சூக்கும தேகபோகமாகிய யானையேறி மாலைசூடுதல் முதலியவற்றை யனுபவிப்பது கேவல சொப்பனம்.

முற்கூறிய சொப்பனவத்தையிற் கூடியிருந்த விருபத்து நான்கு கருவியில் இருபத்திரண்டு நீங்க நின்ற சித்தமும் பிராணவாயுவுங் கேத்திரிகனுங் கூடி இருதயத்தானத்திலே நின்று சுகமாய்த் தூங்குவது கேவல சுழுத்தி.

சித்தமு நீங்க உச்சுவாசம் நிச்சுவாசம் பண்ணிக்கொண்டு தேகத்துக்குக் காவலாயிருக்கிற பிராணவாயுவுடன் கேத்திரிகனுங் கூடி நாபித்தானத்திலே நின்று ஒன்றுந் தெரியாமற் றூங்குவது கேவல துரியம்.

பிராணவாயுவை நீக்கிக் கேத்திரிகனாகிய ஆன்மாவொருவனே தனித்து மூலாதாரத்திலே பாணவமலத்துடனே கூடி ஓரறிவு மற்றிருப்பது கேவல துரியாதீதம். இந்த அதீதாவத்தை தானே நித்திய கேவலாவத்தையாம். இவற்றிற்குக் கீழாலவத்தை யென்றும் பெயராம்.

சகலமும் கேவலம் போலவே ஐந்து வகையாகும்.

இலாடத்தானத்திலே நின்று ஆன்மா எல்லா விடயங்களையும் அனுபவிக்கிற வேளையில் கல்லெறி முதலியவைகளாலுஞ் சிசுமரணங் கேட்பது முதலியவைகளாலுந் திடுக்கிடப் பிராணவாயுவுஞ் சலியாமல் ஒன்றையு மறியாமல் மூர்ச்சித்து மயங்கி நின்ற வவதாஞ் சாக்கிராதீதம்.

அற்பமாகப் பிராணவாயு சலித்துப் பெருமூச் செறிவது சாக்கிரத்திற் றுரியம்.

சித்தத்துடனும் பிராணவாயுவுடனுங் கேத்திரி கன் கூடித் துக்கமாத்திரத்தை யறிவது சாக்கிரத்திற் சுழுத்தி.

ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணாதி வாயுக்கள் பத்தும், அந்தக்கரண நான்குமாக விருபத்து நான்குடன் கேத்திரிகனுங் கூடி யிருபத்தைந்தாய்த் துக்கம் இதனால் வந்த தென்கிற துர்ச்சிந்தையுடனே துக்கத்தை யனுபவிப்பது சாக் கிரத்திற் சொப்பனம்.

தத்துவ தாத்துவிகங்களெல்லாவற்றினுங் கூடிச் சர்வ விடயங்களையும் அனுபவிப்பது சாக்கிரத்திற் சாக்கிரம்.

சகலாவத்தை யுடையவனாகிக் கலையினால் விளக் கப்பட்ட ஞானக்கிரியா சொரூபமான சைதன்னியத் தையும் வித்தையினால் விளக்கப்பட்ட விடய ஞானத் தையும் அறிபவனாய், இராகத்தினால் விடயத்தில் இச்சை கொள்பவனாய், குணரூபமான பிரதானத்தி னாலும் புத்திமுதலான கரண சமூகத்தினாலும் அவற் றின் காரியங்களாலும் பேதிக்கப்படும் புருடனாய், நியதி யுடன் கூடுகையாற் றான் புசிக்கும் போகங்களிலே நியமிக்கப் பட்ட காலத்திலே நியமிக்கப் பட்ட போகத்தில் மோகிதனாய், இவ்வாறு தத்துவகலா பந்தங்களுடையனாய், கிஞ்சிஞ்ஞத்துவமுள்ளவனாய்,

தால் சூக்குமதேகங்களுடன் கூடினவனாய், மாயா போகங்களிலே கூடித் தன்வயனாகித் தேகாதிகளை தானென்று விசாரித்து மூடனாகித் திரிகிற காலத்தில் வேதபாகியமான சமயங்களிலேயிருந்து பண்ணின புண்ணிய விசேடங்களினால் வேதத்துக்குள்ளாயிருக்கிற சமயங்களையடைந்து, அவைகளிலிருந்து பண்ணின புண்ணிய விசேடங்களினால் அவற்றின் விசிட்டமான வைதிக சைவசமயத்தை யடைந்து, சமயவிசேட தீக்கை பெற்றுச் சாலோகாதிகளை யடைந்து, அங்கே விரத்தி வந்து, புண்ணியபூமியிற் செனித்து, கிரியை முதலியவற்றை யனுஷ்டித்து அவைகளினால் இருவினை யொப்பும் மலபரிபாகமும் வர, நிவிர்த்திமுதலிய மந்திர சத்தியும் பதிய, நல்லாசிரியனைத் தேடுங்கால் வாக்கு மனாதீதமாயிருக்கிற சிவமே கிருபையினாலே கிருத காடிந்நியம்போல ஆசாரியனாகக் காணப்பட்டுத் திருநோக்கம் முதலியவற்றால் மந்திராதி பஞ்சாத்துவா கற்பித நிவிர்த்தியாதி கலைகளைச் சோதித்துப் பாச க்ஷயம் பண்ணிப் பரிபாகத்துக்கீடாகச் சுத்தாத்துவாவி லிருக்க யோக்கியனாகச்செய்து சச்சிதானந்த சிவமாகப் பண்ணும்.

உத்தம விலக்கணனான ஆசாரியன் உத்தமவிலக்கணனாயிருக்கிற சீடனுக்குச் சாத்திரத்திலே சொன்னபடி சமய விசேட நிருவாண அபிடேகங்களைப் பண்ணுவன். எவன் ஆலோகனஞ் செய்த மாத்திரத்தில் பரமானந்த முண்டாகும் அவனே ஞானாசாரியனென வறிக.

அவ் வாசாரியன் சத்திநிபாதமுடைய தீவிரதர பக்குவனுக்குச் சாம்பவதீக்கை பண்ணுவன்.

சாம்பவதீக்கையாவது ஞானதீக்கை கிரியா தீக்கை யென அனேக பேதமாயிருக்கிற நிருவாண தீக்கையினும் வேறாய்ச் சிவர்களுடைய தாதான்மியத்தை விளக்குவதென வறிக.

இவ்வாறு சாம்பவதீக்கை பெற்றுச் சிவ சொரூபமான ஆசாரியனால் 'இந்திரிய வேடருடன் கூடி நம்மில் அநந்நியமான உனது சொரூபத்தை யறிந்தாயில்லை, நாமே நீயாவா' யென்று போதிக்கப்பட்டவன் தான் சிவனைக் காட்டினும் அநந்நிய னென்று சிந்தித்தல் தெளிதல் செய்து, ஆணவாதி பாசங்களை நீக்கி, சச்சிதானந்த சொரூபமான சிவத்தையே அநந்நியமாகச் சாட்சாத்கரித்து, அதிலே யழுந்தி யதுவேயாய்க் காசமற்ற கண் சூரியப்பிரகாசத்துடன் கலந்து பின்னொன்றுங் காணாததுபோலப் பசுகரணஞ் சிவகரண மாகையாலே நின்மல சாக்கிராதியான சுத்தாவத்தைகளைந்தையும் பொருந்துவன். அவை வருமாறு:—

நின்மல சாக்கிரமாவது நின்மலசாக்கிராவத்தைக்குத் தானமாகிய இருதயத்திலே சிவசத்தியுடனே கூடுதலால், உப்பளத்திலே விழுந்தது உப்பாமாறு போல ஜீவிபூதமாய், அகர வுகர மகார விந்து நாதங்களுடன் கூடிய மனம், அகங்காரம். புத்தி, சித்தம், உள்ளம் என்னும் அந்தக்கரணமைந்துடன் கூடினவாகிய இந்திரியங்களாற் காணப்பட்ட சத்தாதி விட

சுன்னுகம்

## அ· குமாரசுவாமிப் பிள்ளையவர்கள்

சொல்லியது

முன்னூல் விரிபொருள் யாவுஞ் சுருக்கி முறைவிளக்கி
நன்னூ லிதுவெனச் சைவப்ர காசன நன்குசெய்தார்
தென்னூ லொடுவட நூற்கட லுண்டு செகம்புகழப்
பன்னூ லியற்றிய நீர்வேலிச் சங்கர பண்டிதரே.

---

சைவ உதயபானு பத்திராதிபராகிய

ஊரெழு

## சு. சரவணமுத்துப் பிள்ளையவர்கள்

சொல்லியது

கற்றூர் புகழ்சைவ சித்தாந்தப் பாலின் கடல்கடைந்து
மற்றூர் நினைக்கருஞ் சைவப்ர காசன மாவமிழ்தை
நற்றூ ரணிச்சைவ நற்புல வோர்க்கு நயந்தளித்தான்
வற்றூ வறிவுடைச் சங்கர பண்டித மாதவனே.

---

பண்டிதரவர்களுடைய

மாணுக்கராகிய

ஆவரங்கால்

## சி· குமாரவேற் செட்டியாரவர்கள்

சொல்லியது

பரவியபல் சமயநூல் பலவுங் கற்றுப்
பரசமய கோளரியாய்ப் பழிப்பில் சீர்த்தி
விரவுசிவா கமமுழுதுந் தேர்ந்த நாதி
மேவுதிரி பொருளுண்மை விளங்கக் கண்டு

கருதிடுசை வப்பிரகா சனமே யன்றிக்
காசினியிற் பலநூல்க ளுரைகள் செய்தான்
மருவெனக்குஞ் சிலநூல்க ளுணர்த்தி சீர்வை
மன்னியசங் கரதேவ வள்ள லுனே.



உ

திருச்சிற்றம்பலம்

# சைவப்பிரகாசனம்[1]

## சாதாரண பீடிகை[2]

### க. இலக்கணம்

#### இலக்கண இயல்பு

இலக்கணப் பிரமாணங்களால் வஸ்து சித்தியாம் என்பது நியாய சாஸ்திர சித்தம்.[3]

> இலக்கணம்-குறிப்பது, குறி, அடையாளம். பிரமாணம் - அளவை. சித்தி-முடிபு, பெறுதி. சித்தம்-முடிக்கப்பட்டது, பெறப்பட்டது.

---

1. பிரகாசனம்-விளக்கம்.

2. சாதாரண பீடிகை-பொது விஷயங்களைக் கூறும் பகுதி.

3. இப்பொருளை **ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள்** மாபாடியத்தில் நான்காஞ் சூத்திரவுரையில் '**பிரமாணம்** இலக்கணம் இரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்று' என அருளிச் செய்வதறிக.

அவற்றுள், இலக்கணமாவது சிறப்பியல்பு; அது பொருளைப் பிறவற்றின் வேறுபடுத்துக் குறிப்பது.[1] இலக்கணத்தாற் குறிக்கப்படுவது இலக்கியமாம்.

ஆ என்னும் இலக்கியத்திற்குத் தாடிமுதலியன[2] வுடைமை இலக்கணம்; அக்கினிக்குச் சூடுடைமை இலக்கணம்.

இலக்கணத்தைக் கெடுக்குங் குற்றங்கள் அவ்வி யாத்தி, அதிவியாத்தி, அசம்பவம் என மூன்றும்.[3]

> **அவ்வியாத்தி - வியாபித்தலின்மை. அதிவியாத்தி - மேல்வியாபித்தல். அசம்பவம்-இருத்தலின்மை.**

அவற்றுள், அவ்வியாத்தியாவது, இலக்கணம் இலக்கியத்தின் ஏகதேசத்தில்[4] இருத்தலின்மை; எங்ஙனம்,—ஆவிற்குக் கபில நிறமுடைமை.

அதிவியாத்தியாவது, இலக்கணம் இலக்கியமல் லாததன்கண்ணும் இருத்தல்; எங்ஙனம்,—ஆவிற்குக் கோடுடைமை.

---

1. இதனைத் தருக்க சங்கிரகவுரை (2-வது பகுதி) யிற்கண்டு தெளிக.

2. முதலியன என்றதனாற் கோடு முதலியன கொள் ளப்படும். நியாயப் பிரகாசத்தில் முதற் பரிச்சேதத்துக் காண்க.

3. இம்மூன்றும் தருக்க சங்கிரகவுரை (2-வது பகுதி)யிற் கூறப்படுதல் காண்க.

4. ஏகதேசம் - ஒரு புடை.

அசம்பவமாவது, இலக்கணம் இலக்கிய முழுதி னும் இருத்தலின்மை; எங்ஙனம்,—ஆவிற்கு ஒற் றைக்குளம்புடைமை.

இம் முக்குற்றங்களும் நீங்கிய இயல்பே இலக்க ணம்; இலக்கிய முழுதினும் வியாபித்து, இலக்கிய மல்லாததின் வியாபியாத தன்மையே இலக்கணம் என்பது முடிபு.

## இலக்கண விபாகம்[1]

இவ்விலக்கணம் சுவரூபமும், தடஸ்தமும், அதத்துவியாவிருத்தமும் என்னும் மூவகையுடைத்து.

> சுவரூபம் - தன்னியல்பு. தடஸ்தம் - அயலிடத்திலி ருப்பது. அதத்துவியாவிருத்தம் - அது வல்லாத திலிருந்து திரும்பியது.

அவற்றுள், சுவரூபமாவது, இலக்கியப் பொரு ளிலே இயற்கையாக இருக்கும் இலக்கணம்; எங்ங னம்,—ஆன்மாவிற்கு அறிவு தொழிலுடைமை.

தடஸ்தமாவது, பிறிதோர் பொருளின் சார்பு பற்றி இலக்கியப் பொருளில் இருக்கும் இலக்கணம்; எங்ஙனம்,—ஆன்மாவிற்குச் சிற்றறிவுடைமை, அல் லது சரீரப் பிரேரகத்தன்மை.[2]

---

1. விபாகம் - பிரிவு.
2. பிரேரகத்தன்மை - செலுத்துதற்றன்மை.

அதத்துவியாவிருத்தமாவது, மற்றைப் பொருளிலிருந்து நீங்கி இலக்கியத்திலிருக்கும் இலக்கணம்; எங்ஙனம்,—ஆன்மாவிற்குச் சரீர முதலியவற்றின் வேறுந்தன்மை. அதத்துவியாவிருத்தம் தடஸ்தத்துள் அடங்குதலுந் தகும்.

இங்ஙனங்கூறிய இலக்கணத்திற்குப் பயன் பொருள்களை வேறுபடுத்தி வழங்குதலாம்.

---

## உ. பிரமாணம்

### பிரமாண இயல்பு

பிரமாணமாவது, பிரமிதியினது கருவியாம். பிரமிதியாவது, பிரமாதா பிரமேயத்தை ஐயந்திரிபின்றி உள்ளபடி யறிதல். அதுவே மெய்யறிவு.

> பிரமாதா-அளப்பவன். பிரமாணம்-அளவைக்கருவி. பிரமிதி - அளத்தல்; பிரமையுமது. பிரமேயம் - அளக்கப்படுவது.

ஐயமாவது,[1] ஒருபொருளை மாறுபட்ட பலபொருளாக உணர்தல்; எங்ஙனம்,—இவ்வுருக் குற்றியோ புருடனோ என்றல்.

---

1. நிருவிகற்பமாய் அறிந்த பொருளை இது யாதோ வென ஒன்றிற்றுணிவு பிறவாது ஆராயும் ஆன்மாவினது ஞானசத்தி. 'கண்ட பொருளை யிரட்டுறவே கருதலையம்' என்பது சிவஞான சித்தி அளவை ௩.

திரிபாவது,[1] ஒருபொருளை மற்றொரு பொருளாக உணர்தல்; எங்ஙனம்,—இப்பியை வெள்ளியென்றல். ஐயமுந் திரிபும் பொய்யறிவாம். மெய்யறிவின் வாசனையாற்றோன்று முணர்வு மெய்ந்நினைவு; பொய்யறிவின் வாசனையாற்றோன்று முணர்வு பொய்ந்நினைவு.

உள்ளபடியறிதலாவது, அறியப்படும் பொருளில் இருந்த பிரகாரமுடையதாக அறிதல்.

இனிக் கருவியாவது,[2] காரணங்களுட் சிறந்ததாகிய காரணம்.

கருவி- கரணம்.

காரணமாவது,[3] பிறிதொன்றிற்கு ஆதலின்றி நியதமாய்க் காரியத்துக்கு முன்னிற்றலுடையது.

காரியமாவது,[4] முன்னில்லாததாகிப் பின்னுள்ளதாவது.

---

1. நிருவிகற்பமாயறிந்த பொருளை அதனோடொப்புமையுடைய வேறு பொருளாக மயங்கி நிச்சயிக்கும் ஆன்மாவினது ஞானசத்தி. 'திரியவே கொண்டறிவாம்' என்பது சிவஞான சித்தி அளவை ௩

2. 'கரணமாவது சிறப்புக்காரணம்' என்பது தருக்க சங்கிரகம் (௩௧-வது பகுதி)

3. 'காரணம் காரியத்துக்கு நியதமாய் முன்னிற்பது' என்பது தருக்க சங்கிரகம் (௩௰-வது பகுதி)

4. 'காரியம் முன்னின்மைக்கு எதிர்மறை' என்பது தருக்க சங்கிரகம் (பகுதி ௩௧.)

அந்தக்காரணம் முதலும், துணையும், நிமித்தமும் என மூவகைத்து.[1]

முதல்- உபாதானம், சமவாயி. துணை - சககாரி.

காரியத்தோடு சமவாயமுடைய காரணம் முதற் காரணம்.

சமவாயம் - ஒற்றுமை, இயைபு.

காரியந் தோன்றுதற்கு உபகாரகமாய் நிற்குங் காரணந் துணைக்காரணம்.

உபகாரகம்- உதவுவது, உதவி.

தன்வசமாய் நின்று, காரணங்களைப் பிரேரித்துக் காரியத்தைத் தோன்றுவிக்குங் காரணம் நிமித்தகாரணம்.

வசம் - தலைமை, இச்சை. பிரேரித்தல் - ஏவுதல், செலுத்தல்.

எங்ஙனம்,—குடமாகிய காரியத்துக்கு மண் முதற்காரணம்; திரிகை முதலியன துணைக்காரணம்; குயவன் நிமித்த காரணம்.

---

1. 'காரியகாரணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம்' என்பது சிவஞான சித்தி முதற்சூத்திரம் திருவிருத்தம் கஅ.

2. 'பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணை நிமித்தம்' என்பது சிவஞான சித்தி முதற்சூத்திரம் திருவிருத்தம் கஅ.

# பிரமாண இயல்பு

இம்மூன்று காரணங்களுள், எவ்வாற்றானுஞ் சிறந்தகாரணமே கருவியாம்.[1]

கருவியானது, அவாந்தரவியாபாரமும் பலனும் உடையது; எங்ஙனம்,—தறித்தற்கருவியாகிய குடாரத்துக்கு மரத்தோடியைதலாய கூட்டமே அவாந்தர வியாபாரம்; தறிக்கலே பலன்.

அவாந்தர வியாபாரம்- இடைத்தொழில்.

பிரமாதாவினது சிற்சத்தியே பிரமிதித்தொழிலினது கருவியாதலின், அதுவே பிரமாணம்.[2]

சிற்சத்தி- அறிவாற்றல்.

சிற்சத்தியாகிய பிரமாணத்துக்கும், பிரமேயப் பொருட்கு முளதாகிய ஞாபக ஞாப்பியத்தன்மைச் சம்பந்தமே அவாந்தர வியாபாரம்: அச்சம்பந்தத்தாற் றோன்றும் பிரமேயவறிவே பிரமிதியாம்: அதுவே பலன்.

ஞாபகம் - அறிவிப்பது. ஞாப்பியம் - அறிவிக்கப் படுவது.

---

1. 'இங்ஙனங்கூறிய மூவகைக் காரணத்துள் யாது சிறந்தகாரணம் அதுவே கரணம்' என்பது தருக்கசங்கிரகம் (சஉ-வது பகுதி)

2. ஆன்மசிற்சத்தியே பிரமாணமென்பது சிவஞானசித்தியளவையிலும், சிவசமவாதவுரைமறுப்பில் 'ஈண்டு பக்கப் போலி' யென்னுந் திருவிருத்தவுரை மறுப்பிலும் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் அருளிச் செய்திருத்தலாற்றெளிக.

தடையில்லாத சிற்சத்தியானது, பிறபொருளி னுபகாரத்தை வேண்டாது தன்னியற்கையால் விளங் கிப், பிரமேயங்களெல்லாவற்றையும் நிருவிகற்பமாக அளந்தறியும்; அவ்வறிவு அனுபூதி யெனப்படும்.

அனுபூதி - காட்சி, எதிருற்றுணர்தல்.

அவ்வனுபூதி சுவானுபூதியும், பரானுபூதியும் என இரண்டாம்.

சுவானுபூதி - தற்காட்சி. பரானுபூதி - பிறகாட்சி.

## பிரமாணவிபாகம்

பெத்தான்மாவாகிய பிரமாதாவினது சிற்சத்தி பாசத்தாற் றடுக்கப்பட்டிருத்தலாற், பிறபொருளின் உபகாரத்தை வேண்டித், தத்துவங்களால் விளங்கி, இந்திரியம், இலிங்கம், சத்தம் என்னும் மூன்றினோடு கூடுதலால், முறையே பிரத்தியக்ஷம், அனுமானம் ஆகமம் என்னும் பெயருடைய மூவகைப் பிரமாண மாகித் தன்னெல்லைக்கியன்ற பிரமேயங்களை நிரு விகற்ப சவிகற்பமாக அளந்தறியும்.[1]

---

1. இவ்வுண்மையை 'மருவிய பொறியிலொன்று மா பூதமைந்திலொன்றுங், கருவிகளொன்கு நீங்காக்கலாதிகளோந் துங்கூட, லொரு பலனுகரும்' என்னுஞ் சிவப்பிரகாசத்திரு விருத்தத்தாலறிக. நிருவிகற்பசவிகற்பங்களின் இலக்கணங் களைப் 'பெயர்சாதி குணமே கன்மம் பொருளெனவைந், துண்டவ் விகற்பவுணர்வனுக்குப் பொருளினுண்மை மாத் திரத்தின், விண்டலில்லா வறிவாகும் விகற்ப மில்லாக் காட்

அச்சிற்சத்திக்கு உபகாரமாகிய இந்திரியம், இலிங்கம், சத்தம் என்பவையும் உபசாரத்தால் முறையே பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம் என்னும் பெயர் பெறும்.

ஆகமப்பிரமாணம், சத்தப்பிரமாணம் என்பன பரியாயமாம். இந்திரியம் - பொறி. இலிங்கம் - குறி. சத்தம் - சொல், உரை. பிரத்தியக்ஷம் - காண்டல். அநுமானம் - கருதல். ஆகமம் - உரை, வரவு. உபசாரம் - சார்ச்சி வழக்கம்.

இப்பிரமாணங்களாற் றோன்றும் பிரமிதிகள் முறையே பிரத்தியக்ஷம், அநுமிதி, சாத்தம் எனப் பெயர் பெறும்.

பிரத்தியக்ஷம் - காட்சியுணர்வு. அநுமிதி - கருத்துணர்வு. சாத்தம் - உரையுணர்வு.

இம்மூன்றும் முறையே அநுபூதி, யுக்தி, சுருதி எனவும்படும்.

இவற்றிற்குக் காட்சி, கருத்து, கேள்வி என்பன பிரதிபதம்.

## பிரத்தியக்ஷம்

இனிப்பிரமாண மூன்றனுட், பிரத்தியக்ஷப் பிரமாணமாவது, பிரத்தியக்ஷப் பிரமிதியின் கருவியாம்;

---

சியே'என்னுஞ் சிவஞான சித்தியளவை யியற்றிரு விருத்தத்திற்குச் சிவஞான சுவாமிக ளருளிச்செய்த வுரையாலறிக. மேற்பிரமிதி கூறுமிடத்துங் கண்டு கொள்க.

சிற்சத்தியோடு கூடிய இந்திரியமே பிரத்தியக்ஷப் பிரமிதியின் கருவியாதலிற் பிரத்தியக்ஷப் பிரமாண மெனப்படும். பிரத்தியக்ஷப் பிரமிதியாவது, இந்திரிய விடய சம்பந்தத்தாற்[1] றோன்றும் அறிவு. ஈண்டு இந்திரியங் கருவி ; இந்திரிய விடய சம்பந்தம் வியாபாரம் ; பிரத்தியக்ஷப் பிரமிதி பலன்.

இந்திரியங்களாவன,—மனம், செவி, தோல், கண், மூக்கு, நாக்கு என்னும் ஆறுமாம். விடயங்களாவன திரவியங்களும், அவற்றின் குணங்களும், கருமங்களும், அவற்றின் சாதியும், விசேடமும், சமவாயமும், அவற்றி னின்மையுமாம்.[2]

இந்திரியம் தனக்கு யோக்கியமான விடயத்தை யே கவரும்.

யோக்கியம்- தக்கது, ஏற்றது.

அகவிந்திரியமாகிய மனத்துக்கு உணர்வு, விருப்பு, முயற்சி, இன்பம், துன்பம், வெறுப்பு என்னும் அகப்பொருள்கள் நேரே யோக்கியமாம்.

ஏனைப்புறப்பொருள்கள் அந்த அந்த இந்திரியத் துவாரத்தால் யோக்கியமாம்.

---

1, இந்திரியத்திற்கும் பொருளுக்கும் உளதாகிய தொடர்பு.

2. இப்பொருள்கள் எழும் 'திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவமெனப் பதார்த்தங்கள் எழு' எனத் தருக்க சங்கிரகத்துக் கூறப்பட்டன. (பகுதி க.)

புறவிந்திரியங்களுட் கண்ணுந் தோலுமல்லாதன வற்றிற்குத் திரவியம் யோக்கியமாகா.

ஒளித்துணையோடு கூடிய கண்ணுக்குப் பருமை யுந் தோற்றிய உருவமுமுடைய திரவியங்களும், யோக்கியத்[1] திரவியங்களிலுள்ளனவாகிய உருவம், எண், அளவு, வேற்றுமை, சம்யோகம்,[2] விபாகம்,[3] முன்மை, பின்மை, சினேகம், நெகிழ்ச்சி, வேகம் என்னுங் குணங் களும், யோக்கியத் திரவியத்தினியைந்த கருமமும், யோக்கியப் பொருள்களையடைந்த திரவியத்தன்மை உருவத்தன்மை முதலிய சாதியும், யோக்கியப்பொருள் களின் சமவாயமும்[4] யோக்கியமாம். பரமாணுப்பரு மையுடையதன்று; ஆன்மா முதலியன உருவமுடை யன அல்ல; பிராச சரீர முதலியன தோற்றிய உருவ முடையன அல்ல; ஆகலின் அவை கண்ணுக்கு யோக் கியமல்ல.

தோலுக்குப் பருமையுந் தோற்றிய பரிசமு முடைய திரவியங்களும், உருவத்தின்வேறாய்க் கண் ணுக்கு யோக்கியமாகி யோக்கியத் திரவியத்திலிருக் குங் குணங்களும், யோக்கியத்திரவியத்திலுள்ளபரிச மும், யோக்கியத்திரவியத்தின் கருமமும், யோக்கியப் பொருளின் சாதியுஞ், சமவாயமும் யோக்கியமாம். பரமாணுப்பரியதன்று; ஒளி தோற்றிய பரிசமுடைய

---

1. யோக்கியம் - தகுதி
2. சம்யோகம் - சேர்க்கை
3. விபாகம் - பிரிவு
4. சமவாயம் - ஒற்றுமை

தன்று; வாயுவினளவு கண்ணுக்கு யோக்கியமன்று; ஒளியினளவு யோக்கியப்பொருளின் இருப்பதன்று; ஆதலின் அவை யோக்கியமல்ல.

மூக்குக்குப் பரியதன்கணுள்ள தோற்றியகந்தமும், அதன் சாதியும், அவ்விரண்டின் சமவாயமும் யோக்கியமாம். பரமாணுவின் கந்தம் பரியதிலுள்ளதன்று; வச்சிரமணி[1] முதலியவற்றின் கந்தம் தோற்றியதன்று; ஆதலின் அவை யோக்கியமல்ல.

நாக்குக்குப் பரியதிலுள்ள தோற்றிய இரசமும், அதன்சாதியும், அவ்விரண்டின் சமவாயமும் யோக்கியமாம். பரமாணுரசம் பரியதிலுள்ளதன்று; வச்சிரமணி முதலியவற்றின் இரசம் தோற்றியதன்று; ஆதலின் அவை யோக்கியமல்ல.

செவிக்குச் சத்தமும், அதன்சாதியும், அவ்விரண்டின் சமவாயமும் யோக்கியம்.

இந்திரியவிடயங்களின் சம்பந்தம்[2] சம்யோகமும் சம்யுத்த சமவாயமும், சம்யுத்த சமவேத சமவாயமும், விசேடண விசேடியத் தன்மையும் என நான்காம்.[3]

---

1. வச்சிரமணி - வைரம்.

2. 'சம்பந்தமெனினும் இயைபெனினும் யாப்பெனினும் கிழமையெனினும் ஒக்கும்' என்பது தருக்க சங்கிரகம் (பகுதி உஉ.)

3. இங்கே கூறப்பட்ட நான்கனோடு சமவாயமும் சமவேத சமவாயமுமாகிய இரண்டுங் கூட்டித் தருக்க சங்கிரகத்து அறுவகைப் படுமென்று கூறப்பட்டது (பகுதி சச.)

இவற்றிற்கு முறையே புணர்ச்சி, புணர்ந்ததினி யைபு, புணர்ந்ததினியைந்ததினியைபு, அடைமூத லாதல் என்பன பிரதிபதம்.

திரவியங்கள் சம்யோகத்தானும், குணமுங் கரும முந் திரவியத்தின் சாதியுஞ் சம்யுத்தசமவாயத்தா னும், குணகருமங்களின் சாதி சம்யுத்த சமவேத சம வாயத்தானும், சமவாயமும் இன்மையும் விசேடண விசேடியத்தன்மைச் சம்பந்தத்தானுங் கவரப்படும்.

எங்ஙனம்,—கண்ணுற் குடத்தைக் காணுங்காற், சம்யோகசம்பந்தம். குடத்தினது கருமை முதலிய உருவத்தைக் காணுங்காற், சம்யுக்த சமவாயம்; கண்ணோடு சம்யுத்தமான குடத்தில் உருவஞ் சமவா யித்தலால். குடத்தினுருவத்தினுள்ள உருவத்தன்மை யாகிய சாதியைக்காணுங்கால், சம்யுத்தசமவேத சம வாயம்; கண்ணோடு சம்யுத்தமான குடத்தில் உருவஞ் சமவேதம், உருவத்தில் உருவத்தன்மை சமவாயித்த லால். நூல்களில் ஆடைச்சமவாயத்தைக் காணுங்கால், விசேடண விசேடியத்தன்மைச் சம்பந்தம்; கண்ணோடு சம்யுத்தமான நூல் விசேடணம், நூலில் ஆடைச்சம வாயம் விசேடியம் ஆதலால். பூமியிற் குடமின்மை யைக் காணுங்காலும், அதுவே சம்பந்தமாம்.

இந்திரிய விடய சம்பந்தத்காற்றோன்றும் அறி வாகிய பிரத்தியக்ஷப் பிரமிதி நிருவிகற்பமுஞ், சவிகற் பமுமென இருவிதமாம்.

நிருவிகற்பம்-விகற்பமில்லாதது. சவிகற்பம்—விகற் பமுடையது. விகற்பம்-வேறுபாடு, பேதம்.

நிருவிகற்பப் பிரமிதியாவது, விசேடணத்தோடு கூடுதலின்றிப், பொருண்மை மாத்திரத்திற்றோய்ந்து, இஃதொன்று எனத்தோன்றுமறிவு.

சவிகற்பப்பிரமிதியாவது, நாம, சாதி, குண, கருமத், திரவியங்க ளாகிய விசேடணங்களோடு கூடி "இவன் தேவதத்தன், இவன் பிராமணன், இவன் கரியன், இவன் ஓதுவான், இவன் பொன்னன்" என்றிவ்வாறு தோன்றுமறிவு.

> விசேடணம்-வேறுபடுத்துவது, அடை. விசேடியம்-வேறுபடுத்தப்படுவது, முதல்.

இப்பிரத்தியக்ஷப் பிரமிதியின் கருவியாகிய இந்திரியம் புணர்ந்த சிற்சத்தியே, பிரத்தியக்ஷப் பிரமாணம்.

## பிரத்தியக்ஷப் போலி

இனிப் பித்தம், படலம்,[1] தூரம், இருள் முதலிய குற்றங்களோடு கூடிய இந்திரியம், பிரத்தியக்ஷப் போலி[2] எனப்படும்.

## அனுமானம்

அனுமானப் பிரமாணமாவது, அனுமிதியின் கருவியாம்[1] சிற்சத்தியோடு கூடிய இலிங்கம். அனுமிதி

1. பித்தம், படலமென்பன கண்ணி லுண்டாகும் நோய்கள்.

2. பிரத்தியக்ஷப்போலி-பிரத்தியக்ஷ ஆபாச மென்றுங் கூறப்படும்.

யின் கருவி ஆதலின், அனுமானப் பிரமாணம் எனப் படும்.

இலிங்கம், குறி, சாதனம், ஏது என்பன பரியாயம்.
அனுமிதி-கருதலறிவு.

அனுமிதியாவது, இலிங்கத்தின் பராமரிசத்தாற் றோன்றும் அறிவு.[2] ஈண்டு இலிங்கவுணர்வு கருவி; பராமரிசமே வியாபாரம்; அனுமிதி பலம்.

பராமரிசம் - ஆராய்ச்சி.

இலிங்கமாவது, வியாத்தி வலியால் மறைந்த பொருளை உணர்த்துவது.

வியாப்பிய மாவதே இலிங்கமெனினு மொக்கும். எங்ஙனம்.—புகை தீக்கு இலிங்கம்.

வியாத்தி-வியாபித்தல், செறிதல், உடனிகழ்ச்சி.

வியாத்தியாவது, சாதனத்துக்குச் சாத்தியத் தோடுளதாகிய இயற்கைச் சம்பந்தம்.[3]

---

1. 'அனுமானமாவது அனுமிதிக்குக் கரணம்' என்பது தருக்க சங்கிரகம (பகுதி சரு.)

2. 'அனுமிதி ஆராய்ச்சியாற் றோன்றும் ஞானம்' என்பது தருக்க சங்கிரகம் (பகுதி சரு.)

3. 'வியாத்தி யாண்டுப்புகை ஆண்டுத்தீ யென நியதமான உடனிகழ்ச்சி' யென்பது தருக்க சங்கிரகம் (பகுதி சரு.)

வியாப்பிய வியாபகங்களினியற்கைச் சம்பந்தமே வியாத்தி எனினுமொக்கும்.

எங்ஙனம்,—யாண்டுப்புகை ஆண்டுத்தீ எனப் புகைக்குத் தீயோடுள்ள சம்பந்தம்.

> சாதனம்-முடிப்பது. சாத்தியம்-முடிக்கப்படுவது. வியாப்பியம்-வியாபிக்கப்படுவது, குறைந்திருப்பது. வியாபகம்—வியாபிப்பது, மிகுந்திருப்பது.

புகை வியாப்பியம்; தீ வியாபகம்.

இலிங்கத்தின் பராமரிசமாவது, வியாப்பியமாகிய இலிங்கம் பக்ஷத்தில் இருக்கின்றதென்று உணர்தல்:[1] எங்ஙனம்.—தீயால் வியாபிக்கப்படுவதாகிய புகை மலையிலே உண்டு என்னுமுணர்ச்சி. அப்பராமரிசமே வியாபாரம்.

> பக்ஷம் - பக்கம், சார், சாத்தியஸ்தானம்.

இலிங்க பராமரிசத்தாற் றோன்றும் அறிவு பக்ஷத்திற் சாத்தியம் இருக்கின்றது என்னுமறிவாம்:[2] எங்ஙனம்,—மலையிற் றீயுண்டென்னுமறிவு. அதுவே பலமாகிய அனுமிதியாம். அது சவிகற்பமே.

---

1. 'ஆராய்ச்சி வியாத்தி யடுத்த பக்கதருமத்தன்மை ஞானம்' என்பது தருக்க சங்கிரகம் (பகுதி ௪௫.)

2. 'அவ்வாராய்ச்சியாற் றோன்றியது இம்மலை தீயுடைத்தென்னுமுணர்வு' என்பது தருக்க சங்கிரகம் (பகுதி ௪௫)

இவ்வனுமானம் சுவார்த்தமும், பரார்த்தமும் என இரண்டாம்.[1]

சுவார்த்தம் - தன்பொருட்டு. பரார்த்தம் - பிறர் பொருட்டு.

ஒருவன் தானே அடுக்களை முதலியவற்றிற் சிறந்த பிரத்தியக்ஷத்தாற் புகைதீக்களின் வியாத்தியைக் கவர்ந்து, மலையின் அண்மையிற் சென்று, மலையிற் றீயின் ஐயங்கொண்டு, அம்மலைமேற் புகையைக் கண்டுழி: "யாண்டுப்புகை ஆண்டுத்தீ" என்னும் வியாத்தியை நினைப்பன்; அதன்பின் மலை தீயால் வியாபிக்கப்பட்ட புகையுடையது என்னும் உணர்வாகிய இலிங்கபராமரிசந் தோன்றும்; அதுவே சுவார்த்தானுமானம்: அதனால் இம்மலை தீயுடைத்து என்னுஞ் சாத்தியசித்தியுணர்வாகிய அனுமிதி தோன்றும்; அது சுவார்த்தானுமிதி எனப்படும்.

தான் புகையாற் றீயை அனுமிதித்துணர்ந்து, பிறரை உணர்த்துதற்குப் பிரயோகிக்கும் அனுமான வாக்கியமே பரார்த்தானுமானம். வாக்கியம் இலிங்க

---

1. இங்கே கூறப்பட்ட இருவகை யனுமானங்களது இயல்பையும் 'பக்க மூன்றின் மூன்றேதுவுடைய பொருளைப் பார்த்துணரத், தக்க ஞானந் தன்பொருட்டாம் பிறர்தம் பொருட்டாமனுமானந், தொக்க விவற்றாற் பிறர்தெளியச் சொல்லலாகும்' என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாலும், தருக்கசங்கிரகத்து சஅ, சஎ, சஅ பகுதிகளாலும் அறிக.

பராமரிசம் அன்றாதலின், வாக்கியம் அநுமிதிக்கு நேரே கருவியன்றாம் ஆயினும், அநுமிதிக்குக் கருவியாகிய இலிங்க பராமரிசத்தைப் பயக்குஞ் சாத்த உணர்வைப் பிறப்பிக்குஞ் சின்ன[1] மாதலின் அவ்வாக்கியம் உபசாரத்தால் அநுமானம் என்று சொல்லப்படும்.

அநுமான வாக்கியமானது பிரதிஞ்ஞை, ஏது, உதாரணம் என்னும் மூன்று அங்கமுடையதாம்.[2]

> பிரதிஞ்ஞை - மேற்கோள், சம்மதி. உதாகரணம்- எடுத்துக்காட்டு.

அவற்றுட் பிரதிஞ்ஞையாவது, பக்கத்தைச் சாத்திய முடையதாக உணர்த்துவது; ஏதாவது, மூன்றாமுருபேனும்,[3] ஐந்தாமுருபேனும்[4] ஈறாக நின்று இலிங்கத்தை உணர்த்துவது. உதாகரணமாவது; வியாத்தியோடு கூடிய திருட்டாந்தத்தை உணர்த்துவது.

> திருட்டாந்தம் - காணப்பட்ட முடிபுடையது.

---

1. சின்னம் - அடையாளம்.

2. இங்கே கூறப்பட்ட மூன்று அங்கங்களோடு உபநயம், நிகமனமென்னு மிரண்டுங்கூட்டி உறுப்பைந்தென்று தருக்கசங்கிரகத்துக் கூறப்பட்டது (பகுதி சக.) ' இவை, தொகையா குறுப்பைந் தொடுங்கூடச் சொல்லுவாரு முளர் துணிந்தே ' என்பது சிவஞானசித்தி.

3. மூன்றாம் வேற்றுமை யுருபு - ஆன்.

4. ஐந்தாம் வேற்றுமையுருபு - இன்

அனுமானவாக்கியம்,—(௧) மலை தீயுடைத்து, (௨) புகை யுடைமையால், (௩) யாது புகையுடைத்து அது தீயுடைத்து அடுக்களைபோல என்பதாம். இத னுண் மூன்று அங்கமும் வந்தன; இதனால் உணர்த் தப்பட்ட இலிங்கத்தாற் பிறனுக்கு மலையிற்றீயுண்டு என்னுமுணர்வு உண்டாம்; அது பரார்த்தானுமிதி எனப்படும்.

சுவார்த்தானுமிதி பரார்த்தானுமிதி என்பவை யிரண்டிற்குங் கருவியாகிய இலிங்க பராமரிசத்தோடு கூடிய சிற்சத்தியே அனுமானப் பிரமாணம்.[1]

இலிங்கத்தின் வியாத்தி அன்னுவய வியாத்தி யும், வியதிரேக வியாத்தியும் என இரண்டு விதமாம்.

> அன்னுவயம் - உடன்பாடு, உண்மை. **வியதிரேகம்**- **மறை, இன்மை, மீட்சி.**

அன்னுவயத்தால் ஆகும் வியாத்தியாவது, சா தன சாத்தியங்களின் உண்மையாலாகும் வியாத்தி; சாதனமுள்வழிச் சாத்தியம் உளதாதல் என்றபடி. அது, யாண்டுப்புகை ஆண்டுத்தீ எனவரும்.[2]

---

1. 'தன் பொருட்டனுமிதி பிறர் பொருட்டனுமிதி யென்னுமிவை யிரண்டிற்கும் இலிங்கவாராய்ச்சியே கருவி. அதனால் இலிங்க பராமரிசம் அனுமான மெனப்பட்டது' என்பது தருக்கசங்கிரகம் (பகுதி - ௩௰)

2, 'புகையாலனலுண்டடுக்களைபோ லென்னப் புகற லன்னுவயம்' என்பது **சிவஞானசித்தி.**

வியதிரேகத்தால் ஆகும் வியாத்தியாவது, சாத்திய சாதனங்களின் இன்மையால் ஆகும்வியாத்தி; சாத்தியமில்வழிச் சாதனமும் இன்றாதல் என்றபடி; அது யாண்டுத் தீயில்லை ஆண்டுப் புகையுமில்லை என வரும்.1

அன்னுவய வியாத்தியில் யாது வியாப்பியம், அதனின்மை வியதிரேக வியாத்தியில் வியாபகமாம்; அன்னுவய வியாத்தியில் யாது வியாபகம், அதனின்மை வியதிரேக வியாத்தியில் வியாப்பியமாம்; கொள்ளியிற் புகையின்றாகவுந் தீயிருத்தலாற் புகை வியாப்பியம், தீ வியாபகம்; கொள்ளியிலே தீயின்மை இன்றாகவும் புகையின்மை இருத்தலாற் புகையின்மை வியாபகம், தீயின்மை வியாப்பியம்.

வியாத்தி ஸ்தானம் பக்ஷம், சபக்ஷம், விபக்ஷம் என மூன்றாம்.

சபக்ஷம் - சமபக்ஷம் - விபக்ஷம் - விஷமபக்ஷம்

பக்ஷமாவது, கருத்தினாலே துணியப்படுஞ் சாத்தியத்துக்கு இடம்; சபக்ஷம், காட்சியினாலே துணியப்பட்ட சாத்தியத்துக்கு இடம்; விபக்ஷம் துணியப்பட்ட சாத்திய இன்மைக்கு இடம்: எங்ஙனம்,—புகை

---

1. 'வகையா மனலிலா விடத்துப் புகையின்றாகு மலரினொடு, முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரேகச்சொல்' என்பது சிவஞானசித்தி.

யுடைமையாகிய ஏதுவில், மலை பக்ஷம், அடுக்களை சபக்ஷம். மடு விபக்ஷம்.[1]

இலிங்கமானது, கூடியும் பிரிந்தும் நிற்கின்ற வியாத்தியால், அன்னுவய வியதிரேகி, கேவலான்னுவயி, கேவல வியதிரேகி என மூவகைத்தாம்.[2]

அவற்றுள், அன்னுவய வியதிரேகி[3] அன்னுவயத்தானும் வியதிரேகத்தானும் வியாத்தியுடையது: எங்ஙனம்;—தீசாத்தியமாகுமிடத்துப் புகையுடைமையாகிய இலிங்கம் அன்னுவய வியதிரேகி; யாண்டுப் புகை ஆண்டுத்தீ அடுக்களைபோல என அன்னுவய வியாத்தியும், யாண்டுத்தீயில்லை ஆண்டுப் புகையுமில்லை மடுப்போல என வியதிரேக வியாத்தியும் உடைமையின்.

இங்ஙனமே, (க) நாகம் அநித்தியம் (உ) செய்யப்பட்ட தாதலின் (௩) யாது செய்யப்பட்டது அது அநித்தியம் குடம்போல, (௩) யாது அநித்தியமன்று

---

1. இங்கே கூறப்பட்ட மூன்று பக்கங்களி னியல்புகளை 'மூன்று பக்கம்' எனத் தொடங்குஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்தாலும் தருக்கசங்கிரகம் ௫௫-வது பகுதியாலும் அறிக.

2. 'இலிங்கம் அன்னுவயவெதிரேகி, கேவலாந்நுவயி கேவலவெதிரேகி யென மூவகைத்து' என்பது தருக்கசங்கிரகம் (பகுதி ௫க.)

3. இதனைத் தருக்கசங்கிரகத்து ௫உ-வது பகுதியானும் அறிக.

அது செய்யப்பட்டதன்று கடவுள்போல, ஆன்மாப் போல. என்பதில், செய்யப்பட்ட தாதல் என்னும் லிங்கம் அன்னுவயவியதிரேகியே, பிறவுமன்ன.

இனிக் கேவலான்னுவயியாவது;[1] அன்னுவயத்தின் மாத்திரம் வியாத்தி யுடையது: எங்ஙனம்,— (க) சடமாகிய உலகம் ஒரு கருத்தாவாற் பிரேரிக்கப்படுகின்றது. (உ) சடமாகிப் பயனுடைத்தொழிலைச் செய்தலால், (ந) யாது சடமாகிப் பயனுடைத் தொழிலைச் செய்கின்றது அது கருத்தாவாற் பிரேரிக்கப்படுகின்றது, தேவதத்தனாற் கடையப்பட்டு வெண்ணெய்யைப் பிறப்பிக்கின்ற தயிர்போல என்பதாம்.

ஈண்டுக் கருத்தாவாற் பிரேரிக்கப்படுதல் சாத்தியம்; சடமாகிப் பயனுடைத்தொழிலைச் செய்தல் இலிங்கம்; அதுவுங் கேவலான்னுவயி; வியதிரேக வியாத்தியின்மையின். அங்ஙனமன்றே,— யாது கருத்தாவாற் பிரேரிக்கப்படாது அது சடமாகிப் பயனுடைத்தொழிலைச் செய்யாது இதுபோல என வியதிரேக திருட்டாந்தம் இல்லை; எல்லாச் சடப்பொருளும் பயனுடைத் தொழிலைச் செய்வதும், பிரேரிக்கப்படுவதுமாயிருத்தலின்.

இனிக் கேவல வியதிரேகியாவது[2] வியதிரேகத்தின் மாத்திரம் வியாத்தி யுடையது: எங்ஙனம்,—(க)

1. இதனைத் தருக்கசங்கிரகத்து ருந-வது பகுதியாலறிக.

2. இதனைத் தருக்கசங்கிரகத்து ருச-வது பகுதியாலறிக.

சீவிக்கின்ற சரீரம் ஆன்மாவுடையது (உ) பிராணன், அபானன் முதலியன வுடைமையால் (௩) யாது ஆன்மா வுடையதன்று அது பிராணன் முதலியன வுடையதும் அன்று சகடம்போல.

ஈண்டு ஆன்மாவுடைமை சாத்தியம்; பிராணன் முதலியனவுடைமை இலிங்கம்; அதுவுங் கேவல வியதிரேகி; அன்னுவய வியாத்தியின்மையின், அங்ஙனமன்றே,—யாது பிராணன் முதலியவுடையது அது ஆன்மாவுடையது இதுபோல என அன்னுவய திருட்டாந்தமில்லை, சீவிக்கின்ற சரீரமெல்லாம் பக்ஷமே யாகலின்.

அன்னுவய வியதிரேகி யேதுப் பக்ஷத்தில் இருக்கை, சபக்ஷத்தில் இருக்கை, விபக்ஷத்தின் நீக்கம் என்னும் மூன்று ரூபங்களோடு கூடியதாம். எங்ஙனம்,—புகையுடைமையாகிய ஏதுப் பக்ஷமாகிய மலையில் இருத்தலும், சபக்ஷமாகிய அடுக்களையில் இருத்தலும், விபக்ஷமாகிய மடுவில் இல்லாது நீங்குதலும் உடைத்தே.

ரூபம்-தன்மை-விதம்.

கேவலான்னுவயி யேதுப் பக்ஷத்திலிருக்கை, சபக்ஷத்திலிருக்கை என்னும் இரண்டு ரூபமுடையதாம். அதற்கு விபக்ஷமின்மையின் விபக்ஷத்தின் நீக்கம் இல்லை.

கேவலவியதிரேகி யேதுப் பக்ஷத்தினிருக்கை, விபக்ஷத்தின் நீக்கம் என்னும் இரண்டு ரூபமுடைய

தாம் அதற்குச் சபக்ஷமின்மையிற் சபக்ஷத்திலிருக்கை இல்லை.

## அனுமானப்போலி[1]

இனிப் பக்ஷத்தில் இருக்கையின்மை, சபக்ஷத்தில் இருக்கையின்மை, விபக்ஷத்தின் நீக்கமின்மை என்னுங் குற்றங்களோடு கூடிய அனுமானம் **அனுமானப்போலி** எனப்படும்.

அனுமானப்போலி ஏதுப்போலி ஏத்துவாபாசம் என்பன பரியாயம்.

ஏதுப்போலியாவது, ஏதுலக்ஷணமின்றி ஏதுப்போலத்தோன்றுவது: அது அசித்தம், விருத்தம், அநைகாந்தம் என மூன்றும்.

> **அசித்தம்-முடியாதது, முடிக்கப்படாதது. விருத்தம்-முரணியது, மாறுனது. அநைகாந்தம்-ஒருதலையில்லது, பிறழ்வுடையது.**

அவற்றுள், அசித்தமாவது, பக்ஷத்தில் இருக்கை யில்லாத ஏது.

ஈண்டு வியாத்தியோடுகூடிப் பக்ஷத்திலிருப்பதே முடிந்தது; அஃதல்லாததே முடியாதது.

---

1. 'ஈண்டு பக்கப்போலி நான்கேதுப்போலி யொருமூன்றாய், வேண்டுமெழு மூன்றுகும் விளங் குவமைப்போலி யீரொன்பான், காண்டும்' என்பது **சிவஞானசித்தி.**

## அசித்தம்

அசித்தமானது, பக்ஷாசித்தம், சுவரூபாசித்தம், வியாப்பியத்துவாசித்தம் என மூன்றும்.[1]

பக்ஷாசித்தம் பக்ஷமின்மையான் முடியாதது: எங்ஙனம்,—ஆகாசத்தாமரை மணமுடைத்து, தாமரையாதலால், குளத்தாமரை போல என்பது.

ஈண்டு மணமுடைமையாகிய சாத்தியத்துக்கு ஆகாசத் தாமரை பக்ஷம்; அதுவே இல்லை.[2]

பக்ஷம், ஆச்சிரயம், சார்பு என்பன பரியாயம்.

சுவரூபாசித்தந் தன்னியல்பின்மையான் முடியாதது; பக்ஷத்திலே தன்னியல்பால் இருத்தலில்லாத ஏது என்றபடி: எங்ஙனம்,—சரீரம் நித்தியம், பிரிக்கப்படாமையால் உயிர்போல என்பது.

ஈண்டுப் பிரிக்கப்படாமை ஏது; அதுவுஞ் சரீரத்தில் இல்லை: சரீரம் பிரிக்கப்படுவதே ஆதலின்.[3]

வியாப்பியத்துவாசித்தம்[4] வியாபிக்கப்படுந் தன்

---

1. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௫-வது பகுதியிலுங் காண்க.

2. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௪-வது பகுதியில் தெளிக.

3. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௫-வது பகுதியில் தெளிக.

4 இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௬-வது பகுதியில் தெளிக.

மையின்மையான் முடியாதது; வியாத்தியில்லாத ஏது என்றபடி: அது இருவகைப்படும்.

அவற்றுள், முதலாவது சாத்தியத்தோடு உடனிகழ்ச்சிச் சம்பந்தம்[1] இல்லாத ஏது: எங்ஙனம்,— யாது உள்ளது அது கணிகம், எங்ஙனம் முகிற்படலம்,[2] அங்ஙனஞ் சரீரம் முதலியனவும் உள்ளன என்பதாம்; இது **பௌத்த அனுமான வாக்கியம்.** இதன் திரிபுவாக்கியம்:—சரீரம் முதலியன கணிகம், உளவாதலால், யாது உளது அது கணிகம், எங்ஙனம் முகிற்படலம் என்பதாம்.

ஈண்டுச் சரீரம் முதலியன பக்ஷம்; கணிகத்தன்மை சாத்தியம்; உளதாதல் ஏது: இவ்வேதுக் கணிகத் தன்மையோடு சம்பந்தித்தலைக் கவரும் பிரமாணமே இல்லை.

கணிகம்-கணமாத்திரத்தில் இருப்பது. படலம்-கூட்டம்.

இனி இரண்டாவது உபாதியோடு கூடிய சாத்தியத்தோடு சம்பந்தமுடைய ஏது.

உபாதி-செயற்கை, பயப்பது.

தன்குணத்தைத் தன்னிற்போலத் தன்னை அணுகிய பொருளிடத்துச் சார்த்துவதே உபாதி; சாத்தியத்திற் சம வியாத்தியுடையதாய்ச் சாதனத்தில்

---

1. உடனிகழ்ச்சி அவிநாபாவமென்றுங் கூறப்படும்.
2. முகிற்படலம்-மேகக்கூட்டம்.
3. பௌத்தன்-புத்தராற் கூறப்பட்ட சமயவாதி.

வியாபியாதஃதே உபாதி என்பதாம்: அஃது எங்ஙனம்,—மலை புகை யுடையது, தீயுடைமையால், அடுக்களை போல என்பது.

ஈண்டுத் தீயுடைமை சாதனம்; புகையுடைமை சாத்தியம்; ஈரவிறகுத் தீக்கூட்டம் உபாதி: அது புகையோடு தன்னிடத்திலுள்ள காரியகாரண சம்பந்தமாகிய வியாத்தியைத் தன்னிடத்திற்போலத் தன்னை அணுகியதாகிச் சாதனம் என்று எண்ணப்பட்ட தீயிடத்திற் சார்த்துகின்றது: அதுதான், யாண்டுப் புகையுண்டு ஆண்டு ஈரவிறகுத் தீக்கூட்டம் உண்டு, யாண்டு ஈரவிறகுத் தீக்கூட்டம் உண்டு ஆண்டுப் புகை உண்டு எனச் சாத்தியத்திற் சம வியாபகமாயும், யாண்டுத் தீ உண்டு ஆண்டு ஈரவிறகுத் தீக்கூட்டம் இன்று, ஒழுகக் காய்ச்சிய இரும்பில் ஈரவிறகின்மையின் என ஏதுவில் வியாபகமாகாமலும் இருத்தலின், உபாதிலக்ஷணம் உடையதாம்; அதுவே புகையைப் பயப்பது; மற்றைத் தீ புகையைப் பயப்பதன்று.

அவ்வுபாதியோடு கூடிய சாத்தியம் புகையுடைமை; அச்சாத்தியத்தோடு சம்பந்தமுடைய ஏதுத் தீயுடைமை; அதுவே உபாதியோடு கூடிய வியாப்பியத் துவாசித்தம்.

இங்ஙனமே வேள்வியில்[1] நிகழுங் கொலை அதன்ம சாதனம், கொலைமையால்,[2] வேள்விப் புறத்துக்

1. வேள்வி-யாகம்.
2. கொலைமை-கொலைத்தன்மை.

கொலைபோல என்பதில், விலக்கப்பட்டமை உபாதி; அது, யாண்டு அதன்மசாதனத்தன்மை ஆண்டு விலக்கப்பட்டமை உண்டு, யாண்டு விலக்கப்பட்டமை ஆண்டு அதன்மசாதனத்தன்மை உண்டு எனச் சாத்திய சம வியாபகமாயும், யாண்டுக் கொலைமை ஆண்டு விலக்கப்பட்டமை இன்று, வேள்விக்கொலை, சத்துருக் கொலை, கள்வர்கொலை முதலிய கொலையின் விலக்கப்பட்டமை இன்மையின் எனச் சாதன அவ்வியாபகமாயும் இருத்தலின். ஆதலின் அதன்மசாதனத்தைப் பயப்பது கொலையன்று; விலக்கப்பட்டமையே.

## விருத்தம்.

இனி விருத்தமாவது,[1] சபக்ஷத்திலின்றிப் பக்ஷத்திலும், விபக்ஷத்திலும், இருக்கையுடைய ஏது; சாத்தியத்துக்கு விபரீதமாகிய சாத்தியத்தை முடிக்கும் ஏது என்பதாம்.

அஃது எங்ஙனம்,—சரீரம் நித்தியம், பிரிக்கப்படுவதாதலால், உயிர்போல என்பது: ஈண்டு நித்தியத்தன்மை சாத்தியம்; பிரிக்கப்படுந்தன்மை ஏது: அது சபக்ஷமாகிய உயிர்முதலிய நித்தியப்பொருளில் இருத்தலின்றிப், பக்ஷமாகிய சரீரத்திலும், விபக்ஷமாகிய குடம்முதலிய அநித்தியப் பொருளிலும் இருப்பது. அதுவும் நித்தியத்தன்மைக்கு விபரீத[2] மாகிய

1. இதனைத் தருக்கசங்கிரகத்து கூக-வது பகுதியிற் றெளிக.

2. விபரீதம்-மாறுபாடு

அநித்தியத்தன்மையைச் சாதிப்பது; யாதுபிரிக்கப்படும் அஃது அநித்தியமே ஆதலின். இதுவே விருத்தம்.

இங்ஙனமே ஆன்மாத் தோற்றமுடையன், அழிவிலி[1] யாதலால், குடம்போல என்பதில், அழிவிலியாதலாகிய ஏதுத் தோற்றமுடைமைக்கு விபரீதமாகிய தோற்றமின்மையைச் சாதிக்கின்றது: உலகம் முதற்காரணமில்லாதது, காரியமாதலின், இறைவன் போல என்பதில், காரியமாதல் என்னும் ஏது முதற்காரணமின்மைக்கு விபரீதமாகிய முதற்காரணமுடைமையைச் சாதிக்கின்றது.

## அநைகாந்தம்[2]

இனி அநைகாந்தமாவது வியபிசாரம் உடைய ஏது.

வியபிசாரம் - பிறழ்வு, நியமமின்மை.

விபக்ஷத்தின் நீங்கிப் பக்ஷ சபக்ஷங்களின் இருத்தலாகிய நியமம் இல்லாத ஏது அநைகாந்தம் என்பது: அதுபொதுவுஞ், சிறப்பும் என இருவகைத்து.[3]

---

1. அழிவிலி-அழிவில்லாதவன்.

2. அநைகாந்திகம்-சவ்வியபிசாரமென்றுஞ் சொல்லப்படும்.

3. தருக்கசங்கிரகத்து ௬௭-வது பகுதியில் இவ்விரண்டனொடு முடிவு பெறாமை யென்பதொன்றுங் கூட்டிச் சவ்வியபிசார மூவகைத்தெனக் கூறப்பட்டது. அதன் இலக்கணத்தைத் தருக்கசங்கிரகத்து ௬௮-வது பகுதியிற் காண்க.

அவற்றுட் பொதுவனைகாந்தமாவது பக்ஷ சபக்ஷ விபக்ஷங்களின் இருக்கும் ஏது, எங்ஙனம்,—சரீரம் நித்தியம், பொருண்மையால், உயிர்போல என்பது: ஈண்டுப் பொருண்மையாகிய ஏதுச் சரீரத்தினும், நித்தியப்பொருளினும், அநித்தியப்பொருளினும் இருக்கின்றது.

சிறப்பனைகாந்தஞ் சபக்ஷ விபக்ஷங்களில் இன்றிப் பக்ஷமாத்திரத்தில் இருக்கும் ஏது: எங்ஙனம், —தீ நித்தியம், சூடுடைமையால், உயிர்போல என்பது: ஈண்டுச் சூடுடைமை நித்தியப்பொருளினும், அநித்தியப்பொருளினும் இன்றித் தீமாத்திரத்தில் இருக்கின்றது.

## சற்பிரதிபக்ஷம்.[1]

இனி இம்மூன்ேறாடு சற்பிரதிபக்ஷம், பாதிதம் என்னும் இரண்டுங் கூட்டி, ஏதுப்போலி ஐந்து என்பாரும் உளர்.

சற்பிரதிபக்ஷம் - உள்ளவிரோதியை உடையது.
பாதிதம் - தடுக்கப்பட்டது.

அவற்றுட் சற்பிரதி பக்ஷமாவது, சாத்தியத்துக்கு விபரீதமாகிய சாத்தியத்தைச் சாதிக்குஞ் சமபலமாகிய வேறோர் ஏதுவையுடைய ஏது.

சமபலம்-ஒத்தவலியுடையது.

---

1. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬உ-வது பகுதியிலுங் காண்க.

எங்ஙனம்,—மிருகசரீரம் உயிரில்லது, பேசா மையால், கடம்[1] போல: மிருகசரீரம் உயிருடையது, இயங்குதலால், மனுடசரீரம்போல என்பதாம்.

ஈண்டுப் பேசாமையேது ஊமை முதலியனவற்றி னும், இயங்குதலேதுச் சகடம்[2] முதலியவற்றினுஞ் சென்று பிறழுதலால், அவை சமபலமாகும்.

## பாதிதம்[3]

பாதிதமாவது, சாத்தியத்துக்கு விபரீதமாகிய சாத்தியத்தைச் சாதிக்கும் பிரபலமாகிய வேறோரேது வாலே தடுக்கப்பட்ட ஏது: எங்ஙனம்,—தீ சூடில்லது, பொருண்மையால், நீர்போல என்பதாம்.

ஈண்டுச் சூடின்மை சாத்தியம், அதற்கு விபரீத மாகிய சூடு பரிசப்பிரத்தியக்ஷத்தான் உணரப்படுத லிற் பொருண்மையேதுப் பாதிதம்; பரிசப்பிரத்தி யக்ஷமே அதன் பாதகம்.

பிரபலம்-மிகுவலியுடையது. பாதகம்-தடுப்பது.

இங்ஙனமே மிருகசரீரம் உயிரில்லது, பேசுதன் முதலியன இன்மையால், கடம்போல என்பது; மிருக சரீரம் உயிருடையது, பசித்தல், புசித்தல், வாடல், பூரித்தல், விழித்தல், மூடல், உய்தல், இறத்தல், பிரா

---

1. கடம்-குடம்.
2. சகடம்-வண்டி.
3. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௭-வது பகுதியி னுங் காண்க.

ணன், அபானன், இந்திரியம், மனம், புத்தி, இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, முயற்சி முதலியனவுடைமையின், மனுடசரீரம்போல என்னும் பிரபல அனுமானத்தாலே தடுக்கப்பட்டுழிப் பாதிதமாம்.

சற்பிரதி பக்ஷமும்,[1] பாதிதமும்,[2] பிறவும் முன்னுரைத்த அசித்தம்,[3] விருத்தம்,[4] அநைகாந்தம், [5] என்னும் மூன்றனுள் அடங்கும்.

இந்த ஏதுப் போலிகளாற்[6] பொய்யறிவு தோன்றும்.

---

1. சற்பிரதிபக்ஷம் - மறுதலையுடையதென மொழி பெயர்த்துக் கொள்ளப்படும்.

2. பாதிதம்-மறுப்புடையதென மொழிபெயர்த்துக் கொள்ளப்படும்.

3. அசித்தம்-பேறில்லதென மொழிபெயர்த்துக்கொள்ளப்படும்.

4. விருத்தம்-மாறுகொள்வதென மொழிபெயர்த்துக் கொள்ளப்படும்.

5. அநைகாந்திகம்-பிறழ்வுடையதென மொழிபெயர்த்துக் கொள்ளப்படும்.

6. "ஈண்டுக்கூறும் பக்கப்போலி உவமைப்போலிகளெல்லாம் ஏதுப்போலியு ளடங்குமெனத் தார்க்கிகர் கூறுவர். பக்கவுவமைக ளிலக்கணத்தை நோக்கிக் காணும் வழி அவை பக்கப்போலி உவமைப்போலி யெனப்படுவனவன்றி ஏதுப்போலி யெனப்படாமையறிக"—என்பது சிவஞான சித்தி அளவை கச-வது செய்யுளுக்குச் சிவஞானசுவாமிகளுரைப் பகுதி.

## ஆகமம்

ஆகமப் பிரமாணமாவது, வாக்கியப் பொருளு ணர்ச்சியின் கருவி; சிற்சத்தியோடு கூடிய சத்தமே வாக்கியப் பொருளுணர்ச்சியின் கருவியாதலின் ஆக மப் பிரமாணம் எனப்படும்.

ஆகமம்-சாத்திரம், வரவு. சத்தம்-எழுத்து, சொல், வாக்கியம்.

வாக்கியப் பொருளுணர்ச்சியாவது; சத்தத்தின் பதப்பொருளுணர்ச்சியால் உண்டாகும் அறிவு. சத்த வுணர்வு கருவி; பதப்பொருளுணர்ச்சி வியாபாரம்; சாத்தவுணர்ச்சி பலம்.

சத்தமாவது, ஆத்தனது வாக்கியம்.[1]

ஆத்தன்-உரியோன், நம்பப்படுவோன், உள்ள பொரு ளைக் கூறுவோன்.

வாக்கியமாவது, பதங்களின் சமூகம்.[2] பதம் வர்ண காரியம்; வர்ணம்[3] நாதகாரியம்; நாதம் சுத்தமாயா காரியம்.

சமூகம்-கூட்டம்.

பதமாவது, ஆற்றலாற் பொருளை உணர்த்து

1. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௬-வது பகுதியிற் காண்க.

2. இதனையும் ஆண்டே காண்க.

3. வர்ணம்-எழுத்து.

கின்ற எழுத்தொலி.[1] எங்ஙனம்,—ஆ, குதிரை முதலியன.

ஆற்றலாவது,[2] வாசகமாகிய சத்தத்துக்கு வாச்சியமாகிய பொருளோடு உளதாய கற்பித சம்பந்தம்; எங்ஙனம்,—ஆ என்னுஞ் சத்தத்துக்கு ஆத்தன்மையுடைய பிண்டமாகிய பொருளோடு சம்பந்தம்.

ஆற்றல்-சத்தி. வாசகம்-சொல்வது. வாச்சியம்-சொல்லப்படுவது. கற்பிதம்-ஆக்கப்பட்டது, கற்பிக்கப்பட்டது.

அவ்வாற்றல், இன்ன சத்தத்தால் இன்னபொருள் அறியப்படுவது என்னுஞ் சங்கேதயிதாவின் சங்கேதத்தால் ஆகியது; சங்கேதமே ஆற்றல் என்பதும் ஒருபக்ஷம்.

சங்கேதயிதா-சங்கேதஞ் செய்பவன். சங்கேதம்-நியமம், உடன்பாடு, குறி.

---

1. இதனைத் தருக்கசங்கிரகத்து ௬௧-வது பகுதியிற் காண்க.

2. ஆற்றலுக்கு இங்கே கூறப்பட்ட இலக்கணம் நையாயிகமத நூலார் கூறுமாறுபற்றிக் கூறப்பட்டது. தருக்க சங்கிரகத்தில் 'ஆற்றல் இப்பதத்தால் இப்பொருளுணர்த்துக என்னுமிறைவன் சங்கேதம்' என்று கூறப்பட்டது: இது பொருந்தாமை ஸ்ரீ சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த 'எடுத்தென்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாய'த் தாலறிக.

படி ஆற்றலானது, வழக்கம், உபதேசம், உபமானம், கோஷம், வியாகரணம், விவரணம், சந்நிதானம், வாக்கிய சேஷம் என்பவற்றாற் கிரகிக்கப்படும்.

க. வழக்கு,[1] —ஒருவன் கூறிய வாக்கியத்தைக் கேட்டு மற்றொருவன் வழங்குஞ் செய்கை: எங்ஙனம், —ஏவும் முதியோனாற் கூறப்பட்ட "குடத்தைக் கொணர்" என்னும் வாக்கியத்தைக் கேட்டு, இயற்றும் முதியோனாற் குடங் கொணரப்பட்டமையைக் கண்டு, பக்கத்தினின்ற இளையோன் குடத்தைக் கொணர்தலாகிய காரியம் "குடத்தைக் கொணர்" என்னும் வாக்கியத்தாற் பிரேரிக்கப்பட்டது எனத் துணிவன். பின்னருங் "குடத்தைக் கொணர், ஆவைக் கொணர்" என்பன முதலிய வாக்கியங்களிலே, ஆவாப உத்துவாபங்களாலே குடம் முதலிய பதங்கட்குக் காரியத்தோடு இயைந்த குடப்பொருண் முதலியவற்றில் ஆற்றல் எனக் கிரகித்துக் கொள்வன்.

ஆவாபம் - இடுதல். உத்துவாபம் - குறைத்தல்.

உ. உபதேசம்,[2] — இது குயில் இது மயில் எனப்பொருளைக் காட்டிப் பதங்கூறி அறிவுறுத்தல்.

ங. உபமானம்,—ஒப்புமையறிவு: ஆவினை ஒப்பது ஆமா[3] என்னும் அதிதேச வாக்கியப்பொருள்

---

1. வழக்கு வியவகாரமென வடமொழியிற் கூறப்படும்.
2. உபதேசம் ஆப்தவாக்கியமென்றுங் கூறப்படும்.
3. ஆமா - காட்டுப்பசு.

நினைவோடுகூடி, ஆவோடு ஒத்தலுடைய பொருளைக் காண்டலே ஒப்புமையறிவு. அதனால், இது ஆமா என ஆமா என்னும் பதத்திற்கு ஆமாப்பொருளில் ஆற்றல் கிரகிக்கப்படும்.

அதிதேசம் - மாட்டி யுணர்த்துவது.

ச. கோஷம்,[1]—சொற்பொருளுணர்த்தும் நூல்: எங்ஙனம்,—"சிவன் பெயர் - சங்கரன் பசுபதி சம்பு" என்பது பொருட்பெயர்: "பகவான் சிவனரி பிரமன் புத்தன்" என்பது பெயர்ப்பொருள்.[2]

ரு. வியாகரணம்,—இலக்கணம்; பகுதி, விகுதி, இடைநிலை முதலியவற்றின்பொருளை உணர்த்திப் பதங்களின் சுவரூபமும் பொருளுந் துணிவிக்கும்நூல்: எங்ஙனம்,—"னஃகானொற்றே யாடூஉவறிசொல்."[3]

சு. விவரணம்[4],—வெளிப்படுத்துவது; அப் பிரசித்தமாகிய பதத்தைச் சார்ந்து விளக்குகின்ற பிர

1. கோஷம் - நிகண்டு. இச்சொல் கோசமெனவும் வரும்.

2. இவை தருக்காமிர்தத்துக் கூறப்பட்டன.

3. இது தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவி யாக்கம் க-வது சூத்திரம்.

4. இங்கே சொல்லப்பட்ட விவரணம் முற்சொல் லப்பட்ட உபதேசமென்பனவற்றைப் 'பொருட்குத்திரி பில்லை யுணர்த்தவல்லின்' 'உணர்ச்சி வாயிலுணர்வோர் வலித்தே' என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்களானும் அவற்றிற்குச் சேனாவரையர் கூறியவுரையானும் அறிக.

சித்தபதமாகிய பரியாயபதமும் வாக்கியமும்: எங்ங
னம்,—“பிகம் என்பது குயில்: யாறு என்பது மலை
யிற்றோன்றி நிலவழியாற் பாய்ந்து, கடலிற் புகும்
நீர்ப்பெருக்கு.” என்பன. இவற்றுள் முன்னது
பிரதிபதம், பின்னது நிருத்தி.

பிரசித்தம் - பயிலப்பட்டது, வழங்கப்பட்டது.

௭. சந்நிதானம்,—அண்மை; ஒரு பதத்தை
உரிமையாற் பொருள் குறிப்பிக்கின்ற பிறபதங்கள்
அணுகிநிற்றல்: எங்ஙனம்,—“தேமாந்தருவிற் பிக
மிருந்து சிந்தைகளிப்பக் கூவியதால்” என்புழிச் சார்
பும், வினையுந் தமக்கு உரிமையுடைய குயிற்பொருள்
குறிப்பிக்கும். “மாப்பூத்தது, மாவீழ்நொச்சி, பானை
மாத்தேரான்” என்புழி வினையுஞ், சார்பிடமும், இன
மும் உரிமையால் ஐயமறுத்து விசேடப்பொருள்
குறிப்பிக்கும்.[1]

௮. வாக்கியசேஷம்,—வாக்கியக்குறை; ஒரு
வாக்கியத்தின் பதத்தை ஐயமறத் துணிதற்கு அனு
கூலமாகிய குறைவாக்கியம்: எங்ஙனம்,—“அரியவ்
விடத்தில் வந்தனனால், கண்டதேவ நடனெழுந்தக்

---

1. இதனைத் தொல்காப்பியர் ‘அவற்றுள், வினை
வேறுபடும் பலபொருளொருசொல், வேறுபடு வினையினு
மினத்தினுஞ் சார்பினுந், தேறத்தோன்றும் பொருடெரி
நிலையே’ என்னுஞ் சூத்திரத்தாற் கூறினார். இதனைப் பிர
சித்தபதத்தின் சமீபத்தன்மை யென்றலுமாம்.

கன்னையடியில் வைகின்றார்'' என்புழி அரிபதப் பொருளைப் பின்வாங்கியத் தொனிவித்தது.

அன்னுவயமேனுந் தாற்பரியமேனுங் பொருந்தாத விடத்து, வாசகத்தோடு ஆற்றலுடைய வாச்சியப் பொருட்குப் பிறபொருளோடு கொள்ளப்படுஞ் சம்பந்தங் குறிப்பு,[2] எனப்படும்.

குறிப்பு - இலக்ஷணை.

''யாற்றில் இடைச்சேரி'' என்புழி, யாறு என்னும் வாசகத்தோடு ஆற்றலுடைய வாச்சியப் பொருளாகிய நீர்வெள்ளம் இடைச்சேரிக்கு ஆதாரமாகி அன்னுவயித்தல் பொருந்தாமையின், நீர்வெள்ளத்தோடு கரைக்கு உளதாய சம்பந்தத்தாற் கரை என்னும் பொருளே கொள்ளப்படும். இச்சம்பந்தமே குறிப்பு.[3]

ஆற்றலுங் குறிப்பும் நிகழ்ச்சி என்னும் பொதுப் பெயரால் வழங்கப்படும்.

நிகழ்ச்சி-விருத்தி.

சொன்னிகழ்ச்சிக்குப் பொருள் இடமாம்; ஆதலின் ஆ என்னுஞ் சொல் ஆப்பொருளினும், யாறு

---

1. தாற்பரியம், வினை, சார்பு, இடமுதலியவற்றால் உணரப்படுவது.

2. இதன் விரிவைத் தருக்கசங்கிரகத்து ௬௬-வது பகுதியின் உரையிற் காண்க.

3. இவ்விலக்ஷணை கௌணீ சுத்தையென இருவகைப்படும். இதனைத் தர்க்காமிர்தத்திற் காண்க.

என்னுஞ் சொல் நீர்வெள்ளத்திலுங் கரையிலும் நிகழ்ச்சியுடையன.

அவா,[1] தகுதி, அண்மை என்னும் மூன்று[2] முடைய பதங்களின்சமூகமே வாக்கியம்; ஏனையன அல்ல.

> அவா-ஆகாங்க்ஷை. தகுதி-யோக்கியதை. அண்மை-சந்நிதி, ஆசக்தி.

அவா ஒருபதந் தன்னோடு அன்னுவயித்துப் பொருண் முடித்தற்குரிய மற்றைப் பதத்தை வேண்டுதல்.

> அன்னுவயம்-புணர்ச்சி.

தகுதி பதப்பொருள்கள் ஒன்றோடு ஒன்று பாதையின்றிச் சம்பந்தித்தல்.

> பாதை-பாதம், தடை.

அண்மை. அன்னுவயித்தற்கு வேண்டப்படும் பதங்கள் இடையீடின்றி அடுத்து நிற்றல்; அண்மை பதங்கள் காமதமின்றி உச்சரிக்கப்படுதல் என்பதும் ஒருபக்ஷம்.

"ஆ குதிரை ஆடு யானை" என்பது, அவாவிலது; "தீயால் நனைக்க" என்பது, தகுதியிலது;

---

1. அவா—இஃது அவாய் நிலையென்றும் வழங்கப்படும்.

2. இம் மூன்றனையும் தருக்கசங்கிரகத்து ௭0, ௭௧, ௭௨-வது பகுதிகளாலும், தொல்காப்பியம் சொல்லதிகார முதற் சூத்திர வுரையிற் றொடர்மொழிக்கு இலக்கணங் கூறும் பகுதியானும் அறிக.

"மலை உண்ணப்பட்டது தீயுடையது தேவதத்தனால்" என்பது அண்மையிலது; இவை வாக்கியமல்ல. "மலை தீயுடைத்து, தேவதத்தனால் உண்ணப்பட்டது" என மாறின் அண்மையுடைத்தாம்.

"ஆ நடக்கின்றது, ஆவைக் கொணர்க, யாற்றங் கரையில் ஐந்து கனிகள் உள" என்பன முதலியன அவாமுதலிய மூன்றுமுடைமையின் வாக்கியங்களாம்.

பதப்பொருளுணர்ச்சியாவது, ஆற்றலுணர்வு துணையாகப் பதத்தாலே தோன்றுவதாகிய பொருளுணர்ச்சி.

"ஆ" என்னும் பதத்துக்கும் "நடக்கின்றது" என்னும் பதத்துக்கும் அந்த அந்தப் பொருள்தோறும் உளதாய சங்கேதவாற்றலை உணர்ந்துகொண்டா னொருவனுக்கு "ஆ நடக்கின்றது" என்னும் வாக்கிய வுணர்ச்சி உண்டாகியபோது, அவ்வாக்கிய சத்தத்தின் பதங்களின் சங்கேதவாற்றல் நினைவாற் பதப்பொரு ளுணர்ச்சி உண்டாக, அதனால்; "தாடி கோடு கால் வால் முதலிய ஆத்தன்மையுடைய பிண்டம் இவ்வாக் கிய நிகழுங்காலத்திற் கால்பெயர்த்திட்டு, முன்னிடம் விட்டு வேறிடங்கூடுதலும் உடைத்து" என்னும் வாக் கியப்பொருளுணர்ச்சி உண்டாம். இங்ஙனமே சத்த வுணர்ச்சியால் வாக்கியப்பொருளுணர்ச்சி தோன்றும்.

வாக்கியத்தைக் கூறுவோர் ஆத்தன், பிராந்தன், வஞ்சகன் என மூவகையராய் இருப்பர்.

பிராந்தன்-திரிபுடையவன். வஞ்சகன்-படிறன்.

அவருள், ஆத்தனுவான், தன்கண் பயக்கமின் மையிற் பொருள்களை உள்ளவாறு உணர்ந்து, காம வெகுளிகள் இன்மையின் அவற்றை உணர்ந்தவாறே கூறுவோன் : ஈசுவரன்,[1] அவதியில்லாத முற்றறிவனாகிய பரமாத்தனாதலின், ஈசுவரீய வாக்கியம்[2] முழுதும் பிரமாணம்.

அவதி - எல்லை. ஈசுவரீயம் - ஈசுவரனது.

இலௌகிக வாக்கியங்களுள்,[3] தமதவதி முற்றறிவராகிய ஆத்தரது வாக்கியமே பிரமாணம்.

இலௌகிகம் - உலகத்தவரது.

வாக்கியத்தின் பிரமாணத்தன்மை பொருட்டகுதியால் உணரப்படும்.

இங்ஙனமே வாக்கியப் பொருளுணர்ச்சிக்குக் கருவியாகிய சத்தவுணர்ச்சியோடு கூடிய சிற்சத்தியே ஆகமப்பிரமாணம் எனப்படும்.

## ஆகமப்போலி

இனித் தகுதியின்மையாகிய குற்றத்தோடு கூடிய வாக்கியம், ஆகமப்போலி எனப்படும். பிராந்த

---

1. இதனைத் தருக்கசங்கிரகத்து எ௩-வது பகுதியிற் காண்க.

2. இங்கே ஈசுவரீய வாக்கிய மென்றது வேத வாக்கியத்தை.

3. இலௌகிக வாக்கியமெனினும் உலக வாக்கிய மெனினும் ஒக்கும்.

வாக்கியமும், வஞ்சக வாக்கியமுமே ஆகமப்போலி களாம்.

பிராந்தன், மயக்கத்தாற் பொருள்களை விபரீத மாக உணர்ந்து கூறுவோன்.

வஞ்சகன், அறிந்த பொருள்களைக் காம வெகுளி களால் விபரீதமாகக் கூறுவோன்.

விபரீதம் - மாறு.

வழுநிலை, பொருளின்மை, மீண்டுவரல், வீணே விரிதன் முதலிய சொற்குற்றங்களானும், பொய்மை, ஐயம், திரிபு, விரோதம், குறை, மிகை, பயனின்மை முதலிய பொருட்குற்றங்களானும் போலிவாக்கியங் களின் அப்பிரமாணத்தன்மை உணரப்படும்.

இங்ஙனங் கூறிய பிரமாணத்திற்குப் பயன் பிர மேயங்களை உள்ளபடி அறிந்து கொள்ளுதலாம்.

இங்ஙனமே இலக்கணப் பிரமாணங்கள் உரைக் கப்பட்டன.

சாதாரண பீடிகை

முற்றிற்று.

# சுருதி நிருபணம்[1]

## சுருதி இலக்கணம்.

அநாதி சித்தனும், வியாபகனும், நித்தியனும், சுவதந்திரனும், நிரவதி சர்வஞ்ஞனும், சர்வகர்த்தாவும், சர்வானுக்கிரககாரகனும், பரிபூரணனும், சாந்தனும், பக்ஷபாதமிலியும் ஆகிய ஈசுவரனே பரமாத்தன் எனப்படுவன்.

> சுவதந்திரன் - தனது தலைமையுடையவன். நிர் அவதி - எல்லை இல்லாத. சர்வஞ்ஞன் - முற்றறிவன். சர்வ கர்த்தா - முற்றுஞ் செய்பவன். அனுக்கிரகம் - உபகாரம். காரகன் - செய்பவன். பரிபூரணன் - மிகு திருத்தியுடையவன். சாந்தன் - காம வெகுளி மயக்கங்கள் ஒழிந்தவன், தணிந்தவன். பக்ஷபாதம் - ஒருபக்ஷத்தில் விழுதல். பரமம் - மிகமேலாகிய, உயர்ந்த.

பரமாத்தனால் உபதேசிக்கப்பட்ட பாரமார்த்திக வாக்கிய சமூகமே ஆதிச்சுருதி எனப்படும். இதுவே சுருதிலக்ஷணம்.

> உபதேசித்தல் - அறிவுறுத்தல், உணர்த்தல். பாரமார்த்திகம் - பரமார்த்தமுடையது. பரமம் - மிக மேலாகியது. அர்த்தம் - பொருள், சாதனம், விடயம், பிரயோசனம்.

---

1. நிருபணம் - ஆராய்ச்சி.

உணர்தற்கு அரியனவாகிய பதி பசு பாசங்களை மேலாகிய பொருள்;[1] உயர்ந்த பயனைத் தருவனவாகிய கிரியையும் ஞானமுமே மேலாகிய சாதனம்; இவைகளே மேலாகிய விடயம்; போக மோக்ஷங்களே மேலாகிய பிரயோசனம்; இவையெல்லாம் பரமார்த்தம் எனப்படும்.

ஈண்டு: "பரமாத்தனால் உபதேசிக்கப்பட்ட" என்பதனாற் பரனது உபதேசம் பெற்ற பராபராத்தராலும், அபராத்தராலுஞ் செய்யப்பட்ட பரமார்த்தமுடைய சுருதிநூல்களும்: "பாரமார்த்திக" என்பதனால் ஈசுவரனாலுஞ் சீவராலுஞ்செய்யப்பட்ட அவாந்தரார்த்தமும்,[2] இலௌகிகார்த்தமும் உடைய நிருத்தம்,[3] சிக்ஷை, வியாகரணம், சோதிடம், மிருதி, புராணம், வைத்தியம், சிற்பம், கணிதம், வார்த்தை முதலிய

---

1. இதனைப் 'பலகலை யாகமவேத மியாவையினுங் கருத்துப் பதிபசுபாசந் தெரித்தல்' என்னுஞ் **சிவப்பிரகாசத்** திருவிருத்தத்தாலும், 'சான்றவ ராய்ந்திடத் தக்கவாம் பொருண், மூன்றுள மறையெலா மொழிய நின்றன, வான்றதோர் தொல்பதி யாருயிர்த்தொகை, வான்றிகழ் தளை யென வகுப்பரன்னவே' என்னும் **கந்தபுராணச்** செய்யுளானு மறிக.

2. அவாந்தரார்த்தம்—இடையிட்ட பொருளை யுடையது.

3. நிருத்தம் முதலிய நான்கும் வேதாங்கங்களின் பகுதிகள்: இவற்றோடு கற்பம் சந்தோவிசிதி என்னு மிரண்டும் கூட்டி வேதாங்கங்கள் ஆறெனப்படும்.

நூல்களுஞ் சுருதிகளாயினும் ஆதிச்சுருதியல்ல என விலக்கப்பட்டன.

இனி ஆத்தனின் வேறாகிய பிராந்தனாலும் வஞ்சகனாலுஞ் செய்யப்பட்ட நூல்கள் சுருதிகளே ஆகாவாயின், அவை தூரத்திற்றள்ளப்படும்.

> பரன்-உயர்வுடையோன். பராபரன்-உயர்வுந்தாழ்வுமுடையோன், அபரன்-தாழ்வுடையோன்.

'ஈசுவரனாற் செய்யப்பட்ட பரோக்ஷார்த்த அநுபவசாதனமே சுருதி; சீவர்களாற் செய்யப்பட்டதல்லாத வாக்கியமே சுருதி; ஆதிசாத்திரமே சுருதி; பிரத்தியக்ஷ அநுமானங்களால் உணரப்படாத புருஷார்த்த உபாயங்களைத் தகுதியாக உணர்த்தும் வாக்கியமே சுருதி'[1] எனக் கூறப்படுஞ் சுருதியிலக்கணங்களும் பொருந்தும்.

> பரோக்ஷ அர்த்தம்—தேச கால வஸ்துத்தன்மைகளால் இந்திரியத்துக்குத் தூரமாகிய அர்த்தம். அநுபவம்-உணர்ச்சி. சாதனம்—கருவி. புருஷ அர்த்த உபாயம்—ஆன்மப் பிரயோசன சாதனம்.

சுருதி, வேதம், ஆகமம், நிகமம், ஆம்நாயம் என்பன முதலியன பரியாயங்களாம்.

இச்சத்தங்களின் வியுற்பத்தி கூறப்படுகின்றது.

---

1. 'காசறு முறையிம்மானத் தடங்கிடாப் பொருளைக் காட்டும்' என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தான் இதனையறிக.

சுருதி 'பரமார்த்தங்களைக் கேட்டற்குக் கருவி; ஈசுவரனிலிருந்து கேட்கப்பட்டது எனினும் பொருந்தும். சுரு-கேட்டல். தி-கருவிப்பொருளுஞ் செயப்படு பொருளும் உணர்த்தும் விகுதி.

வேதம் 'பரமார்த்தங்களை அறிதற்குக் கருவி. வித்-அறிதல்; அது வேத் எனக் குணவெழுத்துப் பெற்று நின்றது; அ என்பது கருவி விகுதி.

ஆகமம் 'பரமார்த்தங்களை முற்றாக உணர்தற்குக் கருவி; வருவித்தற் கருவி. ஆ-முற்றாக, அண்மையாக, பாரம்பரியமாக; கம்-போதல், வருதல், உணர்தல். அ என்பது கருவி விகுதி.

நிகமம், நியதமாக உணர்தற்கருவி. நி-நியதமாக; கம்-போதல், உணர்தல். அ-விகுதி.

ஆம்நாயம், ஆதி குருவிற்றொடங்கிப் பாரம்பரியமாகப் பயிலப்படுவது; கற்கப்படுவது. ஆ-பாரம்பரியமாக. ம்நா-பயிலல், கற்றல்; ய என்பது செயப்படு பொருள் விகுதி.

## சுருதி விபாகம்.

சுருதியானது, கருமகாண்டம் ஞானகாண்டம் என்னும் இரண்டு பாகங்களை உடையதாம்.[1]

---

1. 'அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன் அருளிச்செய்த வேதாகமங்கள் கருமகாண்டம் உபாசனாகாண்டம் ஞானகாண்டமென மூவகைப்படும்' என்பது சிவஞானசித்தி அளவை மஙு-வது திருவிருத்தத்திற்கு ஸ்ரீ சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த உரைப்பகுதி.

**காண்டம்-வருக்கம், தொகுதி.**

அவற்றுட் கருமகாண்டமாவது, துக்கமொழிப்பனவும், சுகம் விளைப்பனவும், ஞானம் பயப்பனவும் ஆகிய கிரியைகளைப் பயனும், கருவியும், செய்யும் பிரகாரமும் ஆகிய முக்கூறுடைத்தாக பாவனையோடு நியமிக்கும் பாகம்.

ஞானகாண்டமாவது பதி, பசு, பாசம், தத்துவதாத்துவிக சிருட்டி, சங்காரம், முத்தியுபாய சாதனம் முதலியவற்றை இலக்கணப் பிரமாணங்களாலே நிரூபிக்கும் பாகம்.

இன்னும் அச்சுருதியானது மந்திரம், பிராமணம்[1] என இரண்டு பாகமாகப் பகுக்கப்படும்; இவையிரண்டும் தோத்திரம் சாத்திரம் எனவும்படும்.

> மந்திரம் - நினைக்கப்படுவது, நினைவிப்பது, உபசரிக்கப்படுவது, உபசரிப்பது. மந் - மதித்தல், திரா- விகுதி. பிராமணம் - பிரம சம்பந்தமுடையது. பிரமம் என்பது தத்துவ உணர்வும், ஒழுக்கமுமாம்.

அவற்றுள், மந்திரங்களாவன, கடவுளை நோக்கி அழைத்தல், புகழுதல், வேண்டல், ஏவுதல், ஆராய்தல், வினவல், விடுத்தல், புலம்பல் முதலிய செயல்களைத் தனித்தனியே உடையனவாய் ஞானக் கிரியைகளை நினைவிப்பனவாய்ப் பத்தி சுத்தி சித்திகளைப் பயப்பனவாய் உள்ள வாசகங்களாம்.

---

1, 2. இப்பாகுபாட்டினை ஸ்ரீ அப்பய்ய? அநந்தாசாரியர் சதுர்வேததாற்பரிய சங்கிரகத்தில் 'மந்த்ரார்த்தவாத விதி

பிரமாணம் விதிவாதமும் அர்த்தவாதமும் என இரு பிரிவினதாம்.[2]

வாதம் - கூறுவது. அர்த்தம் - பிரயோசனம்.

விதியானது,[3] செய்யப்படாதனவற்றைச் செய்விப்பதாகிய கருமவிதியும், உணரப்படாதனவற்றை உணர்விப்பதாகிய ஞானவிதியும் என இருவகையினதாம். இவ்விருவகையும் ஏனைய எல்லாவற்றையுந் தம்பாற்படுத்து நிற்குந் தன்மையவாதலிற் சிறப்புடையன.

அர்த்தவாதமாவது, விதியை வழங்குவித்தற் பொருட்டு விதிப்பயனை உள்ளதனுனும் இல்லதனுனும்

---

பிர்பஹி-தா விபக்தோ யச்சப்தராசிர நபேக்ஷிதயா ப்ரமாணம் | ஸோயம் விமத்ஸர விம்ருஷ்ட பதார்த்த தத்வோ வேத: ப்ரகாசயதி கேவல மீச்வர த்வாம்' || என்றருளிச் செய்தமையானறிக.

3. 'விதியெல்லாம் எய்தாததனை எய்துவிப்பதூஉம், ஒருகாலெய்தி யொருகா லெய்தாதாகற்பாலதனை அவ்வழியு மிகந்துபடாமற் காத்து நியமமாக எய்துவிப்பதூஉம், ஈரிடத் தெய்தற்பாலதனை ஒருமருங்கு மறுப்பதூஉமென மூவகைப்படும்' 'எய்தாததனை யெய்துவித்தன் முதலிய மூன்றனையும் வடநூலார் முறையே அபூர்வவிதி, நியமவிதி, பரிசங்கியாவிதி யெனக்கூறுப. அவையெல்லாம் மீமாஞ்சை நூலுட் காண்க' என்பது சிவஞானபாடியம் முதற்சூத்திரத்து மூன்ருமதிகாண வுரைப்பகுதி. நியாயப்பிரகாசத்து கஉ0அ, கஉ0கூ, கஉக0 பகுதிகளாலும் மேற்கூறப்பட்டவற்றை யறிக.

வருணித்துக் கூறுவது; அது நியமவிதி விடயத்தைப் புகழ்தலும், விலக்குவிதி விடயத்தைப் பழித்தலும், பிறர் செய்கை காட்டலும், பழைய நிகழ்ச்சி கூறலும் உடையதாகி, விதியின் சேடமாய்நிற்கும்.[1]

இங்ஙனங் கூறப்பட்ட மந்திரவாதம், விதிவாதம், அர்த்தவாதம் என்னும் மூன்றும் விரவியதே சுருதியாம்.

அதி கம்பீரமாகிய சுருதியின் பொருளை உணர்தற்கு உபகாரமாகிய நூல்கள், சுருதியின் அங்கம் எனப்படும்; அவை நிருத்தம், வியாகரணம், சிக்ஷை, சந்தசு, சோதிடம், கற்பம் என ஆறும்.[2]

கம்பீரம் - ஆழம்.

நிருத்தத்திலே பதவிவரணமும், வியாகரணத்திற் பத இலக்கணமும், சிக்ஷையிலே பத உச்சாரண இலக்கணமும், சந்தசிற் செய்யுளிலக்கணமும், சோதிடத்திற் கால விசேட இலக்கணமும், கற்பத்திற் கிரியாப்பிரயோக இலக்கணமும் நிரூபிக்கப்படும்.

---

1. இவ்வருத்தவாதம் குணவாதம், அநுவாதம், பூதார்த்தவாதமென மூவகைப்படும். அவற்றின் இலக்கணங்களை நியாயப்பிரகாசத்து ௧௨௧௩, ௧௨௧௪, ௧௨௧௫-வது பகுதிகளிற்காண்க.

2. நிருத்தம் யாஸ்காசாரியாராலும், வியாகரணம் சிக்ஷையிரண்டும் பாணினி முனிவராலும், சந்தசு பிங்கள நாகாசாரியாராலும், சோதிடம் இலகதாசாரியாராலும், கற்பம் ஆசுவலாயனர் போதாயனர் முதலியோராலுஞ் செய்யப்பட்டனவென அறிக.

## சுருதிப் பிரமாணம்

இனிச் சுருதியின் உண்மைத்தன்மையைத் துணிதற்குச் சுருதி, சாத்திரம், உலோகப் பிரசித்தி என்னும் மூன்றும் பிரமாணமாம்.

அவற்றுட் சுருதியானது, தனது சாமர்த்தியத்தினாலே தன்னுண்மைக்குப் பிரமாணமாம்.

**சாமர்த்தியம்-தகுதி, வலிமை, இணக்கம்.**

சுருதியின் சாமர்த்தியம் சத்த சாமர்த்தியமும், அர்த்தசாமர்த்தியமும் என இருவகைப்படும்.

சுருதியின் சாமர்த்தியங்களாவன:—

க. சுருதியின் சத்தங்களெல்லாங் குற்றமின்றிக் குணலக்ஷணமமைந்த வர்ணம், பதம், வாக்கியம் முதலிய அவயவ அவயவிகளாய் இணங்கிப், பொருளைப் பொருந்த உணர்த்தற்கு அநுகூலமாகிய முறையுடையனவாய் நிற்றல்.

உ. சில விசேடசத்தங்கள் விதிப்படி உச்சரிக்கப்பட்டுழி வியாதிநீக்கம், விடநீக்கம், பிசாசநீக்கம் முதலிய பிரத்தியக்ஷ சித்திகளைப்பயத்தல்.

ங. சிலசத்தங்கள் சுருதியின் ஆக்கியோன், பெயர், பகுப்பு, அளவு, விடயம், பயன், சுருதி உற்பத்தியின் காலம், இடம், பிரகாரம் என்பவற்றை உணர்த்திநிற்றல்.

இவை மூன்றுஞ் சத்த சாமர்த்தியங்கள்.

ச. சுருதியில் உணர்த்தப்பட்ட அர்த்தங்களெல்லாம் எல்லாக்கூறுகளிலும் வியாகாதம்[1] புநருத்தத்துவம்[2] முதலிய விரோதமின்றி இணங்கி, வேறு பிரமாணங்களாலே தடுக்கப்படாமல், மெய்யாகிப், பதிமகிமை விளக்கற்கும், பசுப்பிரயோசன சித்தி விளைத்தற்கும் அநுகூலமாயிருத்தல்.

ரு. சுருதியில் உணர்த்தப்பட்டனவாய்ச், சீவர்களுக்கு அநுபூதி[3] யுத்தி மாத்திரத்தாற் கிரகிக்கப்படாதனவாய் உள்ள பரோக்ஷமாகிய பரமார்த்தங்கள் யுத்தியோக்கியமாக உணரப்படுதல்.

சு. சுருதியில் உணர்த்தப்பட்ட சில விசேடப்பொருள்கள் விதிப்படி பிரயோகிக்கப்பட்டுழிக், குறிக்கப்பட்ட பிரத்தியக்ஷ சித்தியைப் பயத்தல்.

எ. சுருதியிற் கூறப்பட்ட இறந்ததும், எதிர்வதும், நுண்ணியதும், மறைந்ததும், சேயதும் ஆகிய இவ்விதப்பட்ட அர்த்தங்கள் பொய்ம்மையின்றி உண்மை யுடையனவாதல்.

இவை நான்கும் அர்த்த சாமர்த்தியங்கள்.

சுருதியின் அங்கங்களின் சாமர்த்தியமுஞ் சுருதி சாமர்த்தியமேயாம்.

இச்சாமர்த்தியங்களுள், மூன்றுவது சத்தப்பிரமாணம்; ஏனைய ஆறும் அநுமானப்பிரமாணம்; அவற்

---

1. வியாகாதம் - முன்னொடு பின் முரணுதல்.
2. புநருத்தத்துவம் - கூறியது கூறுதற்றன்மை
3. அநுபூதி - அநுபவம்.

றுள்ளும் முதலாவதும், நாலாவதும் சுருதிப் பொதுத் தன்மையையும், ஏனையன சுருதிச் சிறப்புத்தன்மை யையும் உணர்த்துவன; இரண்டாவதும், ஆறாவதும், ஏழாவதுங் காட்சியானும், ஏனையன உரையானும் உணர்தற்பாலன.

முதலாவதும், நாலாவதும், ஐந்தாவதும் அகண் டச்சுருதியில் இருப்பன; ஏனையன கண்டச் சுருதி யில் இருப்பன.

இனிச் சாத்திரங்களாவன, சுருதியின் வேருகிய நூல்களாம்:[1] அவை அனுகூலசாத்திரமும், பிரதிகூல சாத்திரமும், உதாசீன சாத்திரமும் என மூவிதமாம்.

அனுகூலம்-உறவானது. பிரதிகூலம்-பகையானது.
உதாசீனம் - நொதுமலானது.[2]

அவற்றுண் முன்னைய இரண்டுமே பெரும்பான் மையாகச் சுருதிக்குப் பிரமாணமாம்.

அனுகூல சாத்திரமாவது, ஆத்தவாக்கியமாகி, ஐகிகார்த்தங்களையும் பரோக்ஷார்த்தங்களையுங் குற்ற

---

1. ஸ்ரீ சிவஞான சுவாமிகள் 'நூலெனப்படுவன வெல் லாம் ஒரு நிகரனவாதலின்றி முதனூல் வழிநூல் சார்புநூல் பூருவபக்க நூலெனப் பல வேறுவகைப்பட்டு' எனச் சிவ ஞானசித்தி எட்டாஞ்சூத்திரம் கஅ-வது செய்யுளுரையிற் கூறுதல் காண்க.

2. நொதுமல் - நண்பு பகையிரண்டுமில்லாதது.

மற உணர்த்திச், சுருதியின் முதன்மையை விளங்கப் போதிக்கின்ற வழிநூலாம். இது சத்தப்பிரமாணம்.

ஐகிகம் - இம்மைக்குரியது. பரோக்ஷம் - பிரத்திய க்ஷமாகாதது.

பிரதிகூல சாத்திரம், அநாத்த வாக்கியமாகி, ஐகிகார்த்தங்களையும் பரோக்ஷார்த்தங்களையுங் குற்ற முற உணர்த்தி, நியாயமின்றிச் சுருதியை விரோதிக் கின்ற விரோத நூலாம்; அஃது அநாத்த வாக்கிய மென்பது, அதன் சாமர்த்தியமில்லாமையால் விளங் கும்.

துர்ப்பலமாகிய விரோதநூலாற் பாதிக்கப்படாத தன்மையே, பிரபலமாகிய சுருதியின் முதன்மையை உணர்த்தும் அனுமானம்; அதனை எதிர்மறையாற் பயக் கும் விரோதநூல் அனுமான காரண சத்தம்.

உதாசீனசாத்திரம் சுருதியைச் சார்தலும் மாற னுதலுமின்றி, ஐகிகார்த்தங்களை உணர்த்துகின்ற நொாதுமனூல்; அது ஏகதேசத்திற் சுருதிவிடயங்க ளுக்கு இணங்குதலாற் பிரமாணமாம். இது சத்தம்.

இனி உலோகப்பிரசித்தி என்பது, உலகத்திலே நிகழும் பிரசித்தி; இது ஆரியலோகப் பிரசித்தி என விசேடிக்கப்படும்.

ஆரியம் - நற்குலமுடையது, முறையுடையது, நல் லது, பூசிக்கப்படுவது. உலோகம் - பூமி, சனம். பிரசித்தி- வழக்கம், பயிற்சி, வெளிப்பாடு, பரந்து நிகழும் நிகழ்ச்சி.

ஆரியபூமி என்பது, ஆதிகுருவாகிய கடவுளும்,[1] அவனருள்பெற்ற திவ்விய சீடகணமுங் காலந்தோறும் வெளிப்பட்டருளிய நல்லிடங்களோடு கூடியதாய், ஆதியிற்றொடங்கி இடையறாது தொடர்ந்து நிகழ்கின்ற நல்லியற்கையும், நற்பொருளும், நற்சனமும், நற்சாத்திரமும், நல்லறிவும், நற்றொழிலும், நற்பயனும் என்னும் இவற்றை உடையதாயுள்ள சுத்தபூமி.

ஆரியசனம் என்பது, ஆரியபூமியில் ஆதிதொட்டு வசிக்கின்ற நற்பரம்பரையும், நல்லறிவொழுக்கமும், நற்பத்தியும், நற்சித்தியுமுடைய உயர்ந்தசனம்.

உலோகப் பிரசித்தி உலோக சம்பிரதாயமும், உலோகா சரணமும் என இருவிதமாம்.

சம்பிரதாயம் - பாரம்பரியமாகவரும் உபதேசநியமம்.
ஆசரணம் - செய்கை, ஒழுக்கம், நடை.

ஈண்டு உலோக சம்பிரதாயமாவது, இதுவே ஈசுவரீயமாகிய சுருதி எனவும், இதுவே சுருதியின் வர்ண பத சுர வாக்கிய உச்சாரணநியமம் எனவும் இப்படியே சுருதியை நியமிப்பதாகிப், பண்டுதொட்டு

---

1. சிவபெருமானே ஆதிகுருவென்பதனைத் 'திருமாலிந் திரன்பிரம னுபமனியன் றபனனந்தி செவ்வே ளாதித், தருமமுதற் குரவருக்குந் தனதருளா லாசிரியத் தலைமை நல்கி, வருமெவர்க்கு முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம் மலரும் வாய்ந்த, வுருவழகுங் குறுநகையுங் காட்டியரு டருஞ்சிவனை யுளத்தில் வைப்பாம்' என்னுஞ் சிவதத்துவவிவேகச் செய்யுளாலறிக.

நெடுங்காலம் பல ஆரியசனங்களிடத்திற் பாரம்பரியமாகப் பயின்றுவரும் உபதேச நியமம். சம்பிரதாயம் பழையதும் பரந்து நிகழ்வதுமாயிருத்தலிற் காலதேச வியாபியாதலானும், நிகழ்விப்போருடைய தகுதியானுஞ்[1] சமூலமாம் என உணரப்படும். இது சத்தம்.

சமூலம் - மூலமுடையது.

உலோகாசாரமாவது, சுருதிவிடயங்களை அதிப்பிரயாசத்தோடு உணர்தலும், உணர்த்தலும், அநுட்டித்தலும், அநுட்டிப்பித்தலும், பத்தி சித்தி சுத்தி முத்திகளைப் பெறுதலும், பெறுவித்தலுமாகிய ஆரிய சனங்களின் செய்கையாம்; இவை காட்சியானும், கேள்வியானும், சரித்திரங்களானும் உணரப்படும். இது அநுமானம்.

இங்ஙனங் கூறப்பட்ட சுருதிசாமர்த்தியம், சாத்திரம், உலோகப் பிரசித்தி என்னும் மூன்றுஞ் சுருதியுண்மைக்குப் பிரமாணமாம்.

அம்மூன்றனுள், சுருதிசாமர்த்தியம் சுருதியின் அகத்திருக்கும் பிரமாணமாதலின், ஆந்தரப் பிரமாணம் எனப்படும்; ஏனைச் சாத்திரமும், உலோகப்பிரசித்தியும் சுருதியின் புறத்திருக்கும் பிரமாணமாதலின், வாகியப்[2] பிரமாணம் எனப்படும்.

---

1. நிகழ்விப்போருடைய தகுதியாவது சம்பிரதாயம் நடைபெறுமாறு செய்பவரது கௌரவத்தன்மை.

2. வாகியம் - பாஹ்யமென்பதன் றிரிபு.

ஆந்தரம் - அகத்தது. வாகியம் - புறத்தது.

வாகியப் பிரமாணம் ஆந்தரப் பிரமாணத்தைச் சார்ந்து உபகாரகமாய் நிற்றலின், அதனினும் ஆந்தரப் பிரமாணமே பிரபலம்; ஆந்தரப் பிரமாணங்களுள்ளும் அனுமானங்கள் பிரபலம்; அவற்றுள்ளும், கண்டச் சுருதிகளில் உள்ளவை அக்கண்டங்களோடு சுருதியிற் பிரிந்து நிற்குமிடத்து அவற்றின் மூலநிலையை எளிதினுணர்தல் கூடாமையின், அகண்டச் சுருதியில் உள்ளனவே பிரதானம். காட்சியானுணரப்படுவனவற்றிலும் உரையானுணரப்படுவனவே எல்லாருக்கும் உபயோகிகளாக்கப்படுவன; பிரதானங்களுக்கு ஆவசியக அங்கமாயின், அப்பிரதானமும் பிரதானமாம்; ஆதலின் முதலாவதும்,[1] நாலாவதும், ஐந்தாவதுமாகிய அனுமானங்களும், மூன்றாவதாகிய சத்தமும் என்னும் நான்கும் பிரதானப் பிரமாணங்களாம்; அவற்றுள்ளும், சுருதியின் பொதுத்தன்மையோடு கூடிய சிறப்புத்தன்மையை நியதமாக உணர்த்தி, ஏனையவற்றையுந் தன்பாற்படுத்து நிற்றலின், ஐந்தாவதே அதிப் பிரதானப் பிரமாணமாம்.

அவ்வனுமானங்களைச் சுருக்கியடக்கிய இரண்டு அனுமானங்கள் பிரயோகிக்கப்படுகின்றன:—

---

1. இங்கே சொல்லப்பட்ட முதலாவது நாலாவது ஐந்தாவது மூன்றாவது ஐந்தாவது என்பன முன் சுருதிப் பிரமாணமென்னும் பகுதியிற் கூறப்பட்ட சுருதி சாமர்த்தியத்தின் இலக்கங்களாம்.

க.—இச்சாத்திரம் ஆதிச்சுருதி, யுத்தியதீதார்த் தங்களை யுத்தியோக்கியமாக உணர்த்தும் ஆதிவாக்கிய மாதலால், யாது ஆதிச்சுருதியன்று அது யுத்தி யதீதார்த்தங்களை யுத்தியோக்கியமாக உணர்த்தும் ஆதிவாக்கியமுமன்று, சிவசாத்திரம் போல என்பது. இது கேவல வியதிரேகியனுமானம்.

> யுத்தி - கருதல், பொருந்தல், பொருத்தல், நியாயம். அதீதம் - கடந்தது, மேற்போனது, எட்டாதது. அர்த்தம் - பொருள், பயன். யோக்கியம்-பொருந் துவது, இணங்குவது, ஏற்பது, தக்கது, விரோத மாகாதது.

இதனுள்: "யுத்தியதீதார்த்தங்களை யுத்தி யோக்கியமாக உணர்த்தும் ஆதிவாக்கியமாதலால்" என்பதே ஏது.

இதன் விவரணங் கூறப்படுகின்றது:—

யுத்தி என்பது அனுமானமும், அனுமிதியும், காணப்பட்டதைப் போலக் காணப்படாததைக் கற்பித் தலும், சாதக பாதகப்[1] பிரமாணங்களைப் பிரயோகித் தலுமாம்.

> சாதகம் - சாதிப்பது.

ஒரு பொருளிலே மாறுபட்ட இரண்டு தன்மை யாகிய விகற்பம் இருத்தலின்மையின், நியாய வித்தி

1. பாதகம் - தடை.

யாப்பியாசம்[1] முதலியவற்றால் விளங்கிய புத்தியில், அப்பொருளைத் திருட்டாந்தமாகக் கொண்டு முடியும் யுத்தி, புருட புத்திதோறும் விகற்ப முடையதன்று; பொருள்களெல்லாம் ஒத்தவியல்பும் ஒவ்வாவியல்பும் உடையனவே யாதலின், அவ்வியல்புபற்றி முடிக்கப் படுந் தாட்டாந்திகத்திலும் யுத்தி விகற்பமுடைய தன்று.

தாட்டாந்திகம்-திருட்டாந்தத்தான் முடிக்கப்படுவது.

பொருளின் விசேடமுணராமை முதலிய குற்றம் பற்றிய புத்தியின் முடியும் போலியுத்தி மாத்திரம் விகற்பமுடையதாம்.

யுத்தியதீதம் என்பது, அனுபூதி யுத்திகளாற் கிரகிக்கப்படுதற்கு யோக்கியமல்லாதது. யுத்தியதீதம் எனவே அனுபூதியதீதம் என்பதும் விளங்கும்.

சத்த பரிச ரூப ரச கந்தங்களாகிய மூர்த்த குணங்களும்[2] வெளிப்பட்ட குறியும் இல்லாதனவும், நுண்ணியனவும், மறைந்தனவும், சேயனவும் யுத்தி யதீதங்களாம்.

அர்த்தம் என்பது, அறியப்படுவதும் பெறப்படு வதும். இரு என்னுந் தாதுவின் ஆதேசமாகிய அர் என்பது போதலும், அறிதலும், பெறுதலும். தகாரஞ்

1. நியாய வித்தியா அப்பியாசம் - நியாயசாத்திர அறி வுப் பழக்கம்.

2. மூர்த்தகுணம் - பௌதிக குணம்.

செயப்படுபொருள் விகுதி. பதி பசு பாசங்களாகிய பொருளும், போக மோக்ஷங்களாகிய பயனும், அவற்றின் சாதனமும் அர்த்தங்களாம்.

யுத்தி யோக்யமாதல் என்பது, அவ்வதிகாரத் தங்கள் உரையானுணரப்படுமிடத்துத் தம்மியல்பான் ஒன்றோடொன்று இணங்குதலும், திருட்டாந்தமாகிய பிறபொருள்களின் இயல்போடு ஒருவாற்றானும் பலவாற்றானும் ஒத்து இணங்குதலும், ஒரோவழி அநுபூதி யுத்திகளானுணரப்படுமிடத்து விபரீதமாகாமையும் உடையனவாகிப், பரீக்ஷகருடைய யுத்திக்குப் பொருந்துவனவாதல். கால தேச பேதத்தில் வெவ்வேறு பொருள் விசேஷங்களையறிந்த பரீக்ஷகருடைய யுத்திக்கும் அவை யோக்கியமாயிருத்தல், சாத்திர லோகப் பிரசித்திகளால் உணரப்படும்.

ஆதிவாக்கியம் [1] என்பது, பிறிதோர் வாக்கியத்தின் வழியே செய்யப்படாது முதல்வனால் முதற்கட் செய்யப்பட்ட மூலமாகிய வாக்கியம்.

இனி ஏது விசேஷணப் [2] பிரயோசனங் கூறப்படுகின்றது :—

---

1. இதனையே ஸ்ரீ அரதத்தாசாரியர் 'அநபேக்ஷிதயா ப்ரமாணம்' என்றருளிச் செய்தனர். சுலோக முழுவதும் ௩௧ வது பக்கத்து 1. 2. குறிப்புக்களிற் காண்க.

2. விசேஷணம் - அடைமொழி.

ஈண்டு "யுத்தியதீத" என்பதனால் அநுபூதி யுத்தி யோக்கியப்பொருளை யோக்கியமாக உணர்த்தும் ஆத்த சாத்திரங்களிலும், "யுத்தியோக்கியமாக" என்பதனால் யோக்கியப்பொருளையேனும், அதீதப்பொருளையேனும் அயோக்கியமாக உணர்த்தும் பிராந்தவஞ்சக சாத்திரங்களிலும், "ஆதி" என்பதனாற் சுருதியையுணர்ந்த பராபர அபராத்தாற் செய்யப்பட்டுச் சுருதிப்பொருளையே உணர்த்துகின்ற பிரகரண சாத்திரங்களிலும் இவ்வேதுவுக்கு வியபிசாரம் விலக்கப்பட்டது. ஆதலின் இவ்வேது அநைகாந்திகமன்று; விபக்ஷத்தில் இருத்தலின்மையின் விருத்தமுமன்று; பக்ஷத்திலிருத்தல் உணரப்பட்டுழி, அசித்தமுமாகாது.

அங்ஙனமாக, நியாயவித்தியாதி சாத்திராப்பியாச சாமர்த்தியத்தால் விளங்கிய சமர்த்தபுத்தியுடைய அதி சமர்த்தனாகிய வஞ்சகனொருவன், தன்னாலுணரப்படாத அதீதார்த்தங்களைத் தன்புத்தியாற் கற்பித்து, அவை பிறர் யுத்தி பரீக்ஷைக்கு யோக்கியமாகும்படி தன் யுத்தி பரீக்ஷைகொண்டே நியமித்துக் கூறுவானாயின், அந்நூல் யுத்திக்கு யோக்கியமாக உணரப்படாதோ எனின், அது பயின்றவற்றையே யோக்கியமெனக் கொள்ளுமியல்பினராகிய இலௌகிகர் சிலருக்கு யோக்கியம்போன்று உணரப்படுமாயினும், சற்சாத்திரபரிசீலனமும், சூக்ஷ்மபுத்தியும், ஊகாபோக சாமர்த்தியமும்[1] உடைய பரீக்ஷகர்

1. ஊகாபோக சாமர்த்தியம் - வெளிப்படலில்லாதவற்றை யுணர்ந்து பொருளை அநுபவிக்கும் திறமை.

களுடைய யுக்திபரீக்ஷைக்குப் பரஸ்பர விரோதம், திருட்ட விரோதம், அனுபவ விரோதம் என்பவற்றை யுடைமையாற் பலவாற்றால் அயோக்கியமாகவே உணரப்படும்.

சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனுடர் எத்துணைச்சாமர்த்தியம் அடையினும், அதீதப் பொருள்களைத் தம்மாற்றலாற் கிரகிக்கமாட்டார்; தாம் பெற்ற கருவிகொண்டு உணர்தற்கு யோக்கியமான பொருள்களுள்ளுஞ் சிலவற்றையே உணர்வர்; அவற்றுள்ளுஞ் சிலவற்றையே ஐயந்திரிபின்றியுணர்வர்; அவற்றுள்ளுஞ் சிலவற்றையே விசேடித்துணர்வர்; உணர்ந்தவற்றுள்ளுஞ் சிலவற்றை மறப்பர்.

அவர் தம் புத்தியால் விசேடித்துணர்ந்த பொருளைமாத்திரம் உள்ளபடியமைத்துக் கூறும் நூல் யோக்கியமாம். அதிலும் ஒரோவழிக் குற்றங் காணப்படும்.

“அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு”[1]

இனி உணர்ந்த பொருளோடு விசேடித்துணராத பொருளையுங் கலந்துகூறும் நூலிற் பல குற்றங்

---

1. திருக்குறள் ௫௱௩. இத்திருக்குறள் அமைச்சர் முதலாயினாரை அரசன் தெரிந்து தெளியுமாறு கூறுகின்றது. துரோணர் அரியகற் றாசற்றாரை அரசன் தெளியலா மென்பதனை மறுத்துத் திருவள்ளுவர் இது கூறுகின்றார்.

கள் காணப்படும்: ஆகவே உணரப்படாத பொருள் களைப் புத்தியாற் கற்பித்துப் பொருத்திக்கூறும் நூலிற் காணப்படுங் குற்றங்கள் அளவுபடுவனவா?

புத்தியானது, தனக்கு அடங்காத விடயங்களைக் கற்பித்து, யுத்தி பரீக்ஷை செய்து நியமிக்கப் புகுங்கால், தன் சாமர்த்தியமிழந்து செல்லவேண்டும்: செல்லவே, ஆண்டுத் தன் வியாபார முடித்தற்குத் தக்க கருவியாகாது; தகாத கருவியேயாம்; அதினுங் காம வெகுளி மயக்கங்களினாற் கலங்கிய புத்தி மிகத்தகாத கருவியேயாம். தகாத கருவியான் முடிந்த காரியமாகிய நூல் தக்கதாகுதல் எங்ஙனம்?

"காரணந் தன்னோடொத்துக் காரியந்தோன்றும் யாண்டும் - காரண விரோதியாகிக் காரியந் தோன்றலின்றே"

மனுடன் குறைவுடையனாதலின், அவனாலாகிய காரியங்களுங் குறைவுடையனவேயாம்; ஈசுவர சிருட்டியுஞ் சீவசிருட்டியுந் தம்மியல்பான் வேறு வேறாயிருக்கும்; மனுடன் ஈசுவர சிருட்டியோடொப்பச் சிருட்டிசெய்தற்கு ஒருகாலத்தும் வல்லனல்லன்; ஈசுவரசிருட்டியைக் கண்டுழிப், புத்தி யுத்திகொண்டு இலக்ஷண பரீக்ஷணஞ் செய்து, இஃதின்னது என்று துணிதற்கு மனுடன் வல்லனேயாம். சுருதியும் ஈசுவர சிருட்டியாதலின், மனுடநூலுஞ் சுருதியுந் தம்மியல்பான் வெவ்வேறாம்.

சுருதி கண்டங்களேனுஞ்[1] சுருதிகல்டார்த்தங் களேனும் மனுடநூலிற்கலந்து வைக்கப்படினும், அவை தெரியுங்காற் பிரிந்துதோன்றும்; சுருதியோ டொப்ப நூல் செய்தற்கு மனுடன் ஒருகாலத்தும் வல்லனல்லன்; சுருதியைப் பரீக்ஷித்து இது சுருதியன்று இதுவே சுருதி என்று துணிதற்கு வல்லனேயாம்.

குதிரையைச் செய்யமாட்டாத மனுடன் குதிரையைப் பரீக்ஷித்துப் நிச்சயித்தலும், இரத்தினஞ் செய்யமாட்டாதவன் இரத்தினத்தைப் பரீக்ஷித்து நிச்சயித்தலுந் திருட்டாந்தமாக, ஒருபொருளேச் செய்ய மாட்டாதானும் அதனேப் பரீக்ஷித்து நிச்சயித்தல் கூடுமென்னும் யுத்தி முடிக்கப்படும்.

ஆதலின், போலிச் சுருதிகளெல்லாம் போலியிரத்தினங்கள்போலப் பரீக்ஷையாலளந்து தள்ளப்படும்; ஆதிச்சுருதி சாதியிரத்தினம்போலப் பாதிக்கப்படாமற் பேதித்து[2] நிற்கும். இங்ஙனமாதலின், அவ்வேதுவுக்கு வியபிசாரமே இல்லே.

இனி இரண்டாமனுமானம்:— "சுருதிவாக்கியங்கள் தமது அர்த்தங்களே உள்ளபடியறிந்தவனுற் செய்யப்பட்டன, சமர்த்தவாக்கியமாதலின், யாது சமர்த்த வாக்கியம், அது தனது அர்த்தத்தை உள்ளபடியறிந்தவனுற் செய்யப்பட்டது, இலௌகிக ஆத்தவாக்கியம்

1. கண்டம் - பகுதி

2. பேதித்தல் - வேறுபடுதல்

போல; யாது தனது அர்த்தத்தை உள்ளபடியறிந்தவ ைறற் செய்யப்பட்டதன்று அது சமர்த்த வாக்கியமு மன்று, பிராந்த வாக்கியம்போல என்பது. இது அன் னுவய வியதிரேகியனுமானம்.

சமர்த்தம் - சாமர்த்தியமுடையது.

பொருளுணர்ச்சி யின்றிச் சொல்லுணர்ச்சி மாத் திரங் காரணமாகச் செய்யப்பட்ட வாக்கியத்தின் ஏது வுக்கு வியபிசாரம் விலக்குதற்பொருட்டுச் "சமர்த் தம்" என்னும் விசேடணங் கொடுக்கப்பட்டது.

சுருதியின் பரமார்த்தங்களைச் [1] சுருதிஞானத்தா னன்றி அனுபூதி ஞானமாத்திரத்தான் முதற்கண்ணே உள்ளபடியறிதற்குச் சீவர்கள்யாவருந் தக்கவரல்லரா தலின், அதற்குத் தக்கவன் ஈசுவரன் என்பது பெறப் படும்.

இங்ஙனங் கூறப்பட்ட இரண்டனுமானங்களுஞ் சுருதியினுண்மையைத் துணிவித்தற்கு அமையும்.

உலகத்திலே உள்ள சீவர்களெல்லாருக்கும் உண ரப்படுவனவற்றை உணர்ந்து, ஒழிக்கப்படுவன வற்றை ஒழித்துச், செய்யப்படுவனவற்றைச் செய்து, பெறப்படுவனவற்றைப் பெற்று, உறுதிப்பயனை உறு தல் அத்தியாவசியகமாகிய பரமப்பிரயோசனமாம்.

---

1. பரம அர்த்தம் - மேலான பொருள்.

சீவர்கள் அப்பொருள்களனைத்தையுங் கண்டுணர்தற்குத் தக்க சுத்தானுபூதிக்கருவியைப் பெற்றவரல்லர்; பெறுதற்குப் பக்குவர் ஆயினோருமல்லர்.

ஆதலின் அவற்றைத் தன்னனுபூதி மாத்திரத்தாற் கண்டுணர்ந்த ஈசுவரன் உபதேசிக்க, அச்சீவர் கேட்டுணர்தற்கு ஓர்கருவி வேண்டப்படும்; அதுவே சுருதியாம்.

ஆகவே சீவர்களை உணர்த்திச் செய்வித்து உறுதிப்பயனை உறுவித்தல் சுருதியின் பிரயோசனம்.

சுருதி நிரூபணம்

முற்றிற்று.

# சமய நிரூபணம்

## சமய இலக்கணம்

சமயமாவது, சுருதியிலே நியமிக்கப்பட்ட பரமப் பிரயோசன சித்திக்கு அனுகூலமாகிய பதார்த்த நியமமேயாம்: பரசித்திக்கு அனுகூலமாகிய சித்தாந்த பக்ஷமே சமயம் எனினுமொக்கும்.

சித்தாந்தம் - முடிந்த முடிபு.

சமயம், மதம், மார்க்கம் என்பன பரியாயம்.

சமயம் என்பது நியமித்தலும், நியமித்தற் கருவியும், நியமிக்கப்பட்டதுமாம். நியமித்தலென்பது வரையறுத்தலும், துணிதலும், உடன்படுதலும், விதித்தலும், கட்டுதலுமாம்.

இ - போதல், உணர்தல் என்னுந் தாதுவின் ஆதேசமாகிய அய் என்பது, சம் என்னும் உபசருக்கத்தை முதலிற் கொண்டு, உடன்போதல், உடன்படல், நியமித்தல் என்னும் பொருளுணர்த்தி நின்றது. அ என்னும் விகுதி தொழிற்பொருளும், கருவிப்பொருளும், செயப்படுபொருளுங் குறிப்பதாம். "சமயமென்பது நியமமு முடன்பாடும், முடிந்த துணிபு மொழுக்கமு மெல்லையும், குறியுங் காலமுஞ் சபதமுமாகும்" என்பது ஆரியநிகண்டு.

மதம் என்பது கருதப்பட்டதும், உடன்படப் பட்டதும், கோளுமாம்.

மங் - அறிதல், கருதல், உடன்படல் என்பது தாது. த என்பது இறந்தகாலச் செயப்படுபொருளும், தொழிற்பொருளும் உணர்த்தும் விகுதி.

மார்க்கம் என்பது தேடுதற்கருவியும், சுத்தியாக்குதற் கருவியுமாம்.

மார்க் - தேடுதல்; மிருச் என்னுந் தாதுவின் ஆதேசமாகிய மார்க் - சுத்தியாக்கல் என்பன இரண்டும் பகுதிகள். அ என்பது கருவிப் பொருள் உணர்த்தும் விகுதி.

சமயமானது குறித்த பொருளை அடைவிக்கும் வழி போலுதலின் மார்க்க பரியாயம் பெறுமென்றலும் பொருந்தும்.

பரமப் பிரயோசனமாவது, பேரின்பமாகிய முத்தியேயாம். முயற்சிக்கு ஏதுவாகிய இச்சைக்கு விடயமாவதே பிரயோசனம் என்பது.

## சமய பதார்த்தம்

சமய விடயமாகிய பதார்த்தங்களாவன, பதி, பசு, பாசம், பதிகிருத்தியம்,[1] பசுகருமம், பசுபோகம் முத்திசாதனம், முத்தி என்னும் எட்டுமாம்.

அப்பதார்த்தங்களைச் சாதி, பண்பு, தொழில் முதலிய இலக்கணங்களானும், பிரமாணங்களானும், நியமிப்பதே பதார்த்த நியமமாம்.

1. கிருத்தியம் - தொழில்

அப்பதார்த்தங்களுட் பதியாவான், சுவதந்திர சேதன கருத்தா[1] வாகி எல்லாப் பசுக்களுக்கும் அனுக்கிரகஞ் செய்பவன்.

பசுவாவான், அறிவு இச்சை தொழில்களை யுடைய சேதனனாய் அனுக்கிரகம் பெறுபவன்.

பாசமாவது, சடமாகி, ஆன்மாவின் முத்தியனுப வத்துக்கு விரோதியாயும், போகானுபவத்துக்கு அனு கூலமாயும் உள்ள பொருளாம்.

பதி கிருத்தியமாவது, பதியினுடைய தொழி லாம்: அது சிருட்டி, திதி, சங்காரம், திரோதானம், அனுக்கிரகம் என ஐந்தாம். அவை தமிழின் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத் தல், அருளல்எனப்படும்.[2]

பசு கருமமாவது, பசுக்களுடைய தொழிலாம்: அது புண்ணியம் பாவம் என இரண்டாம்.

பசுபோகமாவது, பசுக்களுடைய இன்ப துன்ப நுகர்ச்சியாம். பசுக்களின் கருமபோகங்களுக்கு உரிய பூமிகள் மத்தியம், சுவர்க்கம், நரகம் என மூன்றாம்.

முத்தி சாதனமாவது, முத்தி சித்தியைச் சாதிக் குங் கருவியாயுள்ளது.

---

1. தன்வயமுடைய அறிவுடைய வினைமுதல்

2. இவ்வைந்தனையும் 'அழிப்பிளைப்பாற்றல்' என்று தொடங்குஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானும் அதற்குச் சிவஞான சுவாமிகள் அருளிய உரையானுமறிக.

முத்தியாவது, ஆன்மாப் பாசசம்பந்த நீங்கித் தன் சுவரூபம் அடைந்துநிற்றல்.

## சமய பதார்த்தப் பிரமாணம்

காரியமெல்லாங் காரணமுடையனவாதலிற், காரியமாகிய உலகத்திற்கு நிமித்தகாரணமாகிய பதி ஒருவன் உளன்.

காரியமெல்லாம் பயன்படுவனவேயாதலிற், காரியமாகிய உலகத்தினாற் படும்பயனைக் கொள்வோராகிய பசுக்கள் உளர்.

அப்பசுக்கள் தடுக்கப்பட்ட அறிவாற்றலுடையராகித், தம்வசமின்றிக், குற்றமுடையனவாகிய நாநாவித போகம்பற்றி உழத்தலின், அதற்குக் காரணமாகிய பாசம் உளது.

பதி பசு பாசங்களின் உண்மையைச் சாதித்தற்கு முறையே ஒன்பதும், ஆறும், மூன்றுமாகிய பிரதான அனுமானங்கள் தருக்கநூல்களிற் கூறப்பட்டன.

பாசஞ் சடமாதலானும், பசுத் தன்வசமிலியாதலானும், அவற்றின் வியாபாரத்துக்குக் காரணமாகிய பதிகிருத்தியம் உளது.

காணப்படுதலால் உலக ஸ்திதியும், காரியப்பொருளெல்லாந் தோற்றமும் அழிவும் உடையனவாதலால் உலகத்தின் சிருட்டி சங்காரங்களும், உயிர்கள் அதிநிந்திதமாகிய[1] போக்கியப் பொருளினும் பற்று

---

1. அதி நிந்திதம் - மிகவு மிகழப்படுவது.

வைத்து வழுவாது நிற்றலின் அதற்குக் காரணமாகிய திரோதானமும், முற்றறிவனது கிருத்தியங்கண் முடிவின் முக்கியப் பயன்றருங் கிருத்தியத்தை உடையனவாதலின் அனுக்கிரகமும் உள்ளனவாம். இங்ஙனமே பதிகிருத்தியம் ஐந்து விதமாம்.

மனம் வாக்குக் காயங்களால் ஈட்டப்படுதலானும் போக நிமித்தமாதலானும் பசுகருமம் உளது.

போகமானது சுகமுந் துக்கமும் என இருவிதமாதலால், அதின் நிமித்தமாகிய கருமமும் புண்ணியம், பாவம் என இருவிதமாயுள்ளது.

ஈட்டப்பட்ட வினையின் பயனுகை அனுபவிக்கப்படுதலிற் போகமும் உள்ளது. சுகதுக்கங்களைக் கலந்து நுகர்தற்குரிய இடமாகிய மத்தியபூமி இருத்தலின், அவற்றை மிகுதிபற்றி வேறு வேறு நுகர்தற்குரிய இடமாகிய சுவர்க்க நரகங்களும் உள்ளன.

சாதனமின்றிச் சாத்தியம் முடியாமையாற், சாத்தியமாகிய முத்தியை முடித்தற்குச் சாதனம் உளது.

முற்றறிவனுடைய கிருத்தியத்தான் முடிவின் முடியும் முக்கியப் பயனுதலின், முத்தியும் உளது.

இங்ஙனமே அட்டபதார்த்தப் பிரமாணங் கூறப்பட்டது.

சமயநிரூபணம்

முற்றிற்று.

# சைவச் சுருதி நிரூபணம்

அநாதி பகவானாகிய[1] சிவனால் ஆன்மாக்களுக்கு அனுக்கிரகிக்கும் பொருட்டுப் பிரதம மகாசிருட்டியா ரம்ப காலத்திலே செய்யப்பட்ட ஆதிச் சுருதியானது, சாமானிய விசேடபேதத்தால்[2] வேதம் ஆகமம் என இரண்டு மகா விபாகமாயிருக்கும்.

அவற்றுள் வேதமானது, இருக்கு, யசு, சாமம், அதர்வம் என நான்கு விபாகமாம்.

ஆகமமானது காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விஜயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் என இருபத்தெட்டு விபாகமாம்.

அச்சுருதி பரகுருவாகிய சிவனால் ஆதியில் உபதேசிக்கப்பட்டுப், பராபர குருக்களாகிய அனுசதாசிவ

---

1. பகவற் சத்தத்தாற் குறிக்கப்படும் பொருள் ஸ்ரீசிவ பெருமானே யென்பது ஸ்ரீ அரதத்தாசாரியரால் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் வச்சிரலேபஞ் செய்யப்பட்டது.

2. சாமானிய விசேட பேதம் - பொதுச் சிறப்பென்னும் பாகுபாடு. இதனைச் சிவஞானபாடியத்திற் பாயிர வுரையிற் காண்க.

வித்தியேச மந்திரேசர்களாலும், அபர குருக்களாகிய முனி தேவ மனுடர்களாலும் வழிமுறையாகப் போதிக்கப்பட்டுப் பூமியில் வந்து வழங்குகின்றது.

அது சுருதி லக்ஷணமுஞ் சுருதிவிபாக லக்ஷணமுங் குறைவற உடையதாய், ஆறுவகைப்பட்ட அங்க நூல்[1] களோடு கூடினதாய் இருக்கின்றது.

அச்சுருதியின் பிராமாணியமானது, சுருதி சாமர்த்தியம், சாத்திரம், லோகப்பிரசித்தி என்னும் மூன்றானுஞ் சாதிக்கப்படுகின்றது.[2]

அச்சுருதியின் சாமர்த்தியஞ் சுருதியால் நியமிக்கப்படுகின்ற சைவ சமய பதார்த்தங்களின் பொருத்தம் ஆராய்ந்து துணியப்பட்டவழி விளங்கும்.

அச்சுருதிக்கு அனுகூல சாத்திரங்களாவன, புராணங்களும், மிருதிகளும், தரிசன நூல்களும்,[3] உபாகமங்களும்,[4] வைத்தியம், சிற்பம், கணிதம் முதலியனவுமாம்.

---

1. ஆறுவகைப்பட்ட அங்கநூல் - சிக்ஷை, வியாகரணம், சந்தசு, கற்பம், நிருத்தம், சோதிட மென்பன.

2. முன் சுருதிப் பிரமாணப் பகுதியிற் காண்க.

3. தரிசன நூல்களாவன - சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகம், மீமாஞ்சை, வேதாந்தமென்னும் நூல்கள். இவை ஷட்தரிசனமென்றுஞ் சொல்லப்படும்.

4. உபாகமங்கள் மிருகேந்திரம், பௌஷ்கரம், தேவிகாலோத்தரம் முதலிய இருநூற்றேழாம்.

சுருதிக்குப் பிரதிகூல சாத்திரங்களாவன, உலோகாயதம், பௌத்தம், ஆருகதம்,[1] விவிலியம்,[2] முதலாயின[3] அவற்றிற் கூறப்பட்ட சமய பதார்த்தங்களின் பொருந்தாமை ஆராய்ந்து துணியப்பட்ட வழி அவற்றின் துர்ப்பலத்தன்மை விளங்கும்; விளங்கவே சுருதியின் பிரபலத்தன்மை தெளியப்படும்.

பூலோகத்திலே உத்தமோத்தமமகத்துவமுடைய பாதகண்டமும், அதில் வசிக்கின்ற மகாசனமுமே ஆரியலோகம் எனப்படும்.

ஆண்டுள்ள சமயவிடயப் பிரசித்தியே லோகப்பிரசித்தி எனக் கொள்ளற்பாலது.

அச்சுருதியால் நியமிக்கப்பட்ட பதார்த்த நியமமே சைவசமயம் எனப்படும்.

சைவம் - சிவனாற் செய்யப்பட்டது, சிவனைத் தெய்வமாகவுடையது, சிவசம்பந்தமுடையது. சைவன் என்பது சிவபத்தன் என்ற பொருளுமுடைத்து.

சைவச் சுருதி நிரூபணம்

முற்றிற்று.

---

1. ஆருகதமென்பது ஜைன மதம். சமணமென்பதும் அது.

2. விவிலியமென்பது கிறிஸ்து மதம்.

3. முதலாயின வென்பதனால் மகம்மதிய மதமும், பிரமசமாச முதலிய நவீன மதங்களும் கொள்ளப்படும்.

# சைவ சமய நிரூபணம்

---

## பதி

இனி அச் சைவச் சுருதியிற் கூறப்பட்ட பதிமுதலிய பதார்த்தங்களின் நியமம் மிகச் சுருக்கி முறையானே கூறப்படும்.

பதி - காக்கிறவன். பா - காத்தல். தி - வினைமுதற் பொருள் விகுதி.

உலகங் காரியமாயிருத்தலால் அதற்குக் காரக[1] மாகிய கருத்தாவும், கரணமும்,[2] நிமித்தமும்,[3] உபாதானமும்[4] உளவென்று அறியப்படுகின்றன. கருத்தாக் கரணத்தைக்கொண்டு நிமித்தத்தைக்குறித்துக் கிருத்தியஞ் செய்தலால், உபாதான காரணத்திலிருந்து உள்ளகாரியமுதித்தல் யாண்டும் நியதமாகக் காணப்படுகின்றதன்றோ.

காரியங்களின் ஒற்றுமை முடிபாற் கருத்தா ஒருவன் என்பது நொய்ம்மையிற்[5] பெறப்படுகின்றது: காரியங்களின் விசேடத்தாற் கருத்தாவின் விசேடம் விளங்கும்.

---

1. காரகம் - செய்பவன்
2. கரணம் - கருவி
3. நிமித்தம் - பொருட்டு
4. உபாதானம் - முதற் காரணம்
5. நொய்ம்மை - எளிமை; இலகு

கருத்தா அறிந்தே செய்தல்வேண்டுதலின் ஞாதா[1] எனவும், தடையின்றி எல்லா மறிந்து செய்தல் இயலுதலிற் சமர்த்தன் எனவும், என்றும் எங்கும் காரியமியற்றலாற் காலதேசங்களால் வரையப் படாமை யின் அநாதி நித்திய வியாபகன் எனவுங் குறிக்கப்படு கின்றனன்.

அநாதியும் வியாபகனுஞ் சேதனனுமாகிய கருத் தாவுக்கு, ஆதியும் அவ்வியாபகமுஞ் சடமுமாகிய கர ணம் பொருந்தாமையின், அக்கருத்தாவின் சாமர்த்தி யமே கரணம் எனக் கொள்ளப்படுகின்றது.

அநாதி மல பெத்த சீவர்களுக்குரிய போக மோக்ஷப் பிரயோசனசித்தியே கிருத்திய நிமித்த மாம்.

காரியம் அநாதியாகவே மாறிமாறித் தோன்றி ஒடுங்கலானும், வியாபித்தலானும், சடமாதலானும், அதற்கு அநாதி நித்திய வியாபக சடவஸ்துவாகிய மாயையே உபாதான காரணமாம்.

சுவதந்திர வியாபக கருத்தாவுக்கு ஆதாரம் வேண்டப்படுவதின்று. சருவகருத்தாவின் ஞானமுங் கிரியையும் அநாதியே சமர்த்தமாகி விளங்குதலின், அவை விளங்குதற்பொருட்டுச் சரீரமுதலிய பிறகருவி வேண்டப்படா: கருத்தாவின் சத்தியே சரீரகாரிய மியற்றுதலிற் சரீரமென்று கற்பிக்கப்படும்.

---

1. ஞாதா - அறிபவன்

கருத்தாவின் கிருத்தியம் சிருட்டி, திதி, சங்காரம், திரோதானம், அனுக்கிரகம் என ஐந்தாம். அனுக்கிரகம் ஒன்றே பிரதானம்.

கருத்தாவினது தன்மை கருத்திருத்துவம் எனப்படும்.

கருத்திருத்துவமாவது, கிருத்தியமுடிபுக்குச் சுவதந்திர காரகமாதற்றன்மை: அஃது அநாதி சித்தமாம். அந்தக் கருத்திருத்துவத்திற் காரிய சனன அனுகூலமாகிய காரண சாமக்கிரியோடு கூடிய சங்கற்பரூபமாகிய அவிகாரகிருத்தியம் வெளிப்படும்: அதினாலே சடவஸ்துவின் சலனரூபமாகிய விகாரக்கிரியை பிறக்கும்: அதனாற் காரிய முண்டாம். இங்ஙனமாதலிற் கருத்தா அவிகாரியே என்பது. [1]

சனனம் - பிறத்தல். சாமக்கிரி - முழுமை. சலனம்- புடை பெயர்ச்சி.

இங்ஙனங் கூறப்பட்ட பஞ்சகிருத்திய கருத்தாவாகிய பதிக்கு உரியனவாகிய பிரதான குணங்கள் முற்றறிவு, வரம்பிலின்பம், அநாதியறிவு, தன்வசம், குறைவிலாற்றல், வரம்பிலாற்றல் என ஆறும். [2]

---

1. இறைவன் அவிகாரி யென்பதைச் சிவஞானபோதத்து ஐந்தாம் சூத்திரத்து உ-வது அதிகரண மாபாடிய வுரையிற் காண்க.

2. இறைவனுக்கு இவ்வாறு குணங்களு மிருத்தலின் அவன் சாட்குண்ய னெனப்படுவன்.

சருவ கருத்தாவுக்கு எல்லாப்பொருளையும் புலப் படக்காணுகின்ற அறிவு உள்ளவழியன்றி எல்லாக் கிருத்தியமுஞ் செய்தல் கூடாமையின் முற்றறிவும், இன்பக்குறைவுண்டாயின், தனது அனுபவ நிமித்தம் பிறிதினை வேண்டுதலுமுண்டாம் ஆகவே சருவ கருத் திருத்துவவிரோதம் எய்துமாதலிற் குறைவற்ற நிறை வாகிய வரம்பிலின்பமும், முற்றறிவு அநாதியன்றி ஆதியாயிற் காரணத்தால் வந்ததெனின் வரம்பின்மைக் குற்றமும், காரணமின்றி வந்ததெனிற் காரண காரிய சம்பந்த நியமபங்கப் [1] பிரசங்கக் குற்றமும் எய்துமா தலின் அநாதியறிவும், பிறர்வசமுண்டேற் பாசத் தடையுமுண்டு என்பது போதலின், வேண்டாத செய் தலும் வேண்டியசெய்தாமையுமாகிய குற்றம் பற்று மாதலின் தன்வசமும், ஆற்றல் குறையுமேல் எல்லாக் காலத்தும் எல்லாத் தேசத்தும் இளைப்பின்றிக் கிருத் தியமியற்றுதல் இயலாமையிற் குறைவிலாற்றலும், அவ்வாற்றல் வரையப்பட்டதாயின் வரையப்படாத கிருத்தியமியற்றுதல் கூடாமையின் வரம்பிலாற்றலும் ஆகிய இவ்வாறு குணங்களும் பதிக்கு வேண்டப்படு கின்றன.

இங்ஙனமே அநாதிமலமுத்தனுய்ச், சுத்தசாட் குண்ணிய பரிபூரணனுய், அநாதி பெத்தராகிய பசுக் களுக்கு உபகரிக்கும்பொருட்டுத் தனது சத்தியென் னுங் கருவியைக்கொண்டே பஞ்சகிருத்தியஞ் செய்யு மியல்பினனுய், இலயம், போகம், அதிகாரம் என்னும்

---

1. பங்கம் - தவறு.

வியாபாரபேதத்தால் ஈசன், சதாசிவன், சாந்தன்[1] என்னும் மூவித ஸ்வரூபமுடைய ஒருவனேயாய் உள்ள பரமசிவனே பரமபதி என்பது சைவச்சுருதி சித்தம்.

பசு

காரியமாகிய உலகம் அசேதனமாதலாலே தனக்கும், வரம்பிலின்பமுடையனுதலாற் பதிக்கும், குடம் முதலியனபோலப் பரிணமமுடைமையானும், அனுபோகிக்கப்படுதலானுஞ் சடமேயாதலிற் சரீரத்துக்கும் பயன்படுவதன்று; விசேடகருத்தாவாகிய பதியினுற் செய்யப்பட்டமையிற் பயனற்றதுமன்று: ஆதலிற் பிறர்க்குப் பயன்படுவதே என்பது பாரிசேடப்[2] பிரமாண சித்தம்.

அப்பிறராவார்,—"நான் இருக்கின்றேன் நான் உணர்கின்றேன்" என்றற்றொடக்கத்து வழக்கங்களிலே தனித்தனியே "நான் நான்" என்னுஞ்சொற்களுக்கு விடயங்களாயுள்ள ஆன்மாக்களே.

அவ்வான்மாக்கள் அநாதி பாசபந்தமுடைமையிற் பசுக்களென்று சொல்லப்படுவர்.

பச் - பந்தித்தல். உ-செயப்படுபொருள் விகுதி.

அப்பசுக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூவகையர். அவர்களுள், விஞ்ஞானகலர்

---

1. இலயபோக அதிகாரசிவபேதங்களைச் சிவஞான பாடியத்திற்காண்க.

2. பாரிசேடம் - ஒழிபு.

ஆணவமலமாத்திரம் உடையவர்; பிரளயாகலர் அதனோடு கருமமலமும் உடையவர்; சகலர் அவற்றோடு மாயாமலமும் உடையவர்.

அப்பசுக்களுட் கரும நாசத்தால் அதிபக்குவ மலராயினோர் சமஸ்த பாசத்தின் நீங்கிப் பரமுத்தராயிருப்பர்.[1]

பக்குவமலராயினோர் பாசத்தின் நீங்கிப், பாச வாசனைமாத்திரம் நீங்காமல் அபரமுத்தராய்ப்,[2] பதியின் ஆஞ்ஞையினால் அதிகாரகிருத்தியஞ் செய்து கொண்டிருப்பர்.

அற்ப பக்குவரும், அபக்குவரும் ஸம்ஸாரிகளாயிருந்து தத்தமக்கியன்ற தொழிலியற்றுவர்.

இங்ஙனமே அகண்ட பூரண நித்திய வியாபக சச்சிதானந்த ரூபராய், அமூர்த்தராய், அநாதியாகவே பாசத்தால் மறைக்கப்பட்ட சிற்சத்தியுடையவராய், மலசம்பந்தத்தால் அறிவிலராய், மாயாசம்பந்தத்தாற் சிற்றறிவராய்ப், பாச முத்தியின்முற்றறிவராதற்கு யோக்கியராய் உள்ள ஆன்மாக்களே பசுக்கள் என்பது.

## பாசம்

உலகத்திலே கட்டுப்பாட்டுள் அடக்கப்படாத வனுகி விடுதலை பெற்றிருப்பவன் தன்வசமுடையவ

---

1. பரமுத்தர் - சிவசாயுச்சியம்பெற்றோர்.
2. அபரமுத்தர் - சுத்ததத்துவபுவனவாசிகள்.

தனுலும், கட்டுப்பாடுற்றவன் பரவசமுடையவனுத லும் பிரசித்தமாகும்.

பசுக்கள் வேண்டாததுபெறுதலும், வேண்டியது பெருமையும் உடையரேயாய் இருக்கின்றனர். இங் ஙன மிருத்தல் பரவசமெனப்படும். பரவசமுடைய ராகவே கட்டப்பட்டவரென்பது நிச்சயிக்கப்படும். ஆதலிற் கட்டிய கருவியே பாசம் என்பது.

பச் - பந்தித்தல். அ - கருவிப்பொருள் விகுதி.

அகண்ட நித்திய வியாபக சத்தும், சடமும், அமூர்த்தமும்,[1] பாதந்திரமும், கழிவனவாகப் பரிண மித்தற் கேற்ற சத்திகளையுடையதும், அஞ்ஞான காரணமும், திரவியரூபியும், ஆன்மசிற்சத்திப் பிரகா சத்தை மறைத்து நிற்பதும் ஆகிய ஆணவமலமே பிர தான பாசமாம்.

அகண்ட நித்திய வியாபக சத்தும், சடமும், அமூர்த்தமும், பாதந்திரமும், காரியரூபமாகப் பரிண மித்தற்கேற்ற சத்திகளையுடையதும், அற்ப ஞானப் பிரகாசமும், திரவியரூபியும், காரியபதார்த்தங்களின் முதற்காரணமும் ஆகிய மாயையும் பாசமாம்.

பிரவாக அநாதியும்,[2] உற்பத்தி நாசம் உடைய தும், அவ்வியாபகமும், சத்தும், சடமும், அமூர்த்த

---

1. அமூர்த்தம் - வடிவமின்மை.

2. பிரவாக அநாதி-'நாசோற்பத்தி பண்ணிவருமாதலா லநாதி' என்னும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தாலறிக. நாசோற்பத்தி-நாசத்தில் உற்பத்தி யெனவிரியும்.

மும், பரதந்திரமும், விசித்திரமும், போக நிமித்த மும், குணரூபியும், மாயையிலிருப்பதும்,[1] ஆன்மாக்க ளுடைய நாநாவித போக பதார்த்த சம்பந்தத்துக்கு நிமித்தகாரணமும் ஆகிய கருமமும் பாசம் என்று சொல்லப்படும்.

காரிய பதார்த்தம் காரணமுடையதாய்க், கண்ட மாய்,[2] ஆதியந்தமுடைய அநித்தியமாய், அவ்வியாபக மாய்ச், சத்தாய்ச், சடமாய், அமூர்த்தமேனும் மூர்த்த மேனுமாய், அவயவமுடையதாய்ப், பிரிக்கப்படுவ தாய், இயங்கியற்றொழில் உடையதாய்ச், சார்புடைய தாய் இருக்கும்.

ஆணவமலசத்தி காலத்தாற் பாகமடைந்த தாகியே, ஆன்மசத்தியை மறைத்தலினின்று நீங்கும்; நேத்திர படலம் போல.

கருமமலமுங் காலாந்தரத்திற் பாகமடைந்த தாகியே, போகபலங் கொடுத்துப் பின் அழியும்; கடுக் காய் முதலிய மருந்துபோல.

பாகமடைதற்கேற்ற பொருளெல்லாம் பிறபொரு ளைச் சார்ந்தே பாகமடையும்; பால்போல.

அங்ஙனமே மலசத்தி மாயாகாரியங்களோடு கலந்தே பாகமடையும். அப்பாகம் உயிர்களின் மல

---

1. கருமம் மாயையைப் பற்றியிருப்பதென்பதனைச் சிவஞானபாடியம் உ. உ-ல் காண்க.

2. கண்டம் - வரையறைப்பட்டது.

சத்திகளிற் காலந்தோறும் வேறு வேறு பேதமாக உண்டாகும்.

மலபாக தாரதம்மிய காரணத்தால் உயிர்களுக்கு முத்திசாதனங்களும், பத்தி, சிரத்தை, சேவை முதலிய சாதனாங்க குணங்களும்; உரியகாலமும் அநேக பேதமாம்: அதனால் முத்தியும் அநேகவிதமாம்.

## பதி கிருத்தியம்

பதியானவன், கூடஸ்த நித்திய மலத்தோடும், பிரவாக நித்திய கருமத்தோடும் அநாதி சம்பந்த முடையவராகிய ஆன்மாக்களுக்கு மோக்ஷங் கொடுத்தற்பொருட்டுக் கொண்ட பெருங்கருணையினாலே சிருட்டி, திதி, சங்காரம், திரோபாவம், அனுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களை[1] அநாதியே செய்கின்றான்.

சிருட்டியாவது, முதற்காரணத்திலிருந்து காரியத்தை வெளிப்படுத்தலும், சேதனர்களுக்குத் தேகங்களைக்கூட்டி மறைந்திருந்த அறிவு இச்சை தொழில்களை வெளிப்படுத்தலுமாம்.

அசேதன சிருட்டியுள், மாயை முதலிய காரணத்திலிருந்து மணமுதலிய தத்துவங்களைப் பிறப்பித்தல் தத்துவசிருட்டி எனவும், தத்துவத்திலிருந்து போக தேகரூபமாகிய தாத்துவிகங்களைப்[2] பிறப்பித்தல் தாத்துவிகசிருட்டி எனவும் பெயர்பெறும்.

---

1. இவ்வைந்தொழில்களும் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளலெனவும் படும்.
2. தத்துவத்தின் காரியம் தாத்துவிகம்.

திதியாவது, வெளிப்படுத்தப்பட்ட காரியப் பொருள்களைத் தத்தந்தொழிலிலே நிலைபெற நிறுத்தலும், தேகசம்பந்த முடையராகிய சேதனர்களைத் தத்தம் விடயத்திலே நியோகிக்க[1] நிறுத்தலுமாம்.

சங்காரமாவது, காரியங்களை முதற்காரணத்தின் மறைத்தலும், சேதனர்களுக்குத் தேகங்களைப்பிரித்து அறிவு இச்சை தொழில்களை மறைத்தலுமாம்.

திரோபாவமாவது, பாசங்களுக்குச் சாமர்த்திய முண்டாக்குதலாகிய அனுக்கிரகத்தைச்செய்து, அதனாற் சேதனர்களை ஏற்றபோகங்களை வழுவாமல் உண்ணும்படி தடுத்தல்.

அனுக்கிரகமாவது பாசங்களுக்குச் சாமர்த்தியந் தடுத்தலாகிய திரோபாவத்தைச்செய்து, அதனாற் சேதனர்களுக்குக் கலப்பற்ற சுத்த ஸ்வரூப சாமர்த்தியம் உண்டாகும்படி தீக்ஷையால் உபகரித்தல்.

ஐந்தொழில்களுள், அனுக்கிரகம் ஒன்றே மோக்ஷத்துக்குக் காரணம்; ஏனைய நான்கும் அனுக்கிரக நிமித்தமாகிய மலபாகத்துக்குங் கருமநாசத்துக்குங் காரணமாகிய போகத்துக்குக் காரணம்.

அவற்றுள்ளுஞ் சங்காரம், கருமபாகத்துக்கும் மாயா சாமர்த்திய உற்பத்திக்கும் உயிர்களின் இளைப்பாறுதற்கும், சிருட்டி, போகசாதன சம்பத்திக்கும்; திதி, பக்குவ கருமபோகத்துக்குங் கருமார்ச்சனத்

1. நியோகம் - முயற்சி.

துக்கும், திரோபாவம், போகத்தில் அமிழ்ந்தற்குங் கருமநாசத்துக்கும் மலபாகத்துக்கும் காரணமாம்.

**கருமார்ச்சனம் - கருமங்களை ஈட்டுதல்.**

அநாதி முத்த பரசிவன் பிரதம மகாசிருட்டி காலத்திலே, சுத்தமாயையிலிருந்து பொருட் பிரபஞ்ச முஞ் சொற்பிரபஞ்சமுமாயிருக்கின்ற சுத்த தத்துவம் ஐந்தையும், சுத்த புவனங்களையும், சுத்த போக்கியப் பொருள்களையும், சுத்த சுத்தாசுத்த அசுத்தாத்துவ வாசிகள் எல்லாருக்குந் தனித்தனி வேண்டப்படுகின்ற நாதரூப பரதேகங்களையும், சுத்தாத்துவாவிற்கு உரிய சூக்கும ஸ்தூல தேகங்களையும், சுத்தாத்துவ வாசிக ளாகிய அணுசதாசிவர் வித்தியேசர் மந்திரர் முதலிய தேகிகளையும், வேதாகமங்களையும் படைத்து, நியத கால[1] பரியந்தங் காத்து, அவாந்தரத்திற்[2] சிலவற்றை யும், பிரதம மகாசங்கார காலத்தின் முழுதையுஞ் சங் கரிப்பன்.

வித்தியேசருள்ளே தலைவனாகிய அனந்தேசு வரன் மகாசிருட்டிகாலத்திலே, அசுத்தமாயையி லிருந்து புவனக்கொத்துஞ் சூக்கும தேகக்கொத்தும் என்னும் இருவிதமாயிருக்கின்ற காலாதி பிருதிவி யந்தமான முப்பது தத்துவங்களையும், சுத்த அசுத்தாத் துவ வாசிகளாகிய சிறீகண்டன் முதலிய தேகிகளை யும் படைத்து, நியதகால பரியந்தங்காத்து, அவாந்

1. நியத காலம் - வரையறை செய்யப்பட்ட காலம்.
2. அவாந்தரம் - இடையிட்டது.

தாரத்திற் சிலவற்றையும், மகாசங்கார காலத்தின் முற்றையும், சிறீகண்டாதித் துவாரத்தாலுந்[1] தானுகவுஞ் சங்கரிப்பன்.

குணநிலயச் சிறீகண்டருத்திரன் மத்திய சிருட்டி காலத்திலே, பிரகிருதியிலிருந்து புவனுதாரக் கொத்துமாத்திரமா யிருக்கின்ற குணதி பிருதிவியந்தமான[2] இருபத்துநான்கு தத்துவங்களையும், போக்கியப் பொருள்களையும், தூல தேகங்களையும், அசுத்தாத்துவ வாசிகளாகிய பிரமா விட்டுணு முதலிய தேகிகளையும் படைத்து, நியதகால பரியந்தங் காத்து, மத்தியசங்கார காலத்தின் முற்றையுஞ் சங்கரிப்பன்.

குணநிலயப் பிரம விட்டுணுக்களும், பிரமாண்ட நிலயப் பிரம விட்டுணுக்களும் அதமசிருட்டி காலத்திலே, குணதி பிருதிவியந்த புவனங்களிற் போக்கியப் பொருள்களையும், தூல தேகங்களையும், தேவர் முதலிய தேகிகளையும் படைத்துக் காப்பர்.

அவருள்ளும் பிரமனுனவன், பிரசேசர், சோமர், தேவர், கந்தருவர், இயக்ஷர், ரக்ஷர், பிசாசர், மனுடர், தாவரம், சரீசிருபம், பசு, பக்ஷி, மிருகம் என்பவற்றையுட், நக்ஷத்திரம், கிரகம், தூமகேது, மேகம், மலை, கடல், யாறு முவலியவற்றையும் படைத்தான்.

---

1. துவாரம் - வாயில்.

2. குணதத்துவமுதல் பிருதிவிதத்துவ மிறுதியாக வுள்ள.

சோமர்-பிதிர்கள். சரீசிருபம் - ஊர்வன.

பிரமனும், விராட்டும், பிரசேசரும், பிறரும் நித்தியசிருட்டி காலத்திலே பிரமாண்டத்துப் படைக்கின்றனர்; விட்டுணு முதலாயினோர் காக்கின்றனர்.

சிறீகண்டரால் ஏவப்படுகின்ற காலாக்கினி ருத்திரன் அதமசங்கார காலத்திலும், நித்திய சங்கார காலத்திலும் தானுகவும் இயமன் முதலியவராலுஞ் சங்கரிப்பன்.

இங்ஙனம் பிரதம மகாசிருட்டி, மகாசிருட்டி, மத்தியசிருட்டி, அதமசிருட்டி, நித்தியசிருட்டி என ஐவகைச் சிருட்டியும் அப்படியே ஐவகைச் சங்காரமும் உள.

திதிகாலத்திலே திரோபாவமும் சங்காரகாலத்திலே அனுக்கிரகமும் நடக்கும். [1]

இனிக் கால பரிமாணங் கூறப்படுகின்றது.

மனுடருடைய வருஷந் தேவருக்கு ஒரு தினமாம்: அதில் உத்தராயணம் பகலும், தக்ஷிணாயனம் இரவுமாம். முந்நூற்றறுபது தேவதினங் கூடினால் ஒரு தேவவருடம். பன்னிரண்டாயிரந் தேவவருடங் கூடினால், ஒரு தேவயுகம்: அதுவே சதுர்யுகமாம். எழுபத்தொரு தேவயுகங் கூடினால், ஒரு மன்

1. இதனைச் சிவஞான சித்தியார் க. கூஎ, க. ருச, திருவிருத்தங்களுக்குச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த உரையால் தெளிக.

னுவந்தரம். இந்திராயுக்காலமும் அவ்வளவினதே யாம். ஆயிரந் தேவயுகந் திரும்பினாற், பிரமனுக்கு ஒரு பகலாம். ஒரு பிரமப் பகலிலே பதினாலு மன்னு வந்தரம் உள: ஆறு தேவயுகஞ் சேடமாம். பின்னும் ஆயிரந் தேவயுகந் திரும்பினாற், பிரமனுக்கு ஒரு இராத்திரியாம். ஆகவே இரண்டாயிரந் தேவயுகம் ஒரு பிரமதினமாம். முந்நூற்றறுபது பிரமதினம் ஒரு பிரம வருடமாம். நூறு பிரமவருடம் பிரமாயுக் காலமாம். பிரமாயுக்காலம் இரண்டு கூடினால் விட்டுணு தினமாம். விட்டுணு தினம் முந்நூற்றறுபது கூடினால் விட்டுணு வருடமாம். விட்டுணு வருடம் நூறு கூடின், விட்டுணுவாயுக்காலம். விட்டுணுவாயுக் காலம் இரண்டு கூடின், உருத்திர தினமாம். உருத் திர தினம் முந்நூற்றறுபது கூடின் உருத்திர வருட மாம். உருத்திரவருடம் பரார்த்தங் கூடின் உருத்தி ராயுக்காலமாம். உருத்திராயுக்காலம் இரண்டுகூடின் ஈசுவர தினமாம். ஈசுவர தினம் முந்நூற்றறுபது கூடின், ஈசுவர வருடமாம். ஈசுவர வருடம் பரார்த் தங் கூடின், ஈசுவராயுக்காலமாம். ஈசுவராயுக்காலம் இரண்டுகூடிற் சதாசிவ தினமாம், சதாசிவ தினம் முந்நூற்றறுபது கூடிற் சதாசிவ வருடமாம்.

பிரமப்பகலிலே நித்தியசங்காரமும், பிரமப்பக லின் முடிவிலே திரிலோக விஷயமாகிய அதம சங்கார மும், பிரமாயு முடிவிலே குணதி பிருதிவியந்த விஷய

---

1. இந்திராயு - இந்திரனது வாழ்நாள்.

மாகிய மத்திய சங்காரமும், உருத்திராயு முடிவிலே மாயாவிஷயமாகிய பிரதம மகாசங்காரமும் நிகழும்.

## பசு கருமம்

பசுக்கள் சரீரமெடுத்துக்கொண்டு அநாதி கருமத்தின்வழியே போகம் புசிக்கும்போது செய்யுங் கருமங்கள், புண்ணியம் பாவம் [1] என இருவிதமாம்.

புண்ணியமாவது, விதிக்கப்பட்ட வினைவடிவமாய்ச், சுகசாதனமாய் இருப்பது.

பாவமாவது, விலக்கப்பட்ட வினை வடிவமாய்த், துக்க சாதனமாய் இருப்பது.

அல்லதூஉம் உயிர்க்கு இதஞ்செய்தலே புண்ணியம்; உயிர்க்கு அகிதஞ் செய்தலே பாவம்.

புண்ணியம் - சரியானது, நலமானது, அழகியது.
பாவம்-தீயது, கேடானது.

புண்ணியங்களாவன :—பத்தி, கருணை, மைத்திரி, முதிதை, உபேக்ஷை, நீதி, பொறை, அடக்கம், ஆதரம், இலச்சை, சிரத்தை, கொல்லாமை, மெய்ம்மை, கள்ளாமை, காமியாமை முதலியனவும், சௌசம், சந்தியாவந்தனம், பூசை, செபம், தவம், தானம், ஓதல் முதலியனவுமாம்.

---

1. 'வேதாகம நூல்வழி நில்லாமை பாவம், நூல்வழி நின்று அருள்வழி நில்லாமை புண்ணியம்' என்பது சிவஞான சித்தியார் உ.கூ௧ சிவஞானசுவாமிகள் உரை.

பத்தி—ஈசுவரனிடத்தும் உயர்ந்தோரிடத்தும் பற்றுதலாம்.

கருணை—உயிர்களுடைய துக்கத்தை மாற்ற விரும்பல்.

மைத்திரி—புண்ணியஞ் செய்வோரிடத்துச்சிநேகம்.

முதிதை—சுகிகளிடத்து உவகை.

உபேக்ஷை—பாவிகளிடத்தில் வெறுப்பு.

நீதி—பலருஞ் சுகமடைய நடத்தும் முறை.

பொறை—பிறர்செய்த தீமையை மாறுசெய்யாது சகித்தல்.

அடக்கம்—குலம், கல்வி, செல்வம்முதலியவற்றால் உயர்வுபெற்றிருந்தாலுஞ் செருக்கற்றுத் தன்னைக் கீழ்ப்படுத்தல்.

ஆதரம்—உபசரித்தல்.

இலச்சை—தகாதகாரிய முயற்சியிலே மனத்தைச்சுருக்கல்; பழிக்கப்பட்ட செய்கையின் விலகுதல்.

சிரத்தை—ஆராயப்பட்ட பொருளிலே இஃது இப்படியேயன்றிப் பிறிதுபடியன்று என நிகழும் நிச்சயபுத்தி.

கொல்லாமை—உயிரை உடம்பின் நீக்காமை.

மெய்ம்மை—உள்ளபடி கூறல்.

கள்ளாமை—பிறர்பொருளை அனுமதியின்றி மறைவாகக் கவராமை

காமியாமை—விலக்கப்பட்ட பெண்களைப் புணர விரும்பாமை.

சௌசம்—மண் சலம் முதலியவற்றாற் சுத்தி செய்தல்.

சந்தியாவந்தனம்—நன்கு தியானிக்கப்படுங் கடவுளை நியத காலத்திலே வழிபடல்.

பூசை—ஈசுவரனை விம்பத்திலே பாவித்து, உபசரித்து, உபாசித்தல்.

செபம்—வாச்சியப்பொருளாகிய ஈசுவரனை எதிர் முகமாக்குதற்பொருட்டு வாசகமாகிய மந்திரத்தை உச்சரித்தல்.

தவம்—மனம் இந்திரியவிடயத்திற் போகாமல் ஈசுவரவிடயத்திலே நிற்றற்பொருட்டு, உணவைக் குறைத்து உடம்பை ஒறுத்தல்.

தானம்—நீதிவழியாற்பெற்றபொருளைப் பிரத்தியுபகாரம்[1] குறியாது சற்பாத்திரருக்கு அன்போடு கொடுத்தல்.

ஓதல்—நல்லறிவு உதித்தற்பொருட்டு மெய்ந் நூல்களைப் படித்தல்.

பாவங்களாவன—ஈசுவரதூஷணம், சீவவிரோதம், துரோகம், காமம், உலோபம், கார்ப்பணியம், மற்சரம், வஞ்சனம், மதம், அநாதரம், கோபம், அசூயை, பொய், குறளை, கடுஞ்சொல், கொலை, களவு,

1. பிரத்தியுபகாரம் - கைம்மாறு.

வியபிசாரம், நன்றிமறத்தல், புலாலுண்ணல், கள்ளருந்தல், அசௌசம், நித்தியகருமலோபம் முதலியனவாம்.

ஈசுவரதூஷணம்—கடவுளை நிந்தித்தலும், கடவுளுக்குப் பிழைசெய்தலும், கடவுளிற் பற்றின்மையும், கடவுளாணையைக் கடத்தலுமாம்.

சீவ விரோதம்—சீவர்களிற் பகைசெய்தல்.

துரோகம்—கெடுக்க விரும்பல்.

காமம்—தகாத காரியத்தில் விரும்பல்.

உலோபம்—அந்நியாயமாகப் பிறர் பொருளில் விரும்பல்.

கார்ப்பணியம்—உசிதகாரியத்திற் செலவிடாது பொருளைக்காக்க விரும்பல்

மற்சரம்—பிறருடைய நன்மையைத் தடுக்க விரும்பல்.

வஞ்சனம்—உள்ளதை மறைத்து இல்லதைக் காட்டல்.

மதம்—செருக்கு; தன்னிலே இல்லாத குணங்களை ஏற்றித் தன்னுயர்ச்சி கருதல்.

அநாதரம்—அவமதித்தல்; பற்றின்மை.

கோபம்—வேண்டப்பட்டது தடைப்பட்டவிடத்துத் தோன்றுகின்ற மனக்குழப்பம்; வந்த தடையிலே முரணுதல்.

அசூயை—பிறருடைய குணத்திற் குற்றமேற்றல்.

பொய்—இல்லது கூறல்

குறளை—பைசுனட; காணாதவழிப் பிறரை இகழ்ந்து கூறல்.

கடுஞ்சொல்—நிட்டுரவசனம்.

கொலை—உயிரை உடம்பின் நீக்கல்.

களவு—பிறரது பொருளை அனுமதியின்றி மறைவாகக் கவருதல்.

வியபிசாரம்—நியமந்தவறிப் புணருதல்.

நன்றிமறத்தல்—பிறர்செய்த நன்மையை மறத்தல்.

புலாலுண்ணல்—உயிரிற் பிரிந்த பிணத்தை யுண்டல்.

கள்ளருந்தல்—வெறிக் காரணமாகிய சாற்றை யுண்டல்.

அசௌசம்—சுத்திசெய்யாமை.

நித்தியகருமலோபம்—நியதகாரியமாகிய சந்தியாவந்தனம் முதலியவற்றை விடல்.

மெய்யறிவே சகல புண்ணியங்களுக்கும் மூலமாம். விபரீதவறிவு சகல பாவங்களுக்கும் மூலமாம். சிவபத்தியுஞ் சீவகருணையுமே பிரதான [1] புண்ணியங்களாம். சிவதூஷணமுஞ் சீவவிரோதமுமே பிரதான பாவங்களாம்.

இப்பசுகருமங்கள் பதிநியமத்தாற் போகத்துக்குச் சாதனமாமன்றிச் சுவதந்திரசாதனமாவன அல்ல.

---

1. பிரதானம் - முக்கியம்.

பசுபுண்ணியத்தாற் சுகபோகமன்றி முத்தி சித்தித்தல் இல்லை.

## பசு போகம்.

பசுபோகமாவது, விடய விம்பிதமாகிப்[1] போக்கிய ரூபமாகிய புத்தியின் சாயையின் சம்பந்தத்தினாலே பசுவின் சிற்சத்தியில் ஆகின்ற உணர்ச்சி விளக்கமேயாம்.

அந்தப் போகமானது, சுகமுந் துக்கமுமென இருவிதமாம்.

பசுக்கள் சிருட்டிமுதலாக நிலைபெற்ற பரதேக சூக்குமதேகங்களை விடாது தரித்துநின்று, புண்ணிய பாவக் கலப்பினாலே மத்தியலோகத்திற் சென்று, பூதபரிணாம உற்பூதமாகிய தூலதேகத்தைத் தரித்துச், சுகதுக்கங்களை அனுபவித்துப், புண்ணியபாவங்களைச் செய்து முடிவிலே தூலதேகத்தை விடுவர்.

பரிணாமம் - திரிபு. உற்பூதம் - தோன்றியது.

புண்ணியமிகுதியாலே சுவர்க்கலோகத்திலே சென்று, பூதசார உற்பூதமாகிய தூலதேகத்தைத் தரித்து, அதிக சுகத்தை அநுபவித்து, முடிவிலே தூலதேகத்தை விடுவர்.

பாவமிகுதியினாலே நரகலோகத்திற் சென்று, பூத உற்பூதமாகிய தூலதேகத்தைத்[2] தரித்து, அதிகதுக்கத்தை அநுபவித்துத், தூலதேகத்தை விடுவர்.

---

1. விம்பிதம் - பதிதல்.
2. இது யாதனா சரீரமென்று சொல்லப்படும்.

இப்படியே பசுக்கள் கருமசாமமும் மலபாகமும் வருமளவும், அந்த அந்த உலகங்களிலே அந்த அந்த யோனிகளிலே மாறி மாறிப் பிறந்திறந்து போகம் புசிப்பர்.

யோனி - காரணம், ஆகிருதி.

## முத்தி சாதனம்.

முத்திசாதனமாவது, முத்தியை முடிக்குங் கருவியாம். தீக்ஷையும், அதற்கு அங்கமாகிய ஞானம், யோகம், கிரியை, சரியை என்பவைகளுமே முத்தி சாதனங்களாம்.

ஆன்மாவுக்குப் பாசத்தைக் கெடுத்துச் சிவத்துவத்தைக் கொடுப்பதாகிய சிவசத்திக்கிரியையே தீக்ஷை எனப்படும்.

தீ - கொடுப்பது. க்ஷை - கெடுப்பது.

ஆதிகுருவாகிய சிவனுடைய நியமப்படி குருசீடர்களாற் செய்யப்படுவனவாகிய சிற்சத்திக் கிரியையும், மனக்கிரியையும், வாக்குக்கிரியையும், சரீரக் கிரியையும், பிறவுந் தீக்ஷை வெளிப்படுதற்கு இடங்களாயிருத்தலால், உபசாரத்தினாலே தீக்ஷை என்று சொல்லப்படும்.

மலபரிபாக பேதத்தினாலே தீக்ஷை அநேக பேதமுடையதாயிருக்கும்.

ஞானமாவது, பதி பசு பாசங்களின் சுவரூபங்களை உள்ளபடியறிந்து, பாசநீக்கலின் வேட்கை[1] யுற்று அநாதிசுத்த அகண்ட பரிபூரண நித்திய வியாபக சச்சிதானந்த ரூபனாய் நின்ற நிட்களாதீத பரசிவனிடத்திலே, அறிவுத் தொழின் மாத்திரத்தாலே செய்யுஞ் சேவை.[2]

யோகமாவது, சிவனுடைய நிட்கள அரூபசரீரத்தைக்குறித்து, ஞானங்கமாகிய அகத்தொழிலினாலே செய்யுஞ் சேவை.

கிரியையாவது சிவனுடைய சகள நிட்கள ரூபாரூப சரீரத்தைக் குறித்து, ஞானங்கமாகிய அகத்தொழில் புறத்தொழில் என்னுமிரண்டினாலுஞ் செய்யுஞ் சேவை.

சரியையாவது, சிவனுடைய சகள ரூப சரீரத்தைக் குறித்து ஞானங்கமாகிய புறத்தொழிலாற் செய்யுஞ் சேவை.

சிவனுக்கு மூவித சரீரமுந் தியான பூசாதியின் பொருட்டுக் கற்பிதமாம்.

அறிவுத் தொழிலாவன, சிற்சத்தி வியாபார ரூபமாகிய நிராகார சிவபாவனை முதலியன.

---

1. பாச நீக்கத்தில் விருப்பம்.

2. ஞானமுதலிய நான்கும் சிவஞானசித்தியார் அ.கக - உஉ திருவிருத்தங்களுக்குச் சிவஞான சுவாமிகள் அருளியவாறுபற்றிக் கூறப்பட்டன.

அகத்தொழில்,—மனோ வியாபார ரூபமான சாகார சிவத்தியானம் உட்பூசை முதலியன.

புறத்தொழில்,—சரீரவியாபார ரூபமான சரீர சுத்தி, சிவசின்னதாரணம், சந்தியாவந்தனம், இலிங்க பூசை, தோத்திரம், செபம் முதலியன.

சேவையாவது, ஆன்மாக்கள் சிவனுடைய பெருமுயர்ச்சியையும், தம்முடைய பெருந்தாழ்வையும், தம்மை உயர்த்துதற்பொருட்டுச் சிவன்கொண்ட பெருங்கருணையையும் உணர்ந்து, தம்மைத் தாழ்த்துகின்ற பாசங்களை அகன்று சிவத்துவத்தை அணுக வேண்டிச், சிவவாக்கியச் சிரத்தையும் பத்தியுங் கொண்டு சிவனிடத்திற் சார்தல்.

யோகமுங் கிரியையுஞ் சரியையும் ஞானத்துக்கு ஞாபகாங்கமாம். ஞானமும் தீக்ஷைக்கு அங்கமாம். தீக்ஷையே பிரதான முத்திசாதனம்.[1]

மலபாகக் குறையினாலே தீக்ஷையிற் குறையுடையாருக்கே யோகம் முதலியன முறைமுறையே சாதனங்களாம்.

தீக்ஷையும், ஞானமும், யோகமும், கிரியையும், சரியையும் பதிபுண்ணியங்கள் எனப்படும்.

கருமநாசமும் மலபாகமும் உண்டாகியபோது சத்திநிபாதமும், மலசத்தி நிவிர்த்தியும், சம்ஸார

---

1. ஞானமொன்றே வீடுபேற்றிற்குச் சிறந்த காரணமென்பதனைச் சித்தியார் அ. உஎ-வது திருவிருத்தத்திற்குச் சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த வுரையால் அறிக.

வைராக்கியமும், சிவபத்தியும் முறையே உண்டாம். உண்டாகவே, சிவதரிசன வேட்கையுங் குருத்தேடுகையும் உண்டாம். அவ்விதப்பட்ட அதிதீவிர பக்குவனுக்குச் சிவனே குருவாகிவந்து தீக்ஷைசெய்து ஞானமுபதேசித்து முத்திகொடுப்பன். அவ்விதப்பட்ட தீவிரபக்குவர் மந்தபக்குவர் முதலியவர்களுக்கு ஏற்ற ஒரு குருமூர்த்தியை அதிட்டித்துநின்று சிவனே தீக்ஷைசெய்வன். தீக்ஷைக்குறையினாலே தீக்ஷையின் பின்பு சிவசாத்திரங்களைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்பவற்றால் அபரஞானம்பெற்று, யோகம் கிரியை சரியை என்பவைகளை ஏற்றபடி அனுட்டித்து ஏற்றபடி பதமுத்திகளையும் பரமுத்தியையும் அடைவர்.

சீடனிடத்திலே சிரத்தை, பத்தி, விநயம் முதலிய குணங்கள் இல்வழியும், குருவினிடத்திலே ஞானம், கருணை, ஆசாரம் முதலிய குணங்கள் இல்வழியும், அவரிடத்துச் சிவாதிட்டானமும், சிவானுக்கிரகமும் உண்டாதல் இல்லை.

## முத்தி

முத்தியாவது, பாச சம்பந்த துக்கத்தின் நீங்கிப் பரமசுகம் அடைந்திருத்தல்.

அந்தமுத்தியும் சாலோக்கியம், சாமீப்பியம், சாரூப்பியம், சாயுச்சியம் என நான்கு விதமாம்.

கடவுளோடு சமானலோகமுடைமையே சாலோக்கியம்.

சமீபித்திருத்தலே சாமீப்பியம்.

சமானரூபமுடைமையே சாரூப்பியம்.

கடவுளோடு ஒத்திருத்தலே சாயுச்சியம்.

இந்நான்குந் தனித்தனியே அநேகவிதமாயிருக்கும்.

சகல பாசங்களின் நீங்கி, முழுதுந் தன் சுவரூபம் அடைந்து, நிரதிசய ஆனந்தமுற்று இருத்தலே பர சாயுச்சியம் என்னும் பரமுத்தியாம். ஏனையன அபரமுத்திகளாம்.

பரிபாகத்துக்கேற்ற தீக்ஷையோடு கூடிய சரியையாற் சாலோக்கியமும், கிரியையாற் சாமீப்பியமும், யோகத்தாற் சாரூப்பியமும் ஞானத்தாற் சாயுச்சியமும் பெறப்படும்.

சைவதீக்ஷைக்கு யோக்கியரல்லாத அதி மந்ததர பக்குவர்கள், சிவனால் அதிட்டிக்கப்பட்ட அந்த அந்தக் கருத்தாக்களாற் செய்யப்பட்ட பசுசாத்திரங்களிற் கூறப்பட்ட அன்னிய சமயங்களிலே நின்று வழுவா தொழுகலினாலே தத்தமக்கு ஏற்ற பதமுத்திகளை அடைந்து, காலாந்தரத்திற் பரிபாக வசத்தாற் சைவத்திற் பிரவேசித்தே முத்தி அடைவர்.

## சைவப்பிரகாசனம்

முற்றிற்று.

---

'சிவகாமி விலாச' அச்சுக்கூடம், சென்னை.